# சங்க இலக்கியத்தில் வாயில்கள்

அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழியல் துறையில்
முனைவர் (Ph.D.) பட்டத்திற்காகப் பணிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**பா. ஆனந்தன்**
சுழல் எண்: 1725110001

நெறியாளர்
முனைவர் **கோ. பிலவேந்திரன்**
பேராசிரியர் மற்றும் தலைவர்
தமிழியல்துறை

தமிழியல்துறை




அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

அண்ணாமலை நகர் - 608 002

2022

# பொருளடக்கம்

# முன்னுரை

சங்க இலக்கியங்களில் காதலும், வீரமும் இரண்டு கண்களாகப் போற்றப்பட்டதுடன் முதன்மையான பாடுபொருளாகவும் விளங்கின. இதன் வழி சங்க கால மக்களின் பண்பாடு, பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், கொடைத்தன்மை, புலவர்களைப் போற்றும் திறன், பழந்தமிழரின் மரபுகள் முதலானவற்றையும் அறியமுடிகிறது. பழந்தமிழரின் வாழ்வியல்களில் கலையும், வீரத்தையும் அகம், புறம் என இரு பிரிவாகப் பிரித்து எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என வகைப்படுத்தினர். மேலும் திணை இலக்கியத்தைப் பற்றி காணும்போது தமிழில் தோன்றிய இலக்கிய வகைகளுள் மிகவும் பழமை வாய்ந்ததாக அமைந்துள்ளது. இவ் இலக்கியமானது நிலத்தை, அடிப்படையாகக் கொண்டுள்ளதைக் காணமுடிகிறது. நிலமும் பொழுதும், இயற்கைப் பின்னணியும் மனித வாழ்வும் இயைபுபடப் புனையப்படுவது திணை இலக்கியமாகும். நிலமும் அவற்றில் வாழும் உயிரினங்களும் ஓவியமாகப் படிந்து கிடப்பதே திணை இலக்கியமாகும்.

திணை இலக்கியத்தைப் பற்றி தொல்காப்பியம் குறிப்பிடும்போது அகம், புறம் என இரு பிரிவாக குறிப்பிடுகின்றது. அகத்திணைப் பற்றி விளக்கும் போது, களவு, கற்பு என இருபெரும் பிரிவாகப் பிரித்து இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, தோழியற் கூட்டம், தலைவன், தலைவியின் செயல்கள் மற்றும் அகத்திணையில் வாயில்களாக வருவோர்களை பற்றி ஆராயப்படுகிறது. வாயில்கள் பற்றி தொல்காப்பியர் குறிப்பிடும்போது, தலைவன் தலைவிக்கு உதவி செய்பவர்களை வாயில்கள் என்று குறிப்பிடுகிறார். குறிப்பாக தோழி, பாங்கன், பாணன், பாடினி, கூத்தர், விறலியர், அறிவர் போன்றோர் வாயில்களாகக் குறிப்பிடுகின்றார்.

தமிழர்கள் தங்களின் அக வாழ்வினை, பொன், பொருளின் மீது ஈடுபாடு இல்லாமல் மனதினை அடிப்படையாக வைத்துக்கொண்டு வாழ்ந்துள்ளனர். ஒத்த அன்புடைய தலைமக்கள் ஒருவரை ஒருவர் சந்தித்த உடனேயே கரணம் நிகழவில்லை. இருவரும் அன்பின் ஆழத்தை உணர்ந்து, கருத்துக்களைப் பறிமாறி ஒருவரை ஒருவர் புரிந்துகொண்ட பின்னரே திருமண வாழ்க்கையை மேற்கொண்டுள்ளனர்.

களவு வாழ்க்கையில் தலைவன், தலைவி, தோழி, நற்றாய், செவிலி, பாங்கன் மற்றும் கண்டோர் போன்றோரின் கூற்றுக்கள் நடைபெறுகின்றன. வாயில் கூற்றுகளில் தான் கூற வந்த செய்தியினை நேரடியாகவும், மறைமுகமாகவும் கூறுவதை காணமுடிகிறது. களவு காலங்களில் தலைவனுக்கும், தலைவிக்கும் ஏற்பட்ட சூழல்களை நாகரிகமான முறைகளில் வெளிப்படுத்துவதை காணமுடிகிறது.

மேலும் கற்பு வாழ்வில் வாயில்களைப் பற்றிக் காணும்போது, கற்பு என்பது 'கற்பிக்கப்படுதல்' என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடுகிறார். கற்பு எனப்படுவது தன்னையே முழுமையாக சார்ந்துவிட்ட கணவனின் சொல் மீறாத நிலை என்று கூறப்படுகிறது. மேலும் கற்பு என்பது உரிய ஒழுக்கமாகவும் பார்க்கப்படுகிறது.

இவ்வாறு அக இலக்கியத்தில் வாயில்கள் எவ்வாறு கூறப்பட்டுள்ளது என்பதனை இவ்ஆய்வேடு கூற முற்படுகிறது.

**ஆய்வுத் தலைப்பு**

இவ்வாய்வின் தலைப்பு **"சங்க இலக்கியத்தில் வாயில்கள்"** என்பது ஆய்வுத் தலைப்பாக அமைந்துள்ளது.

**ஆய்வு மூலம்**

1. பாாலசுப்பிரமணியன் - கு.வெ. (பதிப்பாசிரியர்), சங்க இலக்கியம் (எட்டுத்தொகை)
2. ச.வே. சுப்பிரமணியன் - சங்க இலக்கியம் (எட்டுத்தொகை)
3. மு. சண்முகம்பிள்ளை – சங்க தமிழர் வாழ்வியல் (உலக தமிழாராய்ச்சி நிறுவனம்)

என்னும் நூல்கள் இவ்வாய்வின் இவ்வாய்வு மூலங்களாக அமைந்துள்ளன.

மேலும் சங்க இலக்கிய ஆய்வுகள், வாயில்கள் பற்றிய ஆய்வுக் கட்டுரைகள், மலர்கள், ஆய்வுக்கோவைகள் இவ்வாய்வின் துணைமைச் சான்றுகளாக அமைகின்றன.

**ஆய்வு முன்னோடிகள்**

(i) க. தனலெட்சுமி, சங்க இலக்கியத்தில் பெண் வாயில்களின் ஆறுமைப் பண்புகள் (2020)

(ii) மா. அமுதா, நற்றிணையில் வாயில் மறுத்தல் (2014)

(iii) சரவணன், சங்க இலக்கியத்தில் பொருட்புலப்பாடு (2006)

**ஆய்வின் கருதுகோள்**

பண்டைய தமிழர்களின் வாழ்வியல் கூறுகளை உலகிற்கு எடுத்துரைக்கும் வரலாற்று தரவுகளாக சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன. தமிழர்கள் வாழ்வியல் முறைகளை ஆராயும் போது, அற வழியில் பொருளீட்டி இன்பமடைந்து அதன்வழி வீடுபேறு அடைந்துள்ளனர். தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் சந்தித்துக் காதல் கொள்ளும்

முறைக்கு களவு என்று பெயர். தலைவன் தலைவியிடத்து தலைவி தலைவனிடத்தும் களவு காலத்தில் தூது விடுவது மரபாகும். இதனை தொல்காப்பியர் வாயில்கள் என்று குறிப்பிடுகின்றார். இவ்வாயில்கள் களவு வாழ்விலும், கற்பு வாழ்விலும் நடைபெறுகின்றன. இதற்கு உறுதுணையாக தலைவன், தலைவி, பாங்கன், தோழி, செவிலி போன்றோர் இன்றியமையாத மாந்தர்களாக விளங்குகின்றனர். அவ்வகையில் ‘‘சங்க இலக்கியத்தில் வாயில்கள்’’ என்னும் தலைப்பில் அமைந்துள்ள இவ்வாய்வு சங்க இலக்கியத்தின் வழி வாயில்களின் அவசியம் மற்றும் வாயில்களுக்குரியோர் போன்றோர் பற்றி ஆராய்வது இவ்வாய்வின் கருதுகோளாக அமைந்துள்ளது.

## ஆய்வு நோக்கம்

தலைவன் தலைவி இருவரும் இணைந்து இல்லறம் நடத்தும்போது இடையில் பிற பெண்களால் குறுக்கீடு ஏற்படுவதுண்டு. இதனால் இருவருக்கும் சிக்கல் எழுவதுண்டு. தலைவன் மீது தலைவி ஊடல் கொள்வதும் பின்பு ஊடல் தீர்வதும் இயல்பாகும். களவிலும், கற்பிலும் தலைவன் தலைவியர்க்கு துணை நிற்பவர்களை வாயில்கள் என்று குறிப்பிடுவர்.

சங்க இலக்கியத்தில் வாயில்கள் பற்றியும், வாயில்களுக்குரியவர்களாக வரும் தலைவன், தலைவி, தோழி, பாணன், விறலி முதலானவர்கள் பற்றியும் களவு காலத்தில் வாயிலின் முக்கியத்துவம் மற்றும் கற்பு காலங்களில் வாயில்களின் இன்றியமையாததை காண்பது இவ்வாய்வின் நோக்கமாக அமைந்துள்ளது.

## ஆய்வு அணுகுமுறை

இவ் ஆய்வேடு பகுப்புமுறைத் திறனாய்வும், விளக்கமுறைத் திறனாய்வும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களில் அமைந்துள்ள அக இலக்கியங்கள் மட்டும் ஆய்வு எல்லையாக அமைந்துள்ளன.

## ஆய்வேட்டின் அமைப்பு

இவ் ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்களாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

முன்னுரை

**இயல்-1:** திணை இலக்கியப் பாகுபாடு

**இயல்-2:** வாயில்களின் நோக்கும் நெறிகளும்

**இயல்-3:** களவு வாழ்வில் வாயில்கள்

**இயல்-4:** கற்பு வாழ்வில் வாயில்கள்

முடிவுரை

துணைநூற்பட்டியல்

பின்னிணைப்புகள்

## இயல் விளக்கம்

### இயல்-1: திணை இலக்கியப் பாகுபாடு

'திணை இலக்கியப் பாகுபாடு' என்னும் இவ்வியலில் தமிழ்ச் சமூகம் என்பது நீண்ட வரலாற்றைக் கொண்டு விளங்குகிறது. தொன்மையான தமிழ்ச் சமூகத்தின் வரலாற்றை அறிந்துக் கொள்வதற்கு சங்க இலக்கியம் பயன்படுகிறது. தமிழ் இலக்கண நூல்களில் பழமையான தொல்காப்பியம் திணை வைப்புமுறைப் பற்றி பேசுகிறது. திணை வைப்பு முறைகளில்

ஒவ்வொரு இலக்கண நூல்களும் வேறுபடுகின்றன. திணை இலக்கியப் பாகுபாடு என்னும் இவ்வியலலில், திணை வைப்புமுறைகள், திணை வாழ்வியல் நிலைகள், ஐந்திணைகளின் இயல்புகள், முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் மற்றும் திணைக் கோட்பாடுகள் பற்றி இவ்வியலால் ஆராய முற்படுகிறது.

**இயல்-2: வாயில்களின் நோக்கும் நெறிகளும்**

'வாயில்களின் நோக்கும் நெறிகளும்' என்னும் இவ்வியலில், அன்பின் ஐந்திணைகளுக்கு முதன்மையானவர்கள் தலைவன், தலைவி ஆகிய இருவர் ஆவர். அவர்களுக்கு உதவி செய்பவர்களை வாயில்கள் என்பர். வாயில்களுள் உயர்ந்த வாயில்கள், ஒத்த வாயில்கள் மற்றும் தாழ்ந்த வாயில்கள் என்று கூறுவதுண்டு. எட்டுத்தொகையில் உள்ள அக நூல்களில் வாயில்கள் பற்றிய பாடல்கள் காணப்படுகின்றன. நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை போன்ற இலக்கியங்களில் வாயில்கள் மற்றும் வாயில் மறுத்தல், தோழி தலைவனுக்கு வாயில் மறுத்தல் முதலான செய்திகளை ஆராய்வதற்கு இவ்வியல் முற்படுகிறதை காணமுடிகிறது.

**இயல்-3: களவு வாழ்வில் வாயில்கள்**

'களவு வாழ்வில் வாயில்கள்' என்னும் இவ்வியலில் களவுக்குரிய இலக்கணத்தையும், களவுக் காலத்தில் வாயில்களாக வருபவர்கள் பற்றியும், தலைவன், தலைவி, பாங்கன், தோழி, செவிலி போன்றோர்களின் வாயில் செயற்பாடுகள் பற்றியும், கூறப்பட்டுள்ளது.

களவானது பிணியின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மையிராய் இருந்து தலைவனும் தலைவியும் தமக்குள்ளே கண்டு காதல் கொள்ளும் ஒழுக்கம்

களவு என்பர். மேலும் களவினை ஆரியரது எண்வகைப்பட்ட மணவகைகளுள் ஒன்றான காந்தருவத்தின் பாற்படும் என்பர். மேலும் இவ்வியலில் களவுக்குரிய கூறுகள் முதலானவற்றை அறியமுற்படுவதையும் அறிந்துகொள்ள முடிகிறது.

## இயல்-4: கற்பு வாழ்வில் வாயில்கள்

'கற்பு வாழ்வில் வாயில்கள்' என்னும் நான்காவது இயலில், கற்புக்கு இலக்கணம் கூறும்போது களவு வாழ்க்கைக்குப் பிந்தைய திருமண வாழ்வினைக் குறிப்பிடுகிறது. கற்பு என்பது 'கற்பிக்கப்படுதல்' என்ற பொருளை தருகிறது. மேலும் கற்பின் அவசியம், அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு முதலானவற்றின் தன்மையும், தோழி ஆற்றுவித்தல் முறைமையும் பொருட்வயிற் பிரிவு, தலைவியின் அன்பு, வாயில்களின் தன்மைகள், அகமரபில் வாயில்கள் பற்றியும் தலைவியின் ஊடல் தீர்க்கும் முறைப்பற்றியும் இவ்வியலில் ஆராயப்படுகிறது.

## முடிவுரை

ஒவ்வொரு இயலின் இறுதியிலும் அவ்வியலில் கண்டறியப்பட்ட முடிவுகள் தொகுப்புரையாகத் தரப்பட்டுள்ளன. இவற்றின் தொகுப்பாக முடிவுரை என்னும் பகுதி அமைந்துள்ளது.

## துணைநூற்பட்டியல்

ஆய்வில் எடுத்தாளப்பட்ட முதன்மை நூல்கள், துணைமை நூல்கள், இதழ்கள், மலர்கள், ஆய்வுக் கோவைகள் போன்றவை அகரவரிசைப்படுத்தப்பட்டுத் துணைநூற்பட்டியலாகத் தரப்படுகின்றது.

## இயல்-1

# அகத்திணை இலக்கியப் பாகுபாடு

**முன்னுரை**

பண்டைய தமிழர்களின் வாழ்வியல் கூறுகளை உலகிற்கு எடுத்துக்காட்டும் வரலாற்றுத் தரவுகளாக சங்க இலக்கியங்கள் இருந்து வருகின்றன. தமிழ்மொழியில் உள்ள அக இலக்கியங்களை நோக்கும் பொழுது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்திணைகளாகவும், புறந்திணைகளை நோக்கும்பொழுது வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, கரந்தை, நொச்சி, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை என பன்னிரண்டு திணைகளாகவும் தொகுக்கப்பட்டுள்ளன. அகத்திணைக்குரிய திணைகள் நிலத்தின் பின்னணியில் அமைந்து மக்களின் திணை சார்ந்த வாழ்வியலை எடுத்துரைக்கின்றன. சங்க இலக்கியத்தில் அமைந்துள்ள எட்டுத்தொகை நூல்களில் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய ஐந்து நூல்களும் அகம் சார்ந்த நூல்களாகும். இவை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற அடிப்படையில் அமைந்துள்ள திணை இலக்கியங்களாகும்.

தமிழ் நிலம் சார்ந்தும், தமிழ் வாழ்வியல் சார்ந்தும் சமூகம், வரலாறு முதலிய சூழல்கள் சார்ந்தும் எழுந்த படைப்புக்களைப் புரிந்துகொள்ளும் வகையில் தொல்காப்பியரின் திணைக்கோட்பாடு அறிஞர்களால் முன்மொழியப்படுகிறது. அடிப்படையில் எந்த ஒரு படைப்பும் படைப்பாளனின் உலகியல் சூழல்களைக் கொண்டும் அதற்கான எதிர்வினையாற்றும் வகையிலும் உலக வாழ்வோடு இணைந்த ஒன்றாக இல்லாமல் அந்தரத்தில்

தோன்ற வாய்ப்பில்லை. எனவே படைப்பு இயற்கைக்கும் வாழ்விற்கும் மிக நெருங்கிய மனித உறவைச் சொல்வதாக இருக்கிறது. வாசகனும் ஒரு படைப்பைப் புரிந்து கொள்வதால், தான் சார்ந்த இயற்கை, சமூகம், வாழ்க்கை, வரலாறு முதலியவற்றை உள்ளடக்கிய வெளியில் இருந்துதான் பயணிக்கிறான். படைப்பும், அவ்வாறுதான் தோற்றம் கொள்கிறது.

தொல்காப்பியரின் திணைக்கோட்பாட்டை நோக்கும்போது நிலம், சமூகவியல், வரலாறு சார்ந்த நோக்குகளை முன் வைக்கிறது என்ற கருத்து முதன்மையானதாக இருந்து வருகின்றது.

**இலக்கியம்**

இலக்கியம் என்பது சமூகப் படைப்புகளில் ஒன்றாக விளங்குகிறது. தமிழ்ச்சமூகம் என்பது நீண்ட நெடுங்கால வரலாற்றைக் கொண்டதாகும். தொன்மையான தமிழ்ச் சமூகத்தை அறிந்து கொள்வதற்கும், தமிழர்களின் விதை மரபை அறிந்து கொள்வதற்கும் முதன்மையான இலக்கியங்களாக எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் இருந்து வருகின்றன. இவை அகம், புறம் என்ற இரு நிலைகளில் மக்களின் வாழ்வியலைப் பதிவு செய்கின்றன.

‘அகம்’ என்பது மக்களின் இல்வாழ்க்கைக் கூறுகளான களவு, கற்பு நிகழ்வுகளை எடுத்து மொழிவதாக உள்ளன. அகப்பாடல்களின் தனிச்சிறப்புக்களாக குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணைகளாகப் பகுக்கப்பட்டு அவற்றை அன்பின் ஐந்திணை என்று அழைக்கப்படுகின்றன. தமிழ் இலக்கண இலக்கியங்கள் இத்திணை மரபினை இன்றளவும் பின்பற்றி வருகின்றனர். இத்திணை மரபில் திணை வைப்பு முறையும் கவனிக்கத்தக்கதாகும்.

## திணை வைப்பு முறைகள்

காலத்தால் முற்பட்ட தொல்காப்பியம் திணை வைப்புமுறையைப்பற்றி பேசுகிறது. இதற்கு பின் தோன்றிய இறையனார் அகப்பொருள், வீரசோழியம், நம்பியகப் பொருள், மாறனகப்பொருள் போன்ற இலக்கண நூல்களும் ஐந்திணைகளைப் பற்றி குறிப்பிடுகின்றன.

## தொல்காப்பியம்

ஐந்திணை வைப்பு முறைகளில் முதன்மையானது தொல்காப்பியமாகும். அத்திணையியலில் திணைகளைக் குறிப்பிடும்போது,

''கைக்கிளை முதலாய் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப''[1]

எனவரும் நூற்பாவில் கைக்கிளையை முதலாவதாகவும் ஐந்திணைகளை இடையிலும் பெருந்திணையை இறுதியாகவும் வைத்துள்ளார் தொல்காப்பியர். மேலும், ஐந்திணைகளின் நிலங்களை அடையாளப்படுத்தும் போது,

''மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே''[2]

என்னும் நூற்பாவில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற வரிசை முறை சுட்டப்பட்டுள்ளது என்று குறிப்பிடுகின்றார் தொல்காப்பியர்.

**இறையனார் களவியல் உரை**

தொல்காப்பியத்திற்கு அடுத்து அக இலக்கணம் கூறும் நூல் இறையனார் களவியல் உரை ஆகும். இந்நூல் ஐந்திணையைப் பற்றி குறிப்பிடும்போது

"அன்பின் ஐந்திணைக் களவெனப்படுவ"[3]

என்னும் நூற்பாவில், குறிஞ்சி, நெய்தல், பாலை, முல்லை, மருதம் என்று திணைகளைக் குறிப்பிடுகின்றது. நெய்தல் திணை இரண்டாவதாகக் கூறப்பட்டுள்ளது. இதன் மூலம் இறையனார் களவியனுரையிலும் திணை வைப்பு முறை பின்பற்றவில்லை என்பதை அறிய முடிகிறது.

**வீரசோழியம்**

வீரசோழியம் என்னும் இலக்கண நூல் சோழர் காலத்தில் தோன்றியது. இந்நூலின் ஆசிரியர் புத்தமித்திரர் ஆவார். தொல்காப்பியத்தைப் போலவே வீரசோழியமும் விதிமுறை இலக்கணமாகும். இந்நூலில் தமிழ் இலக்கண வருணனையும் வடமொழி இலக்கண வருணனையும் இடம்பெறுகின்றன.

இந்நூல் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணம் கொண்ட நூலாகும். திணை வைப்பு முறையைப்பற்றி ஆராயும் போது,

"முல்லை குறிஞ்சி மருதத்தொடு முதுபாலை நெய்தல்"[4]

"முல்லை குறிஞ்சி மருதத் தொடு பாலை நெய்தலைந்துஞ்
சொல்லுமகமா தேனுக்குரை தொடு சட்டகமோடு"[5]

எனவரும் நூற்பாக்களில் முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல் என்ற திணை வைப்பு முறைச் சுட்டப்பட்டுள்ளது. இதில் நெய்தல் திணையானது இறுதியாக வைக்கப்பட்டுள்ளது.

**நம்பியகப்பொருள்**

அகப்பொருள் இலக்கணத்தினை வரையறைப்படுத்தி விளக்கமாக கூறுவதால் அகப்பொருள் விளக்கம் எனப் பெயர் பெற்றது. ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்னும் நான்கு வகைக் கவிகளையும் பாட வல்ல நாற்கவிராச நம்பி என்பவரால் இந்நூல் இயற்றப்பட்டது. தொல்காப்பியரின் அகப்பொருள் இலக்கணத்தையும் சான்றோரின் இலக்கியத்தையும் தழுவி இயற்றப்பட்டது. திணை வைப்பு முறையில்,

“குறிஞ்சி பாலை முல்லை மருதம்
நெய்தல் ஐந்திணைக்கு எய்திய பெயரே”[6]

என வரும் நம்பியகப் பொருள் நூற்பாவில் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற நிலையில் திணை வைப்பு முறைக் கூறப்பட்டுள்ளது.

**சங்க இலக்கியம்**

சங்க இலக்கியங்கள் காலம் கடந்த இலக்கிய வளமையின் அடையாளமாகும். இவ்விலக்கியக் காலத்தின் களம், பிற்போக்கு நிலைமையை உணரமுடியாத, மிகவும் முந்தைய காலத்தை ஒட்டியது. சங்க காலம் சமுதாயப் பின்புலம், மனிதச் சிந்தனையைப் பல்வேறு சூழலில் வெளிப்படுத்தும் நோக்கம் கொண்டது. பண்டைய மக்களின் வாழ்வியல், ஒரு தனி மனிதனின் ஆற்றல் உணர்வாக இல்லாமல், சமுதாய உணர்ச்சியின் செயல் திறனாக இருக்கின்றது. எக்காலமும் ஏற்றுக்கொள்கின்ற சமுதாயப்

பண்பாட்டுத் தளங்களைத் திறனாய்வு நோக்கில் வெளிப்படுத்தும் பயன்பாடே மனித சமுதாயத்தின் காலதேவையாகும். இத்தேவைகளே சங்க இலக்கியத்தில் முழுமையாக கிடைக்கின்றது.

“சமூகத்தின் விளைப் பொருளான இலக்கியம், சமூகத்திலிருந்தே தோன்றுகிறது. சமூகத்தை அலசுகின்றது. சமூகத்தினைச் சித்திரிக்கின்றது. சமூகத்தைப் புரிந்து கொள்ள உதவுகின்றது. வாழ்க்கையில் பற்றினையும் நம்பிக்கையையும் ஊட்டுகின்றது.”[7]

இலக்கியம் மனிதனின் வாழ்க்கையைச் சிறப்பாக வெளிப்படுத்தும் களமாக அமைந்தால் அதுவே பண்பாட்டின் எச்சமாக சிறப்புத் தகுதியைப் பெற்று விளங்கும் என்பதை அறியலாம்.

**சங்க இலக்கியக் காலம்**

பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த வாழ்வியல் அமைப்பை அறுதியிட்டுக் கூறுவதென்பது முடியாதவொன்றாகும். ஆய்வாளர்கள் சங்க காலத்தை அனுமானத்தால் தான் கண்டு தெளிகின்றனர். சங்க காலத்திற்கு முற்பட்ட இலக்கண நூலாகத் தொல்காப்பியம் இருந்திருக்கிறது. தொல்காப்பியத்தில் காணப்படும் சில போக்குகள் சங்க காலத்தில் நன்கு நிலைப்பெற்றிருந்தன. தொல்காப்பியக் காலம் கி.மு. 2-ஆம் நூற்றாண்டாக ஆய்வாளர்களால் கணிக்கப்பெறுகின்றது.

மேலும், இலக்கிய நெறிமுறைகளைத் தோற்றுவிக்கும் முதல் நூலாகத் தொல்காப்பியம் போற்றப்படுகின்றது. தொல்காப்பியம் சங்க இலக்கியத்திற்கு முந்தையது என்பதை அதன் சொல்லமைப்புக் கொண்டே அறிய முடிகிறது. பண்டைத் தமிழ் இலக்கியக் காலத்தைச் கால கணிப்பின் வரலாறாகத் தான் பதிவு செய்ய முடிகிறது. இரண்டாயிரம் ஆண்டு பழமை

வாய்ந்த இலக்கியங்களின் காலத்தைச் சங்கம் கொண்டே ஆய்வாளர்கள் ஆராய்கின்றனர். பண்டைக் காலத்தில் தமிழ் வளர்த்த சங்கங்களாக முதல், இடை, கடை என்ற மூன்று சங்கங்கள் இருந்தன. முதல் இரண்டு சங்கங்கள் கடல்கோள்களால் அழிந்ததாக வரலாறு எடுத்துரைக்கின்றன.

“கடைச் சங்கமிருந்து தமிழாராய்ந்தவர் சிறுமேதாவியரும், சேந்தம்பூதனாரும், அறிவுடையனாரும், பெருங்குன்றூர்க்கிழாரும், இளந்திருமாறனும், மதுரையாசிரியர் நல்லந்துவனாரும், மருதனிளநாகனாரும் கணக்காயனார் மகனார் நக்கீரனாரும் என இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் (49) பாடினர் என்ப. அவருள்ளில் நானூற்று நாற்பத்தொன்பதின்மர் (449) பாடினர் என்ப. அவர்களால் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், புறநானூறும், ஐங்குறுநூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும் கூத்தும் வரியும் சிற்றிசையும், பேரிசையும் என்று இத்தொடக்கத்தன. அவருக்கு நூல் (இலக்கணம்) அகத்தியரும் தொல்காப்பியமும் என்ப”[8] என வரும் கூற்றால், சங்க இலக்கியப் படைப்பாளிகள் குறித்தும் இலக்கண நூல்கள் குறித்தும் அறியலாம்.

மேற்கூறிய செய்திகள் மூலம் அகத்தியமும், தொல்காப்பியமும் கடைச் சங்க காலத்தில் எழுதப்பட்டுள்ளன என அறிய முடிகிறது. அகத்தியம் அழிந்து போன நூல்களுள் அடங்கும். கிடைக்கப்பெற்ற இலக்கண நூல் தொல்காப்பியம் மட்டுமேயாகும். இதனால், தொல்காப்பியத்தை இலக்கண நூலாகக் கொண்டு சங்க இலக்கியங்கள் உருவாக்கப்பட்டன என ஊகிக்க முடிகிறது. இடைச் சங்க காலத்தின் இறுதியும், கடைச்சங்க காலத்தின் தொடக்கமுமாக தொல்காப்பியம் இருந்துள்ளது. தொல்காப்பியத்திற்கும், சங்க இலக்கதியத்திற்குமான கால

இடைவெளி இடைச் சங்கத்திற்கும் கடைச் சங்கத்திற்குமான இடைப்பட்ட பகுதியாகும். அதாவது தொல்காப்பியம் தோன்றி 3700 ஆண்டுகளுக்குப் பின் சங்க இலக்கியம் தோன்றியிருக்கலாம் என்று ஆய்வாளர்கள் கணக்கிடுகின்றனர்.

**சங்க இலக்கியமும் - தமிழர் வாழ்வியலும்**

சங்க கால மக்களின் வாழ்வியலைச் சங்க இலக்கியங்கள் வழி காண முடிகிறது. சங்க இலக்கியத்தில் கூறியுள்ளபடி, தமிழர் வாழ்க்கை முறையைப் பெரும்பாலும் சிறப்பாக அமைத்துக் கொண்டுள்ளனர்.

மக்கள் தாம் வாழும் இடங்களுக்கேற்ப வாழ்க்கை முறையை மாற்றி அமைத்துக் கொண்டுள்ளனர். சங்க கால மக்கள் நிலப் பாகுபாடு கொண்டு தங்களது வாழ்க்கை முறையை அமைத்து வாழ்ந்துள்ளனர். குறிப்பாக காடும் காடுச் சார்ந்த இடத்தை முல்லை என்றும், மலையும் மலை சார்ந்த இடத்தை குறிஞ்சி என்றும், வயலும் வயல் சார்ந்த இடத்தை மருதம் என்றும், கடலும் கடல் சார்ந்த இடத்தை நெய்தல் என்றும் பிரித்து அந்நிலைத்தை ஒட்டியே வாழ்ந்து வந்துள்ளனர். நிலத்தை ஒட்டி வாழ்ந்த சங்க கால மக்கள் மொழிக்கு மட்டும் இலக்கணம் வகுத்துக்கொள்ளாமல் அவர்களுடைய வாழ்க்கை முறைக்கும் இலக்கணம் வகுத்து வாழ்ந்த பெருமைக்குரியவர் ஆவர்.

தமிழர்களின் வாழ்வியல் முறைகளை ஆராயும்போது, அறவழியில் பொருளீட்டி இன்பமடைந்து அதன் வாயிலாக வீடுபேறு அடைந்துள்ளனர். பக்குவப்பட்ட நிலத்தில் விதை விதைத்தால், அவ்விதை நன்றாக முளைக்கும். அதுபோல மனிதன் நிலமாகிய தன் மனத்தை பக்குவப்படுத்தி அறமாகிய விதையை விதைத்தால், அவனது மனதில் அறம் நன்றாக வளரும். உலகில் தோன்றிய ஒவ்வொருவரும் தான் வாழும் காலத்தில்

ஒழுக்க நெறிகளை பின்பற்றிச் சமுதாயத்திற்கும், உலகிற்கும் எந்த அளவு தன்னால் உதவ முடியுமோ அந்த அளவு உதவ வேண்டும். அவ்வாறு வாழ்க்கையை அமைத்துக் கொண்டவனே உலகில் தோன்றியதற்கு அர்த்தமுடையவனாவான். இதனை வள்ளுவர்,

“தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று”[9]

என்று குறிப்பிடுகின்றார்.

ஒழுக்க நெறிமுறைகளை உலக மக்கள் ஒருங்கே பின்பற்றினால் வஞ்சனை, ஏமாற்றம், கொலை, ஏழ்மை, பொய்மை போன்றவை அறவே ஒழிந்துவிடும். ஒழுக்க நெறிமுறைகளுக்குப் பெருந்துணையாக தமிழ் இலக்கியங்கள் விளங்குகின்றன.

**திணை - வரையறை**

திணை என்ற சொல்லிற்கு குடும்பம், குடியிருப்பு போன்றவை முக்கியத்துவம் தருகின்றன. மரபு வழிப்பட்ட ஒழுக்க விதிகளைத் திணை என்று குறிப்பிடலாம்.

“ஒவ்வொரு நிலப்பகுதியையும் ஒரு குறிப்பிட்ட ஒழுக்க முறையீட்டினை தொடர்புபடுத்தும் மரபானது சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. கருத்தைக் கூறும் குறியீடாய் ‘திணை’ என்னும் சொல் விளங்குகிறது”[10] என்கிறார் க. சிவதம்பி.

மேலும், “நச்சினார்க்கினியர் திணை என்ற சொல்லை ‘ஒழுக்கம்’ அல்லது ‘நடத்தை’ என்று வகைப்படுத்திக் கூறுகின்றார்.”[11]

**தொல்காப்பியரின் அகத்திணைகள்**

அகத்திணை என்பது ‘இன்பம்’ என்னும் அகப்பொருளை மையமாகக் கொண்டு கைக்கிளை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என்று ஏழு திணைகளாக அமைக்கப்பட்டுள்ளன. ஐந்திணைகளுக்கும் முதல், கரு, உரி என முப்பொருள் பாகுபாடு கூறப்பட்டுள்ளது. ஐந்திணைகளுக்கும் அடிக்கருத்தாக உரிப்பொருள் விளங்குகிறது.

குறிப்பிட்ட ஒரு செய்யுளில் முதல், கரு, உரிப்பொருள் என்ற மூன்று பொருள்களையும் புலவர்கள் வகுத்து பண்டைய மக்களின் அகவாழ்க்கையினைச் சிறப்பித்துள்ளனர். முதற்பொருள் (நிலம், பொழுது) இல்லாமல் ஏனை இருப்பின் கருப்பொருள் (இயற்கை) திணையைக் காட்டும், உரிப்பொருள் மட்டுமே இருப்பின் வேறு பின்புல வருணனை ஏதுமில்லா நிலையில் அதுவே திணையைக் காட்டும்.

பண்டைய மக்களின் ஒழுக்க வாழ்வியலுக்கு சான்றாக சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன. அவர்களின் வாழ்வியலை சமுதாயத்தோடு அணுகும்போது திணைக் கோட்பாட்டினைக் காண முடிகிறது. ஒவ்வொரு நிலப் பகுதியையும் ஒரு குறிப்பிட்ட ஒழுக்க முறையுடன் தொடர்புபடுத்தும் மரபு சங்க இலக்கியங்களில் காண முடிகிறது. மேலும், தொல்காப்பியர் ஒரு திணையை வகுப்பதற்கு முதல், கரு, உரிப்பொருளின் பின்னணியோடு அமைந்தால்தான் அது அகப்பொருள் தரும் என்ற திணைக் கோட்பாட்டை வகுத்துள்ளார்.

**திணை வாழ்வியல்**

இயற்கை என்னும் பேரணை சிதையாமல் இயற்கைக்குள் இயற்கையாய் வாழ்ந்த சமூகம் தமிழ்ச் சமூகமாகும். ‘வடவேங்கடம் தென்

குமரி ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகம்' என்னும் தொல்காப்பியரின் கூற்றுக்கிணங்க தமிழ் நிலப்பரப்பு விரிந்து காணப்படுகிறது. இப்பெரு நிலப்பரப்பைப் பண்டைத் தமிழர்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகை நிலங்களாகப் பகுத்து, இயற்கையோடு இணைந்து வாழ்ந்த வாழ்க்கை பெரும் வியப்புக்குரியதாகும். இத்திணைகள் சங்கப் பாடல்கள் வழி இயற்கை சூழலில் வாழ்ந்த சமூகங்களைத் திணைகளோடும், காலத்தோடும் ஒருங்கிணைக்கும் செயல்பாடுகளைச் செய்துள்ளன.

சங்க காலச் சமூகம் இனக்குழு வாழ்வியலின் தொன்மை மரபும், திணை வாழ்வியலின் பரிணாமங்களையும் கொண்ட தொன்மைச் சமூகமாக விளங்குகிறது. தமிழ்ச் சமூகமானது திணை அடிப்படையிலும், தொழில் அமைப்பாலும் அமைந்துள்ளது. சங்க இலக்கியங்கள் தொல்காப்பியர் வகைப்படுத்திய திணை இலக்கியங்களின் முன் மாதிரியாக விளங்குகிறது. இயற்கையோடு இயைந்த குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகைப்பட்ட நிலவழி அமைப்பாலும் பண்பாட்டாலும் தமிழ்ச் சான்றோர்களால் எழுதப்பட்டவை திணை இலக்கியம் என்று அழைக்கப்படுகிறது.

**(i) குறிஞ்சி**

குறிஞ்சி நிலம் இயற்கை எழில் நிறைந்த மலையும் மலை சார்ந்த இடமாகும். குறிஞ்சி என்பது ஆண், பெண் இருவரும் காதலால் ஒன்றிணைவது பழங்காலத் தமிழரின் உயரிய காதல் ஒழுக்கம். குறிஞ்சி திணையில் காணப்படுகிறது. மேலும் குறிஞ்சி நில மக்களின் உயரிய காதல் ஒழுக்கத்தின் குறியீடு குறிஞ்சி மலராகும். 'குறிஞ்சி' என்பது நிலத்தையும், நில மக்களின் நாகரிகத்தையும் குறிக்கும் சொல்லாக விளங்குகிறது. கானவர்கள் என்போர் குறிஞ்சிப் பூவை விரும்பிச் சூடுவதுண்டு.

குறிஞ்சி நிலத்தினைப் புனத்தில் தினைக் கதிர்களை உண்ண வரும் கிளிகளை விரட்ட கானவர் தட்டை என்னும் கருவியால் ஒலி எழுப்புவர். தினைப்புனத்தில் எழும் தட்டை கருவி ஒலிக்கு நீர் நிறைந்த மருத நில வயல்களில் இருக்கும் நெற்கதிர்கள் இருந்தும், ஓயாத அலை வீசும் கடல் பரப்பிலிருந்தும் பறவைகள் அஞ்சி எழும், இதனை, 'நாடன் என்கோ? ஊரன் என்கோ?

''பாடு இமிழ் பனிக்கடற் சேர்ப்பன் என்கோ?
யாங்கனம் மொழிகோ, ஓங்குவாட் கோதையை?
புனவர் தட்டை புடைப்பின் அயலது
இறங்குகதிர் அலமரு கழனியும்,
பிறங்குநீர்ச் சேர்ப்பினும், புள்ஒருங்கு எழுமே''[12]

என வரும் புறநானூற்றுப் பாடல் வழி அறிய முடிகிறது.

குறிஞ்சி நில மக்கள் வீரம் பொருந்தியர்வர்களாக வாழ்ந்துள்ளனர்.

''ஆனினம் கலித்த அதர்பல கடந்து
மானினம் கலிதத மலைபின் ஒழிய
மீனினம் களித்த துறைபல நீத்தி
....................................................
கிளிமரீஇய வியன்புனத்து
மரன் அணி பெருங்குரல்''[13]

என வரும் பாடலில் குறிஞ்சி நிலத்தில் வாழும் மான், கிளி முதலான உயிரினங்களையும் இயற்கைச் சூழலையும் இயற்கைப் பாதுகாப்பையும் அறிய முடிகிறது.

**தோழியின் தூது**

நற்றிணையில் பெரும்பதுமனார் எனும் புலவர் பாடிய

“நிலம்நீர் ஆர, குன்றம் குழைப்ப,
அகல்வாய்ப் பைஞ்சுனைப் பயிர்கால் யாப்ப,
குறவர் கொன்ற குறைக்கொடி நறைப்பவர்
நறுங்காழ் ஆரம் சுற்றுவன அகைப்ப
.......................................................
இளையர்த் தரூஉம் வாடையொடு
மயங்குஇதழ் மழைக்கண் பயந்த தூதே”[14]

என வரும் பாடலால் குறிஞ்சித்திணையின் இயற்கைக் காட்சிகளைக் காணமுடிகிறது. மரம், சுனை, பயிர்களின் வளமை போன்றவை அழகாக காட்சி தருகின்றன.

குறிஞ்சி நிலத்தில் மனம் பொருந்திய கொடிகள் சந்தன மரத்தில் படர்கின்றன. அந்நிலத்தில் மேகங்கள் தென்திசை நோக்கி செல்கின்றன. இந்தச் சூழலில் தலைவன் நம்மைவிட்டு பிரியமாட்டார் என்று தோழி தலைவியிடம் தூது செல்கிறாள் என்பதை இப்பாடல் எடுத்துரைக்கின்றது.

**(ii) முல்லை**

காடும் காடு சார்ந்த இடத்தினை முல்லை நிலம் என்றழைப்பர். இவர்கள் ஆடு மாடுகள் மேய்ப்பதை முதன்மைத் தொழிலாகக் கொண்டுள்ளனர். ஆயர்-ஆய்ச்சியர் வாழும் பகுதி முல்லை என்பர். கொன்றை, காயா, குருந்தம், படவம், தளவம், முல்லை, மல்லிகை போன்ற மலர்கள் விளையும் நிலமாக முல்லை விளங்குகிறது.

“காடும் காடு சார்ந்த இடமும் ‘முல்லை’ எனப்படும். இங்குக் காடு என்பது குறிஞ்சி நிலக்காடு போன்று மரச் செறிவுடைய காடன்று ‘இளங்காடு’ என்று சொல்லத் தகும் முறையில் அமைந்த நிலப்பகுதியாகும்”[15] என்பர் மா. இராசமாணிக்கனார்.

ஐந்திணைப் புலங்களிலும், ஐந்திணை மாந்தர் சமூகத்தோடும் இணைந்து இயற்கை வாழ்வியல் வாழ்ந்த நாடோடிப் பயணிகளாக ‘பாணர்கள்’ இருந்துள்ளனர். முல்லை நில வாழ்வியலோடு பாணர்கள் நெருக்கமாக வாழ்ந்துள்ளனர். இதனை,

“புலி உற. வெறுத்த தன் வீழ் பிணை உள்ளி,
கலைநின்று விளிக்கும் கானம்ஊழ்; இறந்து
சிலைஒலி வெரீஇய செங்கண் மரைவிடை
தலைஇறும்பு கதழும் நாறுகொடிப் புறவின்
வேறுபுலம் படர்ந்த ஏறுடை இனத்த;
வளை ஆன் தீம்பால், மிளைசூழ் கோவலர்
வளையோர் உவப்பத் தருவனர் சொரிதலின்”[16]

என வரும் பாடலால், புலி பாய்ந்ததால் இறந்துபட்ட பிணையை நினைத்து அழைக்கும் கலைமான் இருக்கும் அழகிய காடாக முல்லை நிலம் விளங்குகிறது. மணம் நாறும் கொடி உடைய வேற்றுப் புலங்களில் மேய்ந்து நிரைகளில் ஏறுகளும் பசுக்களும் நிறைந்த ஆயர் வெண்ணிறப் பசுக்களின் இனிய பாலை ஆநிரைகளைக் காவல் புரியும் இடையரின், வளையணிந்த கோவலர் மகளிர் மனம் மகிழும்படி தருகின்றனர்.

**கார் பருவத்தின் தன்மை**

குறுந்தொகையில் ‘கோவூர்கிழார்’ எனும் புலவர் பாடிய பாடலில் முல்லை நிலத்தில் மழைப் பருவத்தின் உரிய பருவம் வந்தவுடன்

வலிமையான பரந்த கற்களிடையே கிடக்கும் தெளிந்த நீரில் ஆண் மான்கள் தன் துணையோடு துள்ளி விளையாடுகின்றன. இதனை,

> ‘‘வன்பரல் தெள்ளறல் பருகிற இரலைதன்
> இன்புறு துணையொடு மறுவந்து உகளத்
> தான்வந் தன்றே, தளிதரு தண்கார்
> வாராது உறையுநர் வரல்நசைஇ
> வருந்திநொந்து உறை இருந்திரோ எனவே’’[17]

என வரும் குறுந்தொகைப் பாடல் வழி உணரமுடிகிறது.

உரிய பருவம் கார்காலம் வந்தும் (அங்கே) முல்லை நிலத்தில் தங்கியிருப்பவர்கள் திரும்பி வரும் எண்ணம் இல்லாமல் அங்கேயே இருக்கின்றனர்.

**வினைமுற்றி திரும்புதல்**

தலைவன் கார் காலத்தில் வழக்கமாக வினை முற்றித் திரும்புவான். இப்போது குறித்த கார் காலத்திற்கு முன்பே திரும்பிவிட்டான். இங்கு கார்காலமாகிய பருவ காலத்தைத் தலைவன் பாராட்டி பேசுகின்றான்.

> ‘‘ஆர்குரல் எழிலி அழிதுளி சிதறிக்
> கார்தொடங் கின்றாள், காமர் புறவே;
> வீழ்தரு புதுப்புனல் ஆடுகம்
> தாழிருங் கூந்தல்! வம்மதி, விரைந்தே!’’[18]

என வரும் பாடலில் தலைவன் தலைவியைப் பார்த்து, நீண்ட கரிய கூந்தலை உடையவளே, இடிக்குரல் நிறைந்த மேகம் கருமழையைப் பெய்தமையால் கார் பருவம் தொடங்கிவிட்டது. காட்டில் உள்ள நாம் விரும்புகின்ற புதுப்புனல் வந்துவிட்டதால் சென்று நீராடுவோம். அதனால் நீ விரைந்து வருக! என்று தலைவியை அழைக்கின்றான்.

**இடையர் மகளின் இயல்பு**

ஆயர்குல மகளிர் அதிகாலைப் பொழுதில் பறவைகள் எழும்போதே, எழுந்துவிடும் தன்மைக் கொண்டவர்கள். மேலும், குடைக்காளானின் முகிழ் போலும் முகிழையுடைய உறையிட்டு இறுகிய தயிரைப் புலிபோலும் முழக்கத்தினை உடைய மத்தினால் ஆரவாரிக்கும்படி கயிற்றை வலித்துக் கடைந்து, வெண்ணெயை எடுத்தபின் மோரைப் பானையில் ஊற்றுகிறாள்.

தலையில் சுமடு வைத்து மோர்ப் பானையைத் தலையில் கொண்டு சென்று விற்கும் (ஆயர் மகள்) மோர் விற்றதனால் கிடைத்த நெல் முதலிய உணவால் சுற்றத்தாரை உண்ணச் செய்யும் இடையர் மகள். நெய் விற்ற விலைக்குக் ஈட்டிய பசும் பொன்னையும் விரும்பிக் கொள்ளாது எருமையையும், நல்ல பசுக்களையும் கன்றுகளோடு வாங்கும் இயல்பினை உடையவளாக விளங்குகிறாள். இதனை,

> ‘‘புலி கரல் மத்தம் ஒலிப்ப வாங்கி,
> ஆம்பி வான்முகை அன்ன கூம்புமுகிழ்
> உறைஅமை தீம்தயிர் கலக்கி நுரை தெரிந்து
> புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇ
> நாள்மோர் மாறும் நல்மா மேனிச்
> ........................................................
> மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பின்,
> இருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப்பு அன்ன
> பசுந் தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்’’[19]

என வரும் பாடலடிகள் வழி இடையர் மகளின் பண்பு நலன்களைக் காண முடிகிறது.

**(iii) மருதம்**

வயலும் வயல் சார்ந்த இடத்திற்கு மருதம் என்று பெயர். ஆற்றுப் பாய்ச்சல் மற்றும் ஏரிப் பாய்ச்சல் உள்ள நிலப்பகுதியை மருதம் என்றும் அழைப்பர். தமிழர்களின் வரலாற்றில் ஆநிரை, நிலவளம் என்னும் நிலையிலிருந்து சொத்து (பொன், மணி, கனிமம்) என்னும் நிலைக்கு உயர்ந்த மூன்றாம் நிலை மருதத்திணையின் தோற்றம் எனலாம்.

உழவுத் தொழில் மருத நிலத்தின் முதன்மைத் தொழிலாகும், உழவர், உழத்தியர் மருத நிலத்தின் திணைமாந்தர் ஆவர். அழகிய காஞ்சி மரங்களும், நீர் நிலைகளும் கொண்டு மருத நிலம் விளங்குகிறது. இதனை,

"புல்லரைக் காஞ்சிப் புனல்பொரு புதவின்
மெல்லவல், இருந்த ஊர்தொறும், நல்யாழ்ப்
பண்ணும் பெயர்த்தன்ன காவும் பள்ளியும்,
பல்நாள் நிற்பினம் சேந்தனிர் செலினும்,
நன் பல உடைத்து, அவன் தண்பணை நாடே"[20]

என்ற பாடலடியில் மருத நிலத்தின் தன்மையைக் காணமுடிகிறது.

மருத நிலத்தில் மருதநில மரச்சோலைகள் இருக்கும். மருத நில மக்கள் காக்கைகளுக்கு உதிரத்தோடு பிசைந்த சோற்றைப் பலியிடுவர். அக்காக்கை நொச்சி மரங்களின் நிழலிடத்துக் கிடந்த ஆமைப் பார்பினைப் பசியுண்டாகும் பொழுது தின்பதற்காகக் கூட்டில் வைத்துப் பாதுகாக்கும். மருத மரத்தில் குறிஞ்சி நிலத்துப் பெடை மயில்கள் வந்திருந்து தோகையை விரித்து ஆடும். அரிதல் தொழிலுக்கு உரிய நெல் விளைந்த கழனிகளிடத்திலும் களமர் (உழவர்) செய்யும் வேலையில் எழுந்த ஆரவார ஓசை மிகுதியால் நாரைகள் மருத நிலத்தை விட்டு அம்பு, பகன்றை, புன்கு, ஞாழல் நிறைந்த நெய்தல் நிலத்தை அடைந்து வாழும். மேலும் காட்டு

மல்லிகை, முல்லை, நீலமேனி, காயா போன்றவைகள் நிறைந்த நிலமாக முல்லைநிலம் காட்சிப்படுத்தப்படுகிறது.

**வாயில் மறுத்தல்**

மருதத்திணையில் இளங்கடுங்கோ என்னும் புலவர் பாடிய,

“அறியா மையின் அன்னைஅஞ் அஞ்சிக்
குழையன் கோதையன் குறும்பைந் தொடியன்
விழவுஅயர் துணங்கை தழூஉகஞ் செல்ல,
நெடுநிமிர் தெருவில் கைபுகு கொடுமிடை
.........................................................
நறுநுதல் அரிவை போற்றேன்,
சிறுமை பெருமையின் காணாது துணிந்தே”[21]

என வரும் பாடலில் தலைவனுக்கு வாயில் மறுத்தல் பற்றி பேசப்பட்டுள்ளது.

அன்னையே! மணம் கமழும் நெற்றியை உடைய பெண்ணே! தலைவன் காதில் கடுக்கனும், கழுத்தில் மாலையும் அணிந்து சிறிய பல வளையல்களையும் அணிந்து விழாக்காலங்களில் ‘துணங்கை’ எனும் கூத்தினை ஆடினாய். அவனை நாங்கள் எங்கள் அறியாமையால் உன்னிடத்து அச்சம் கொண்டு அவ்விழா இடத்தே கையகப்படுத்தச் சென்றோம். அவ்வணிகளோடு நீண்டு நிமிர்ந்த தெரு முடிந்த வேறொரு வழி வந்து புகுந்த வளைந்த இடத்தில் விரைந்து வந்து எம்மை எதிர்ப்பட்டான். எதிர்ப்பட்ட அவனிடம் நான் (பாணன்) கூறினேன். அவன் அறியாமை மிகுந்தவன் போல என்னிடத்து நெற்றியில் உள்ள பசலை அழகாக உள்ளது என்று கூறினான் என்று தோழி பாணனுக்கு வாயில் மறுக்கிறான்.

**தலைவன் வாயில் வேண்டிச் செல்லுதல்**

வாயில் வேண்டிச் சென்ற தலைவனுக்காக தோழி தலைவியிடம் கூறுவதாக தூங்கலோர் என்னும் புலவர் பாடிய,

'தூங்கலோரி' என்னும், பூண்டும், செரீஇயும்,
"உடுத்தும், தொடுத்தும் புறீண்டும் பெரீஇயும்,
தழைஅணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி,
விழாவொடு வருதி நீயே இஃதோ
ஏர் ஆன் வல்சிச் சீர்இல் வாழ்க்கை
பெருநலக் குறுமகள் வந்தென
இனிவிழவு ஆயிற்று என்னும்இவ் ஊரே"[22]

என வரும் மருததிணைப்பாடலானது, தலைமகனுக்கு தோழி உரைப்பதாக உள்ளது.

தலைவன் தழைகளை ஆடையாக உடுத்தியும் மாலையாக தொடுத்தும். காதணிகள் அணிந்து கொண்டும் பரத்தையர்க் கூட்டத்தில் செல்கின்றான் தலைவன் முன்பொரு காலத்தில் ஒரு பசுவை மட்டும் வைத்துக்கொண்டு குறைவான வருமானத்தில் வாழ்க்கையை மேற்கொண்டிருந்தான். ஆனால், இப்போது தலைவியால் நீராடு வாழ்க்கைப் பெற்றுள்ளான் என்று ஊர் மக்கள் பேசுகின்றனர்.

**(iv) நெய்தல்**

கடலும் கடல் சார்ந்த இடத்திற்கு நெய்தல் என்று பெயர். திணை மாந்தர்களாக பரதவர்-பரத்தியர் வாழ்ந்துள்ளனர். கடல் வாணிகம் கடல் அறிவு செழித்திருந்த காலம் நெய்தல் திணை தோன்றிய காலமாகும். மீன்

வேட்டை காரணமாகத் தலைவன் தலைவியைப் பிரிந்திருக்கும் காலம் தலைவி ஆற்றியிருத்தல் நெய்தல் ஒழுக்கமாக இருந்துள்ளது.

நெய்தல் வளம் மிக்க ஊராக பொற்பட்டினம் ஏமாற்பட்டினக் கடற்கரையில் தழை, அன்னம் போற்றி மலர்ந்திருக்கும். பொன் என்று மருளச் செய்யும் 'செருந்தி' நிறைந்து காணப்பெறும். நீலமணி என்று எண்ணுமளவிற்கு கழி முள்ளி ஒளி பொருந்தி இருக்கும். நித்திலம் போலும் அரும்புகளை உடைய புன்னை மரங்கள் செழித்து ஓங்கி வளர்ந்து காட்சி தரும். வெள்ளிய மணல் பரப்பை உடைய கடற்கரையிடத்து கடல் அலை எழுப்பும். இதனை,

"அலைநீர்த் தாழை அன்னம் பூப்பவும்
தலைநாள் செருந்தி தமனியம் மருட்டவும்,
கடுஞ்சூல் முண்டகம் கதிர்மணி கழா அலவும்
நெடுங்காற் புன்னை நித்திலம் வைப்பவும்
கானல் வெண்மணல் கடல்உலாய் நிமிர்தர
பாடல் சான்ற நெய்தல் நெடுவழி
மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய
பனிநீர்ப் படுவின் பட்டினம் படரின்"[23]

என்ற பாடலடியில் ஒட்டகம் உறங்கிக் கிடந்தாற் போன்ற கடல் அலை கொணர்ந்து ஒதுக்கிய அகில் மர விறகினால் தீ உண்டாக்கி நுளைமகள் காய்ச்சி அளித்தத் தேறலைப் பரதவர் உண்ணக் கொடுப்பர். குழலோசையின் தாளத்திற்கு ஏற்ப விறலியரோடு பாடியும் ஆடியும் மகிழும் போது பரதவர் தரும் குழல்மீன் சூட்டைப் பெறுவீர் என நெய்தல் நில காட்சியை எடுத்துரைக்கிறது.

**புன்னை மரம்**

நெய்தல் நிலத்தில் தலைவி, தோழிகளுடன் மணற் பரப்பில் விளையாடுகின்றாள். வெண்மையான மணலில் புன்னை விதையை வைத்து மணலில் அழுத்தி விளையாடுகின்றனர். அப்போது தொடர்ந்து நான்கு நாட்கள் பெய்த மழையால் ஒரு செடி முளைத்து நின்றது. இதனை,

"விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி,
மறந்தனம் துறந்த காழ்முளை அகைய,
நெய்பெய் தீம்பால் பெய்துஇனிது வளர்ப்ப
நும்மினும் சிறந்தது; நுவ்வை ஆகும்என்று,
அன்னை கூறினள், புன்னையது சிறப்பே!
அம்ம நாணுதும், நும்மொடு நகையே;
விருந்தின் பாணர் விளர்இசை கடுப்ப,
வலம்புரி வான்கோடு நரலும் இலங்குநீர்த்
துறைகெழு கொண்க! நீ நல்கின்,
இறைபடு நீழல் பிறவுமார் உளவே!"[24]

என்ற பாடலில், தலைவி தோழியுடன் மணலில் அழுத்தி விளையாடிய புன்னை விதையானது, புன்னைச் செடியாகிவிட்டது. தாயானவள் அப்புன்னைச் செடியை எடுத்து வளர்த்து வந்தாள். நாளடைவில் அது மரமாக வளர்ந்தது. தாயானவள் அதனை தனது முதல் மகளாக வளர்த்து வந்தாள். அப்போது தலைவன் அப்புன்னை மரத்தின் அடியில் காதலைச் சொல்ல முயன்றபோது, தலைவி நாம் வேறு மர நிழலுக்குச் செல்வோம் இங்கு என் தமக்கை (புன்னை மரம்) நிற்கின்றாள். அதனால் உம்மோடு பேசுவதற்கு எனக்கு வெட்கமாக உள்ளது என்று தலைவி கூறுவதாக நெய்தல் நிலப்பாடல் அமைந்துள்ளது.

**பரதவ மகளிரின் அழகு**

'ஆரியவரசன் யாழ்ப்பிரமதத்தன்' என்னும் புலவர் பாடிய நெய்தல் பாடலில் பரதவ மகளிரின் அழகு காட்சிப்படுத்தப்பட்டது.

"அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கு இல்லை;
குறுகல் ஓம்புமின் சிறுகுடிச் செலவே;
இதற்குஇது மாண்டது என்னாது அதற்பட்டு,
ஆண்டுஒழிந் தன்றே, மாண்தகை நெஞ்சம்;
மயிற்கண் அன்ன மாண்முடிப் பாவை
நுண்வலைப் பரதவர் மடமகள்
கண்வலைப் படூஉம் கான லானே"[25]

என வரும் பாடலில், பரதவ மகளிரின் அழகு காட்சியை, மயில் தோகையில் உள்ள கண்களைப் போன்றும், நுண்ணிய வலைகளைக் கொண்ட இளமையான கண்களும் பார்த்து தலைவனின் நெஞ்சம் அங்கேயே தங்கிவிட்டது. எனவே, தாம் அறிந்த ஒன்றை இல்லை எனப் பொய்ச்சான்று சொல்வது பண்புடையவரிடம் இல்லை. எனவே யாராக இருப்பினும் அச்சிற்றூர்க்குச் செல்லுதலைத் தவிருங்கள் என்கின்றனர்.

**தலைவனின் நட்பு**

அம்மூவனார் பாடிய,

"நெய்தல் இருங்கழி நெய்தல் நீக்கி,
மீன்உண் குருகஇனம் கானல் அல்கும்
கடல்அணிந் தன்று, அவர் ஊரே;
கடலினும் பெரிதெமக்கு அவரடை நட்பே"[26]

நெய்தல் நிலத்தில் உள்ள பெருங்கழியில் உள்ள நெய்தல் மலரை நீக்கி அருகில் உள்ள மீனைக் கொத்தி உண்ணும் கொக்கு கடற்கரைச் சோலையில் தங்கும். கடற்கரைச் சோலை கடலுக்கு அழகைத் தந்தது. அந்த ஊரினை உடைய தலைவனின் நட்பானது எமக்கு கடலைவிடப் பெரியது என்கிறாள்.

**(v) பாலை**

மணலும் மணல் சார்ந்த இடமும் பாலை நிலமாகும். இந்நிலத்தில் எயினர் இனம் வாழ்ந்து வருகின்றனர். தமிழர்-ஆரியர் சிந்து சமவெளியில் போரின் காரணமாக உருவான வறுமைத்துயர் உற்ற தமிழர் பொருள் தேடல், போர் காரணங்களால் தமிழ்த்தேசம் கடந்து செல்லும் நிலை நேர்ந்தது.

**எயினர் குடில்**

நீள் அடி உடைய இலவமரம் காய் முதிர்ந்து விரிந்து பஞ்சு போல வரியையும் ஆற்றின் மணலை ஒத்த முதுகையும், கொழுவிய மடலையும், வேல் போல நுனி பொருந்திய ஈந்தின் இலையால் வேயப்பட்ட, பன்றியின் முதுகு போன்ற புறத்தினை உடைய குடிலாக உள்ளது. இதனை,

"நீள் அரை இலவத்து அலங்குசினை பயந்த
பூளைஅம் பசுங்காய் புடைவிரிந் தன்ன
வரிப்புற அணிலொடு கருப்பை ஆடாது
யாற்றுஅறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்
வேல்தலை அன்ன வைந்நுதி, நெடுந்தகர்
ஈத்துஇலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை"[27]

எயிற்றியர் குடிலில் குழந்தையை ஈன்ற எயிற்றி மான் தோல் படுக்கையில் படுத்து கிடக்கிறாள். வெண்ணிற பற்கள் கொண்ட எயிற்றியர் பூண் கட்டிய கோலின் முனையில் உளிபோலும் வாயை உடைய பாறைக் கற்களால் ஆன கருவியால் நிலத்தைக் குத்திக்கிளறி புழுதியை நீக்கி எறும்பின் புற்று கொண்டு வந்த பல்லரிசியை உலக்கையால் குற்றுவர்.

**பிரிவினை உணர்த்திய தலைமகள்**

'நற்சேந்தனார்' என்னும் புலவர் பாடிய பாடலில் பிரிவின் தன்மையைக் காண முடிகிறது.

> "விண்தோய் சிமைய விறல்வரைக் கவாஅன்
> வெண்தேர் ஓடும் கடம்காய் மருங்கில்
> துனைஎரி பரந்த துன்அரும் வியன்காட்டுச்
> சிறுகண் யானை நெடுங்கை நீட்டி
> ...........................................................
> சுரம்செல விரும்பினிர் ஆயின் - இன்நகை
> முருந்துஎனத் திரண்ட முள்எயிற்றுத் துவர்வாய்
> குவளை நாள்மலர் புரையும் உண்கண், இம்
> மதிஏர் வான் நுதல் புலம்ப
> பதிபெயர்ந்து உறைதல் ஒல்லுமோ நுமக்கே?"[28]

தலைவன் செல்லும் பாலை நிலமானது, காட்டில் நெருப்பும், கானல் நீரும் உள்ளது. அங்குள்ள யானை தாகத்தின் காரணமாக நீர் கிடைக்குமா என்று துதிக்கையை நீட்டி காத்திருந்தது. பாலை நிலம் என்பதால் அங்கு மழை பெய்யவில்லை. அதனால் வேறு இடத்திற்குச் சென்றது. அவ்வழியில் செல்லும்போது நடுகற்களும் வழிப்பறி கொள்ளையராகிய வேடர்களும்

திருடுவதற்கு திடீரென வழிமறிப்பதுண்டு. அத்தகைய பாலை நில வழியைக் கடந்து செல்ல நீ விரும்புகின்றீர்.

எம் தலைவியானவள் மயில் இறகின் அடிபோன்ற பற்களையும், சிவந்த வாயையும், குவளை மலர்போன்ற கண்களையும், பிறை போன்ற நெற்றியையும் உடையவளை விட்டு நீ பிரிந்து செல்வது பொருந்துமா? என்கிறாள் தோழி.

குறுந்தொகையில், 'காவல் முல்லைப்பதனார்' என்னும் புலவர் பாடிய பாடலில் தலைவனின் பிரிவுப் பற்றி கூறப்பட்டுள்ளது.

> "அம்ம வாழி, தோழி! காதலர்,
> நூல்அறு முத்தின் தண்சிதர் உறைப்ப,
> தாளித் தண்பவர் நாள் ஆ மேயும்
> பனிபடு நாளே, பிரிந்தனர்;
> பிரியும் நாளும் பலஆ குபவே"[29]

தலைவன் தலைவியை விட்டு பிரிந்து செல்லும்போது வழியில், முத்து மாலையில் நூலறிந்து முத்துக்கள் சிதறுவது போலக் குளிர்ந்த பனி சிதறல்கள் துளிகளாகப் பொருந்தியிருக்கும். தாள அறுகுக் கொடியை விடியற் காலையில் பசுக்கள் மேயும் அத்தகைய பனிக்காலத்தில் தலைவர் பிரிந்து சென்றார். பிரிந்து சென்ற நாட்களும் பல நாட்களைக் கடந்துவிட்டன. இன்னும் வரவில்லை என்று தலைவி கூறுகிறாள்.

**திணையும் பொருளும்**

தமிழர்களின் தனிச்சிறப்பில் திணை முக்கிய இடத்தினைப் பெறுகின்றது. ஒவ்வொரு திணைக்கும் மூன்று வகைப்பொருள் உண்டு.

அவை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்பனவாகும். ஐந்திணைகளின் இந்தப் பொருள் கொள்ளும் முறை குறியீட்டுப் பண்பை அடிப்படையாகக் கொண்டு கட்டமைக்கப்பட்டுள்ளது.

**அகத்திணை**

தமிழர்கள் வாழ்க்கையின் கட்டமைப்பை அகம், புறம் என பிரித்துள்ளனர். இலக்கியத்திற்கு இலக்கணம் வகுத்தது தொல்காப்பியமும் பிற இலக்கண நூல்களும் ஆகும். சங்க கால புலவர்கள் புறவாழ்க்கைக்குத் தேவையான போர், வீரம், கொடை, செல்வம் என அனைத்து செய்திகளையும் கூறியவர்கள் அகவாழ்க்கை சிறப்புடன் அமையவும் அகம் சார்ந்த பாடல்களை இயற்றியுள்ளனர். எனவே, தான் அக்காலக் கட்டத்தில் புற இலக்கியங்களைக் காட்டிலும், அக இலக்கியங்களே அதிகம் எழக்காரணமாகும். அகம் சார்ந்த கருத்துக்கள் மனித வாழ்க்கைக்கு மிகவும் முக்கியமான ஒன்றாக அமைந்துள்ளது.

அகத்திணையைத் தொல்காப்பியர் கைக்கிளை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று எழுதிணைகளாகப் பகுத்துக் கூறுகிறார். இவற்றுள் குறிஞ்சி முதல் பாலை ஈறாக ஐந்து திணைகளும் ஐந்திணை என்று பகுதியாக வழங்கப்பெறுகிறது. இப்பிரிவுக்கு அடிப்படை காரணமாக கைக்கிளை, ஒருதலைக்காமம், மற்றும் ஐந்திணையை ஒத்த காமம் என்றும், பெருந்திணையை ஒவ்வாக் காமம் என்றும் உரையாசிரியர்கள் குறிப்பிடுவர்.

அகத்திணையை ஆராயும்பொழுது பல்வேறு காதல் கூறுகள் தமிழகத்தின் பல்வேறு நிலக்கூறுகளின் அடிப்படையில் எழுந்தவை என்ற ஒரு கோட்பாட்டினை எழுப்புவர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு திணைகட்கு இயல்நிலம் இல்லையாயினும் முன்னர்க் காட்டப்பெற்ற திரிநிலம் உண்டு என்று சிலம்பு தெளிவுப்படுத்துகிறது. இங்ஙனம் பாலைக்கு

ஒரு வகையான நிலம் உண்டென்று கொண்டாலும், கைக்கிளை, பெருந்திணைகட்கு எவ்வாற்றானும் நிலம் இல்லை என்பது நூல் முடிவு. எனவே ஏழுதிணை என்ற அகப்பிரிவு நிலத்தினை அடிப்படையாகக் கொண்டெழுந்தது என்ற கோட்பாடும் பொருந்தாது என்பது அறியப்படுகிறது.

திணை ஏழென்பதற்கு உண்மையான காரணம் எழுவகைக் காதல் ஒழுக்கங்களே என்று வ.சுப. மாணிக்கம் குறிப்பிடுகிறார். இவ்வொழுக்கங்களைத் தனிநிலை உரிப்பொருள் என்று குறிப்பிடுவர். மேலும், இவ்வொழுக்கங்கள் தனிநிலை கொண்டவை என்றும், தம்முள் தொடர்பு வேண்டி நில்லாதவை என்பது நினையத்தக்கதாகும். மேலும், சங்கப் பாடல்களில் முல்லைக் கருப்பொருள்களைச் சிறிதும் கூறாமல் உரிப்பொருள் மட்டும் கூறும் அகபொருள் பல உள்ளன என்பதை எடுத்துக்காட்டியும் அப்பாடல்கள் குறிஞ்சித்திணை எனச் செவ்விதின் பெயர் பெற்றிருப்பதைச் சுட்டிக் காட்டியும் தம் கொள்கைக்கு அரண் அமைத்துக் கொள்வதுண்டு.

இதன் மூலம் அகத்திணை என்பது காதலர்களின் கைக்கிளை, புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல், பெருந்திணை என்னும் காம ஒழுக்கங்களை அடிப்படையாகக் கொண்டது என்பது தெளிவாகிறது. மேலும், அகத்திணைக் காட்டும் காதற்பாங்கு தனித்துவம் கொண்டது. மனித சமுதாயம் முழுவதையும் நோக்கும் தன்மை உடையது. இறைமையுடைய இக்காதற்பாங்கு சாதி, சமய. அரசு. மொழி, நாடு. தொழில் செல்வம் என்ப போன்ற புறச்சார்பின்றி இயங்குவது! இரண்டு உயிர்மெய்களின் ஒருமையைக் காணும் பெற்றதாகலின் இது மக்களைப் பிரிந்த அனைவருக்கும் உடையதாகும்.

**நில முதற்பொருள்**

தமிழர்களின் வரலாறு, நாகரிகம், பண்பாடு போன்றவற்றை அறிந்து கொள்வதற்கு தமிழ் இலக்கியங்கள் பெரும் துணைபுரிகின்றன.

பழந்தமிழர்கள் அகம் காதலைப் பற்றியும், புறம் தொடர்பான வீரத்தைப் பற்றியும், குறிக்குமென்ற பொருள் கொண்டு அதன் அடிப்படையிலேயே இலக்கியங்களைப் படைத்துள்ளனர்.

திணை என்பது ஒழுக்கம் என்னும் கருத்தினடிப்படையில் அவ்வொழுக்கக் கூறுகள் நிகழும் இடங்கள் முதற்பொருள் எனப்படும். நிலமும் - காலமும் முதற்பொருள் என்று குறிப்பிடுவதுண்டு. கருப்பொருளும், உரிப்பொருளும் தோன்றுவதற்கு அடிப்படையாக முதற்பொருள் விளங்குகின்றன. இவ்வுலகத்துப் பொருட்களையெல்லாம் முதல்-கரு-உரி என்னும் மூன்றனுள் அடக்கிவிடலாம்.

குறிஞ்சி - மலையும் மலை சார்ந்த இடம்

முல்லை - காடும் காடு சார்ந்த இடம்

மருதம் - வயலும் வயல் சார்ந்த இடம்

நெய்தல் - கடலும் கடல் சார்ந்த இடம்

பாலை - மணலும் மணல் சாரா்ந்த இடம்

**பொழுது**

பொழுது என்பது காலத்தைக் குறிக்கின்றது. இதனை சிறுபொழுது, பெரும்பொழுது என்று இருவகைப்படுத்துவர். சிறுபொழுது என்பது ஒரு நாளின் கூறுபாடுகள் பற்றி குறிப்பிடுகிறது.

**சிறுபொழுது**

1. வைகறை - இரவு 2 மணி முதல் காலை 6 மணி வரை
2. காலை - காலை 6 மணி முதல் முற்பகல் 10 மணி வரை

3. நண்பகல் - முற்பகல் 10 மணி முதல் பிற்பகல் 2 மணி வரை

4. மாலை - மாலை 6 மணி முதல் இரவ 10 மணி வரை

5. எற்பாடு - பிற்பகல் 2 மணி முதல் மாலை 6 மணி வரை

6. யாமம் - இரவு 10 மணி முதல் நள்ளிரவு 2 மணி வரை

**பெரும்பொழுது**

பெரும்பொழுது என்பது ஒரு ஆண்டின் கூறுபாடுகளை உள்ளடக்கியது.

கார் - ஆவணி, புரட்டாசி

கூதிர் - ஐப்பசி, கார்த்திகை

முன்பனி - மார்கழி, தை

பின்பனி - மாசி, பங்குனி

இளவேனில் - சித்திரை, வைகாசி

முதுவேனில் - ஆனி, ஆடி

**ஐந்து நிலத்திற்குரிய பெரும்பொழுதும் சிறுபொழுதும்**

| எண். | நிலம் | பெரும்பொழுது | சிறுபொழுது |
|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | குளிர்காலமும் முன் பனிக்காலமும் | யாமம் |
| 2. | முல்லை | கார்காலம் | மாலை |
| 3. | மருதம் | பெரும்பொழுது ஆறும் | வைகறை |
| 4. | நெய்தல் | பெரும்பொழுது ஆறும் | எற்பாடு |
| 5. | பாலை | இளவேனில், முதுவேனில் | நண்பகல் |

**கருப்பொருள்**

| | குறிஞ்சி | முல்லை | மருதம் | நெய்தல் | பாலை |
|---|---|---|---|---|---|
| **தெய்வம்** | முருகன் | திருமால் | இந்திரன் | வருணன் | கொற்றவை |
| **மக்கள்** | வெற்பன் குறவர் குறத்தியர் | தோன்றல் ஆயர் ஆய்ச்சியர் | ஊரன் உழவன் உழத்தியர் | சேர்ப்பன் பரதர் பரத்தியர் | எயினர் எயிற்றியர் |
| **உணவு** | மலைநெல் திணை | வரகு சாமை | செந்நெல் வெண்ணெய் | மீன் உப்புக்கு பெற்ற பொருள் | சூறையாடலால் வரும் பொருள் |
| **விலங்கு** | புலி, கரடி, சிங்கம் | முயல் மான் | எருமை, நீர் நாய் | முதலை சுறா | வலியிழந்த யானை, புலி |
| **பூ** | குறிஞ்சி, காந்தள் | முல்லை, தோன்றி | செங்கழுநீர் தாமரை | தாழை நெய்தல் | குரவம் பாதிரி |
| **மரம்** | அகில் வேங்கை | கொன்றை | காஞ்சி, மருதம் | புன்னை ஞாழல் | இரப்பை பாலை |
| **பறவை** | கிளி மயில் | காட்டுக் கோழி மயில் | நாரை, நீர்க்கோழி, அன்னம் | கடற்காகம் | புறா பருந்து |
| **ஊர்** | சிறுகுடி | பாடி, சேரி | பேரூர் மூதூர் | பட்டினம் பாக்கம் | குறும்பு |
| **நீர்** | அருவி சுனைநீர் | காட்டாறு | மனைக் கிணறு, பொய்கை | மணற்கிணறு உவர்க்கழி | வற்றிய சுனை கிணறு |
| **பறை** | தொண்டகம் | ஏறுகோட்பறை | மனமுழா நெல்லரி கிணை | மீன் கோட்பறை | துடி |
| **யாழ்** | குறிஞ்சி யாழ் | முல்லை யாழ் | மருத யாழ் | விளரி யாழ் | பாலையாழ் |
| **பண்** | குறிஞ்சிப் பண் | சாதாப்பண் | மருதப் பண் | செவ்வழிப் பண் | பஞ்சுரப் பண் |
| **தொழில்** | தேன் எடுத்தல் கிழங்கு அகழ்தல் | ஏறு தழுதத்தல் நிரை மேய்த்தல் | நெல்லரிதல் களை பறித்தல் | மீன் பிடித்தல் உப்பு விளைவித்தல் | வழிப்பறி நிரை கவர்தல் |

**உரிப்பொருள்**

மக்கள் நிகழ்த்தும் ஒழுக்கத்திற்கு உரிப்பொருள் என்று பெயர். முதல்பொருளும் கருப்பொருளும் இன்றி பாடல் அமையலாம். ஆனால் உரிப்பொருள் இன்றி பாடல் அமையாது. மேலும் உரிப்பொருள் என்பவை அகப்பொருளுக்குரிய பொருள்களாகும். இதனை தொல்காப்பியர்,

"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங் காலைத் திணைக்குரியப் பொருளே"[30]

என்று குறிப்பிடுகிறார்.

| | |
|---|---|
| குறிஞ்சி | - புணர்தலும் புணர்தல் நிமித்தமும் |
| முல்லை | - இருத்தலும் இருத்தல் நிமித்தமும் |
| மருதம் | - ஊடலிலும் ஊடல் நிமித்தமும் |
| நெய்தல் | - இரங்கலும் இரங்கல் நிமித்தமும் |
| பாலை | - பிரிதலும் பிரிதல் நிமித்தமும் |

அகத்திணைச் சேர்ந்த பாடல் இன்ன திணையைச் சார்ந்தது எனத் தெரிவிப்பது உரிப்பொருளே ஆகும்.

புலவன் தான் கூறக் கருதிய பொருண்மையை இன்பமும், துன்பமும், புணர்தலும், பிரிதலும், ஒழுக்கமும் எனப்பட்ட இவை வழுவாத நெறியில் இத்திணைக்கு உரிய பொருள் இது என்று சொல்லப்படாமல் பொதுவாய் நிற்பதற்கு 'பொருள்' என்று குறிப்பிடுகின்றார்.

"தொடர்பினு ளியன்ற சொல்லின் முற்றாய்
பொருளிட ஏறமற் றுதற்கியைந் ததோர்சொற்
குறிப்புயித் துமுற்றுப் பதுவே பொருள் வகை"[31]

என்று மாறனகப் பொருள் குறிப்பிடுகிறது.

சங்க இலக்கியங்கள் மூலம் மக்களின் வாழ்வியலை அறிய முடிகிறது. மக்கள் தங்களின் சூழலுக்கேற்ற வகையில் முதல், கரு, உரிப் பொருள்களை வகுத்து திணைகளாகப் பகுத்து திணைகள் மரபுகளை முறைப்படுத்தி வாழ்ந்துள்ளனர். இதன் வழி

"சூழ்நிலைக்கேற்பவே வாழ்க்கை அமைகிறது என்ற கருத்தைச் சங்க காலம் நன்கு விளக்குகிறது"[32] என்கிறார் வேலுப்பிள்ளை.

மக்கள் தங்கள் வாழ்க்கை முறையை வடிவமைத்துக் கொள்ளவும், சீர்படுத்திக் கொள்ளவும், திணைகள் காரணமாய் இருந்திருக்கின்றன. இதனை,

"முதற்பொருள், கருப்பொருள், பாகுபாடு அகத்திணையியலில் கூறப்பட்டிருந்தாலும் புறத்திணைக்கும் அவை பொதுவானவையே. இவற்றைப் புறத்திணை வாழ்வோடும் இணைத்து ஆராய வேண்டும். இந்த முதல் - கருப்பொருள்களின் அடிப்படையில் காதலையும், போரையும் பொதுவான வாழ்க்கை நடைமுறைகளையும் இணைத்து ஆராய வேண்டும்"[33] என்கிறார் பெ. மாதையன்.

**திணைக்கோட்பாடு**

தமிழ்நிலம் சார்ந்தும், தமிழர் வாழ்வியல் சார்ந்தும் சமூகம், வரலாறு முதலிய சூழல்கள் சார்ந்தும் தொல்காப்பியரின் திணைக் கோட்பாடு அமைந்துள்ளது. அடிப்படையில் எந்த ஒரு படைப்பும் படைப்பாளனின் உலகியல் சூழல்களைக் கொண்டும் அதற்கான எதிர்வினையாற்றும் வகையிலும் உலகியல் வாழ்வியலோடு இணைந்த ஒன்றாக இல்லாமல் வெறுமையாக தோன்ற வாய்ப்பில்லை. எனவே, படைப்பானது இயற்கைக்கும் வாழ்வியலுக்கும் மிக நெருங்கிய மனித உறவைக் சொல்வதாக இருக்கிறது.

வாசகனும் ஒரு படைப்பைப் புரிந்துகொள்வதில் தான் சா்ந்த இயற்கை, சமூகம், வாழ்க்கை, வரலாறு முதலியவற்றை உள்ளடக்கிதான் பயணிக்கிறான். படைப்பும் அவ்வாறுதான் தோற்றம் கொள்கிறது.

தொல்காப்பியரின் திணைக்கோட்பாடு பற்றி ஆராயும்போது, நிலம், காலம், சமூகம், வாழ்க்கை, மனித உணா்வு (முதல்-கரு-உரிப்பொருள்) போன்றவை ஒன்றொடொன்று இணைந்து கவிதையாக்கக் கூறுகளை உள்ளடக்கியதாக காணப்படுகின்றது. எந்த ஒரு படைப்பின் அடிப்படைக் கூறுகளும் திணையை வைத்து இயங்குவதைக் காண முடிகிறது.

தொல்காப்பியா் மக்களின் வாழ்க்கையை அகம் புறம் என இரண்டாகப் பகுத்துள்ளாா். மேலும், திணை என்பதற்கு ஒழுக்கம், நிலம் என்று பொருள் தருகிறாா். நிலத்தை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்தாகப் பிரித்து இதனை அகன் ஐந்திணை என்கிறாா்.

தொல்காப்பியரின் திணைக் கோட்பாடு மக்களின் அக ஒழுக்கம் ஏழினையும், புற ஒழுக்கம் ஏழினையும் பாடுபொருளாகக் கொண்டு அமைந்துள்ளது. ஒரு படைப்பானது நில அமைப்பு, சமூக அமைப்பு பண்பாட்டுக் கூறுகளுடன் பொதுத்தன்மையோடு தோன்றுகிறது.

‘‘நாம் இவ்வுலகினைக் கூா்ந்து நோக்குவோமானால் அங்கு நிகழும் செயல்கள் யாவும் உயிா்களின் செயல்களாகவே காணப் பெறுகின்றன. உயிா்களின் செயல்கள் யாவும் அவ்வுயிா்களின் உணாச்சிகளைக் கவ்விக் கிடக்கின்றன. உயிா்களின் உணா்ச்சிகள் மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளின் வாயிலாக ஐந்து வகைப்பட்டு நிகழும் என்பதை நாம் அறிவோம். அவை முறையே ஊறு, சுவை. ஒளி, நாற்றம், ஓசை என்பனவாம். இவ்வுணா்ச்சிகளும் முறையே மண், புனல், தீ. காற்று, வான் என்னும் ஐவகைப்பட்ட புறப்பொருள்களையும் பற்றியே நிகழும் என்பதை ஊகித்து

அறியலாம். உயிர்கட்குப் புலனாகும் புறப்பொருள்கள் யாவும் இந்த ஐந்து வகைகட்குள் அடங்கும்"[34] என்கிறார் ந. சுப்புரெட்டியார்.

தமிழரின் திணை வரலாறு என்பது ஒரே காலத்தில் உருவானதல்ல. ஒவ்வொரு திணையும் பல ஆண்டுகளாக பருவகால மாற்றத்தினால் உருவானது என்று குறிப்பிடலாம். பண்டைய தமிழர்களின் ஒழுக்க முறைகளுக்கு சங்க இலக்கியம் சான்றாக விளங்குகின்றன.

சான்றாக குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் பல்லாயிரம் ஆண்டுகளாக வாழ்ந்திருக்க வேண்டும். ஆநிரைகளை அவன் சேகரித்து அவற்றை தன் உடமையாகக் கொண்டு வளர்க்கத் தொடங்கிய காலத்திற்குப் பின்னரே புதிய மேய்ச்சல் நிலம் தேடி, முல்லை நிலத்திற்கு குடிபெயர்ந்திருக்க வேண்டும்.

முல்லை நிலத்தில் வேளாண்மைத் தொழிலை அவன் அறிந்து, சிறுகச் சிறுகக் காடுகளை வயல்களாக மக்கள் மாற்றிய பின்னரே 'மருதம்' என்ற புதிய நிலம் உருவாகியிருக்க வேண்டும். தொடக்கக் காலத்தில் அம்மக்கள் வாழ்ந்து பழகிய குறிஞ்சியும், முல்லையும் வறட்சியுற்ற சூழலில் பழகிய இடத்தைப் பிரிய மனமின்றியே அவன் பாலை நிலத்தில் வாழும் வாழ்க்கையில் ஒன்றியிருந்திருக்க வேண்டும்.

இவ்வாறு வாழ்க்கைத் தேவை காரணமாக மனிதன் ஒவ்வொரு வாழ்க்கையையும் பெற்றுள்ளான் என்பதை இதன் வழி அறிய முடிகிறது.

**திணை மயக்கம்**

முதற்பொருள் நிலம் தவிர்த்த காலமாகிய முதற்பொருளும், கருப்பொருளும், உரிப்பொருளும் தத்தமக்குரிய திணையோடு கூடி வருதலன்றி மற்ற திணைகளோடும் சேர்ந்து வரும். இதனை திணை மயக்கம் என்பர்.

திணை மயக்கம் பற்றி அகராதி குறிப்பிடுகையில், ‘‘ஒரு நிலத்துக்குரிய காலம், உரிப்பொருள், கருப்பொருள் மற்ற நிலத்துக்குரிய அகப்பொருளுடன் கலந்துவரப் பாடலமைக்கலாம் என்றும் அகம், புறம் என்ற திணைகளும் ஒன்றோடொன்று மயங்கி வரும் என்றும்’’[35] கூறுகிறது.

மேலும், திணை மயக்கம் பற்றித் தமிழ் இலக்கணப் பேரகராதி கூறுகையில்,

‘‘ஒரு நிலத்துச் செய்தி மற்றொரு நிலத்துச் செய்தியோடு கலந்து வருதல், ஒரு நிலத்தின்கண் இரண்டு உரிப்பொருள் மயங்கி வருதலும் மற்றோர் உரிப்பொருள் நிற்றற்கரிய இடத்து ஓர் உரிப்பொருள் வந்து மயங்குதலும் ஒரு காலம் நிற்றற்குரிய இடத்து மற்றோர் காலம் வந்து மயங்குதலும் அவ்வந்நிலங்களுக்குரிய முதலும் கருவும் வந்து உரிப்பொருள் மயங்குதல் போல்வன திணை மயக்கமாம். ஆகவே, முதற்பொருட்களுள் காலம் இரண்டு மயங்கினும் நிலம் இரண்டு மயங்குதல் கூடாது என்பது’’[36] என்கிறது.

**தொல்காப்பியரின் - திணை மயக்கம்**

திணை மயக்கம் பற்றித் தொல்காப்பியர் குறிப்பிடுகையில், உரிப்பொருள் அல்லாத பிற பொருட்கள் மயங்கி வரும் என்கிறார். இதனை,

‘‘உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே’’[37]

என்ற நூற்பாவின் வழி அறிய முடிகிறது.

உரிப்பொருள் அல்லாத பிற மயங்கி வரும் என்று கூறிய தொல்காப்பியர் முதற்பொருள் நிலம் தவிர்த்து காலம் மயங்கி வரும் என்றும் கருப்பொருளுள் பூ, புள் முதலியவை மயங்கி வரும் என்றும் கூறுகின்றார். இதனை,

''திணைமயக் குறுதலும் கடிநிலை இலவே
நலன் ஒருங்கு மயங்குதல் இல்லென மொழிப
புலன் நன்கு உணர்ந்த புலமை யோரே''[38]

என்றும்,

''எந்நில மருங்கின் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா ஆயினும்
வந்த நிலத்தின் பயத்த ஆகும்''[39]

என வரும் நூற்பாவழி அறிய முடிகிறது.

உரிப்பொருள் மயக்கம் என்பது தொல்காப்பியருக்கு உடன்பாடன்று, ஏனெனில் மயக்கம் பற்றிக் கூறுகின்ற மூன்றிடங்களிலும் (நூற்பா. 14,15,21) பிற மயக்கங்களை வெளிப்படையாகக் கூறிய தொல்காப்பியர் உரிப்பொருள் மயக்கத்தைக் குறிப்பாகவும் கூறாது விட்டது ஆய்வுக்குரியது.

**திணை மயக்கம்**

குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்று வழங்கப்படும் ஐந்திணைகளுக்கும் கூறப்படும் அ்.றிணை உயிர்கள், தத்தமக்கு உரிய திணைகளோடு மட்டுமல்லாது பிற திணைகளோடு மயங்கி வரும்.

பறவைகள், விலங்குகள் வேறொரு இடத்திற்கு இரை தேடிச் செல்லும் இயல்பு வாய்ந்தவை. எனவே, இவை ஒரு திணைக்கு உரியதாக மட்டுமின்றி, பிற திணைகளில் மயங்கி வரும். இதனை,

''எந்நில மருங்கின் பூவும் புள்ளும்
.......................................................
வந்த நிலத்தின் பயத்தவாகும்''[40]

என்ற தொல்காப்பிய நூற்பாவில், பூவும், புள்ளும் மயங்கி வரும் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

பூவும் புள்ளும் மயங்கி வரும் என்று தொல்காப்பியர் வெளிப்படையாகக் கூறியமையால் 'குருகு' என்ற நெய்தல் நிலப் பறவை, குறிஞ்சி, மருதம் நிலங்களில் மயங்கி வருவதைக் காணமுடிகிறது.

களவு காலத்தில் இன்புற்ற தலைவன் தன்னை வரைந்து கொள்வதற்குக் குறித்த காலத்தில் வராமையால், மனம் நொந்த தலைவி, தன் தோழிக்குத் தன் நிலையைக் கூறுகிறாள். அவ்வாறு கூறும்போது,

> "தினைத்தாள் அன்ன சிறுபசுங் கால
> ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
> குருகும் உண்டு, தான்மணந்த ஞான்றே"[41]

என வரும் குறுந்தொகை குறிஞ்சித் திணைப் பாடலில், "குருகு' என்னும் பறவை ஓடிவரும் நீரில் நீந்தி வரும் ஆரல் மீனையே பார்த்திருப்பதாக கூறப்பட்டுள்ளது.

'குருகு' என்பது மருத நிலத்தைச் சார்ந்ததாகக் கூறியிருந்த போதிலும், சங்க பாடல்களில் குருகு நெய்தல் நிலத்தைச் சார்ந்த பறவையாகவே கூறப்பட்டுள்ளது.

டாக்டர் உ.வே.சா. குறுந்தொகை ஆராய்ச்சி உரையில் குருகு நெய்தல் நிலத்தைச் சார்ந்த பறவை என்று குறிப்பிடுகிறார். இவ்வாறு இருந்த போதிலும், ஒரு சில பாடல்களில் குருகு மருத நிலம் சார்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது. (அகம். 176, அகம் 226, நற்.70) இதனை,

> "இரைதேர் வெண்குருகு அஞ்சி"[42]

‘‘வெண்குருகு ஒப்பும்’’[43]

‘‘சிறுவெள்ளாங் குருகே! சிறுவெள்ளாங் குருகே!
துறைபோகு அறுவைத் தூமடி அன்ன
நிறம்கிளர் தூவிச் சிறுவெள்ளாங் குருகே’’[44]

என வரும் பாடல் வரிகள் மூலம் அறிய முடிகிறது.

அன்னப்பறவை மருத நிலம் மற்றும் நெய்தல் நிலம் சார்ந்தும் கூறப்பட்டிருந்தாலும், குறிஞ்சி, முல்லை நிலத்தைச் சார்ந்தும் கூறப்பட்டுள்ளது. நற்றி. 356, குறுந்.300 ஆகிய பாடல்கள் முறையே குறிஞ்சி, முல்லை நிலம் சார்ந்து அன்னப் பறவையைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. இதனை,

‘‘நிலம்தாழ் மருங்கின் தென்கடல் மேய்ந்த
விலங்குமென் தூவிச் செங்கால் அன்னம்
பொன்படு நெடுங்கோட்டு இமயத்து உச்சி’’[45]

போன்ற அடிகள் மூலம் காணமுடிகிறது. மேலும்,

‘‘குறுங்கால் அன்னம் குவவுமணல் சேக்கும்’’[46]

என வரும் பாடலடியும்

‘‘துறைவிட் டன்ன தூமயிர் எகினம்
துணையொடு திளைக்கும் காப்புடை வரைப்பில்’’[47]

என வரும் அகநானூற்றின் பாடலடிகளை நோக்கும்போது நெய்தல் நிலத்தையே காட்சிப்படுத்துகிறது.

குறிஞ்சிப்பாட்டு புணர்ச்சியைக் கூறும், முல்லைப்பாட்டு இருத்தலைப் பாடும், மருதப்பாட்டு ஊடலை இயம்பும், நெய்தல் பாட்டு இரங்கிக் கலங்கும், பாலைப்பாட்டு பிரிவைப் புலம்பும், அவற்றுள் மயங்குதல் இல்லை. எனவேதான் இளம்பூரணர் உரிப்பொருள் மயங்கி வராது என்று குறிப்பிட்டார்.

வயல்களில் வெண்ணெல்லை அறியும் உழவர்களின் பறையடிக்குப் பயந்த நாரை நெய்தல் நிலத்திலுள்ள பனை மரத்தின் பெரிய மடலிலே சென்று தங்கும் என நெய்தல் மருத நிலத்திற்கிடையேயுள்ள திணை மயக்கத்தினை,

> ‘‘வெண்ணெல் அரிநர் பின்றைத் ததும்பும்
>
> தண்ணுமை வெரீஇய நடந்தாள் நாரை
>
> ......................................................................
>
> அகமடல் சேர்க்கும் துறைவன்’’[48]

என்ற பாடலில் திணை மயங்கி வந்துள்ளதைக் காண முடிகிறது.

**கூற்று மரபுகள்**

மக்களிடையே பல மரபுகள் பின்பற்றப்பட்டு வருகின்றன. அவற்றுள் கூற்று மரபு குறிப்பிடத்தக்க ஒன்றாகும். கூற்று அல்லது பேச்சு என்பது மனிதனால் மட்டுமே நிகழ்த்தக்கூடிய ஒன்றாகும். கூற்று, சூழலை அடிப்படையாகக் கொண்டது. சூழலுக்கேற்ப கூற்றின் தன்மையும், பொருளும் வேறுபடும். கூற்றும் சூழலும் ஒன்றொடொன்று தொடர்புடையது. சங்கப்பாடல்களில் தலைவன், தலைவி ஆகிய இருவரையும் மையப்படுத்தியே அக வாழ்க்கை பின்னப்பட்டுள்ளது. இவர்களைச் சுற்றியே கூற்றுகள் இடம்பெற்றுள்ளன. அகப்பாடலுள் அகத்திணை நிகழ்ச்சியைக் கூறுவதற்காகவே மாந்தர்கள் பலர் படைக்கப்பட்டுள்ளனர். அவர்கள் கூறுவதாகவே அந்நிகழ்ச்சிப் பாடப்பெற வேண்டும். கூறுவதைக்

கேட்பதற்கென்றும் மாந்தர் பலர் படைக்கப்பட்டுள்ளனர். கூற்று என்பது அகப்பாட்டின் அமைப்புக் கூறுகளில் மிக அடிப்படையானது. ஒன்றினைக் கூறுவதற்குரிய தகுதியுடையோர் அதனைக் கேட்பதற்குரிய மரபுடையோரிடம் கூறும் செய்தி, இடம், காலம், கூறும் முறை முதலானவைகளுக்குட்பட்டு நேரிடையாக அல்லது மறைமுகமாக உணர்த்துவது கூற்று எனலாம்.

சங்க இலக்கியமும், தொல்காப்பியமும் அகப்பொருள் பற்றிப் பேசுகின்றது. அகத்திணை - அகவாழ்க்கை - புறத்திணை - புறவாழ்க்கை, பொருள் - அகம், புறம் எனும் இருபொதுப்பாகுப்பாட்டில் அமைந்துள்ளது.

**கூற்று விளக்கம்**

'கூற்று' எனும் சொல் 'பேச்சு, உரையாடல், எடுத்துரைப்பு, மொழிதல் என்ற சொற்களால் கருத்து வெளிப்பாட்டு முறை என்ற ஒரு பொருளிலேயே அறிஞர்களால் பயன்படுத்தப்பட்டுள்ளன. கூற்றானது பொருள் பொதிந்ததாக அமைக்கப்பட வேண்டும். இதனை தொல்காப்பியர்,

> ''மரபுநிலை திரியா மாட்சிய ஆகி
> விரவும் பொருளும் விரவும் என்ப''[49]

என்று பொருள் விரவி வருவதை இந்நூற்பா வழி காண முடிகிறது.

> ''அகத்திணை மரபுகள் திரியாத நிலையில் அதற்குச் சிறப்புத் தரும் நிலையில் மாந்தர் கூற்றுள் பொருள்கள் விரவி வருதலும் உண்டு''[50]

ஒருவர் நிகழ்த்தும் கூற்றானது எந்தச் சூழ்நிலையில் யார், யாருக்கு இடையே நிகழ்த்தப்பட வேண்டும் கூற்று நிகழ்த்துவோர் என்ன தகுதி

பெற்றவராய் இருக்க வேண்டும். கூற்றினைக் கேட்பவர் என்னென்ன தகுதி உடையவராய் இருக்க வேண்டும் என்பன போன்ற விதிமுறைகளைத் தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் எடுத்துரைத்துள்ளார்.

தொல்காப்பியம் புறத்திணைகளில் வரும் நிகழ்வு ஒவ்வொன்றையும் ‘துறை’ என்னும் பொதுப்பெயரால் குறிப்பிடுகின்றது. அகத்திணையில் வரும் பல்வேறு கூறுகளையும் ‘கூற்று’ என்று குறிப்பிடுகிறது. அகப்பாடற் செய்திகள் அனைத்தும் அகத்திணை மாந்தர்களின் பேச்சுக்களாகவே இருப்பதால் அவை கூற்று என்னும் பெயரினைப் பெற்றுள்ளன. செய்யுளியலில் செய்யுள் உறுப்புக்களைச் சுட்டும் தொல்காப்பியர்,

> ‘‘திணையே கைக்கொள் கூற்று வகையெனாஅ
> கேட்போர் களனே கால வகையெனாஅ’’[51]

என்பதில் கூற்று கேட்போர் வகையைக் குறிப்பிடுகின்றார். கூற்று என்பதற்குப் பேராசிரியர் சுந்தரமூர்த்தி ‘‘கூற்று வகையென்பது அச்செய்யுள் கேட்டாரை இது சொல்லுகின்றார் இன்னாரென உணர்வித்தல்’’ (இராணி. ந. சங்க இலக்கிய தொகுப்பு நெறிமுறைகள் ப.57) எனக் குறிப்பிடுகின்றார்.

**கூற்றுக்குரியவர்கள்**

1. தலைவன், 2. தலைவி, 3. தோழி, 4. கண்டோர், 5. பாணன், 6. உழையர், 7. பரத்தை, 8. தாய், 9. செவிலித்தாய்.

‘‘ஒரு சமுதாயத்தார் சிறந்த நாகரிகமும், பண்பாடும் பெற்றுச் சிறந்து வாழ்ந்தனர் எனில், அதன் அடிப்படை அவர்களுடைய குடும்ப (அக) வாழ்விலே தான் காணப்பெறும். வீட்டில் நல்வாழ்வைப் பெறாத சமுதாயம் வெளியில் சிறந்த வாழ்வைப் பெறுதல் என்பது வேரில்லாத மரம் தழைத்தது

என்பது போலத்தான். எனவே பழந்தமிழர் நாகரிகத்தின் ஆணிவேராய் விளங்கியது அகவாழ்வு"[52] என்பர் டாக்டர். அ.ச. ஞாசம்பந்தன்.

மரபு

தொன்றுதொட்டு மக்களால் பின்பற்றப்பட்ட நடைமுறை பழக்க வழக்கங்கள் மக்கள் மத்தியிலே நிலைத்த இடங்களைப் பெற்றுவிட்டன. இதனை மரபு என்ற கட்டமைப்புக்குள் கொண்டு வர முடிகிறது. பழக்கம், வழக்கம், மரபு என்ற சொற்கள் ஒன்றோடொன்று தொடர்புடையன. பழக்கம் என்பது தனி மனிதனைச் சார்ந்ததாகும். வழக்கம் என்பது சமுதாயத்தைச் சார்ந்ததாகும். மரபு சமுதாயம் கட்டுப்பாடு வழி நடத்தப்படும் விதி எனக் கூறலாம். எனவே, பழக்கம் என்பதைத் தொடக்க நிலையாகவும், மரபு என்பதைப் பண்பாட்டின் முதிர் நிலையாகவும் கொள்ளலாம்.

"மரபு என்பது பழக்க வழக்கங்களின் அடிப்படையில் ஒரு தலைமுறையில் இருந்து மற்றொரு தலைமுறைக்கு மாற்றப்படுவதாகவும் கொள்ளலாம்"[53] என்கிறது ஆக்ஸ்போர்டு அகராதி.

"மரபு என்னும் சொல் பல பொருளைத் தருவது அதனை எளிமையாகப் பெற முடியாது. கடினப் பயிற்சியால் மட்டுமே பெற முடியும்"[54] என்று விளக்குகிறார் எலியம்.

மரபு மாறக்கூடாது என அறிவுறுத்துகிறார் தொல்காப்பியர். ஏனெனில் அந்தந்த காலத்து நிலவி வரும் மரபைத் தனி ஒருவன் மீறுதல் அல்லது மாற்றுதல் குழப்பத்தைத் தருவதாகும். மரபுகள் தாமே,

"கடிசொல் இல்லை காலத்து படினே"[55]

என்ற வகையில் மாறும் பொழுது அவற்றை இலக்கியம் ஏற்க வேண்டும் என்பர் அறிஞர். மரபானது மக்கள் மாற்றம் ஏற்பதைப் பொறுத்துச் சிறுகச் சிறுகவே நிகழும். சொல்லும், பொருளும், நடையும், உடையும் மாறும்போது உயர்ந்தோர் அவற்றை ஒப்புக் கொள்ளும் போது முறைமைகள் மரபுகள் உருவாகின்றன. இதனை தொல்காப்பியர்,

> ‘‘மாற்றருஞ் சிறப்பின் மரபியல்’’[56]

என மரபியலுக்குத் தோற்றுவாய் செய்துள்ளார். தனிச்சையாகத் தனி மனிதனால் மாற்றுதற்குரியதும், உயர்ந்தோர் ஏற்றுக்கொள்வதும் மரபாகும்.

**தலைவன் கூற்று**

தலைவன் என்பவன் கல்வி, அறிவு, ஒழுக்கம் போன்றவற்றில் சிறந்தவனாக இருக்க வேண்டும். வழிவழியே வரும் உயர்குடியில் பிறந்தவனாக இருப்பான். பெருஞ்செல்வத்தினை உடையவனாகவும் இருப்பான். தலைவனும் தலைவியும் ஓருயிர் ஈருடல் போல உடையவர்கள் ஆவர். இதனைத் தொல்காப்பியர்,

> ‘‘ஒன்றே வேறே என்று இரு பால்வயின்
> ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்’’[57]

என்று எடுத்தியம்புகிறார்.

‘மகன்’ என்ற சொல் வெறும் ஆண் மகனை மட்டும் குறிக்கும் சொல் அல்ல. நல்லூழின் பெருக்கால் எய்தலாகும். அனைத்து உயர்வுகளும் ஒருங்கு வாய்க்கப்பெற்ற பெருந்தகையை மட்டும் குறிப்பிடும் சொல் ஆகும். இத்தகைய தலைவனின் இலக்கணத்தை,

“பெருமையும் உரனும் ஆடூஉ மேன”[58]

என்று குறிப்பிடுகின்றார்.

**தோழிக்கு உணர்த்துதல்**

தலைவன் இயற்கைப் புணர்ச்சி முடிந்த நிலையில் தலைவியும் தோழியும் இருக்கும் இடத்திற்குச் செல்கின்றான் பெரிய மலையை அரணாக உடைய உனது சிறிய வாழிடம் - எங்குள்ளது? என வினவுகிறான். மேகம் இடியோசையோடு மழையைப் பெய்து அதனால் செழித்து வளர்ந்த சிவந்த நிறம் பொருந்திய கதிர்களை உடைய இத்திணைப்புனம் நம்முடையது தானே இதையாது சொல்லுங்கள் எனக் கேட்கின்றான். இதற்குத் தலைவியும் தோழியும் விடையளிக்கவில்லை. இதனை,

“பெருங்கல் வேலிச் சிறுகுடி யாது என,
சொல்லவும் சொல்லீராயின் கல்லெனக்
கருவி மாமழை வீழ்ந்தென எழுந்த
செங்கேழ் ஆடிய செழுங்குரற் சிறுதினைக்
கொய்புனம் காவலும் நுமதோ?
கோடேந்து அல்குல் நீள்தோ ளீரே”[59]

என வரும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

குறுந்தொகையில் ‘மாங்குடிகிழார்’ எனும் புலவர் பாடிய,

“உரைத்திசின் தோழி யது புரைத்தோ அன்றே
அருந்துயர் உழத்தலும் ஆற்றாம் அதன்தலைப்
பெரும்பிறி தாகல் அதனினும் அஞ்சுதும்
அன்னோ இன்னும் நன்மலை நாடன்

பிரியா நண்பினர், இருவரும் என்னும்
அலரதற்கு அஞ்சினன் சொல்லோ? பலருடன்
துஞ்சூர் யாமத் தானுமென்
நெஞ்சத் தல்லது வரவறி யானே!’’[60]

பிரிவால் துயரம் அடைந்து அதைப் பொறுக்கும் ஆற்றல் எனக்கு இல்லை. அதன் விளைவாக இறக்க நேரிட்டால் அதற்காக மிகவும் அஞ்சுகின்றேன். அந்தோ நம் மலை நாடனாம் தலைவன் இவர்கள் இருவரும் பிரியாத காதலர் என ஊரார் கூறும் பழிச் சொல்லிற்கு அஞ்சினரோ, பலரும் ஊரில் ஒருங்கே நன்கு உறங்கும் நள்ளிரவிலும் என் நெஞ்சத்து நினைவில் வருதலின்றி நேராக வர மறந்தனன் அச்செயல் உயர்வுடையதாகுமோ நீயே கூறுவாயாக என்கிறான் தலைவன்.

**தலைவிகூற்று**

அகத்திணைகளில் தலைவியானவள் முதன்மையான இடத்தினைப் பெறுகின்றாள். தலைவியைக் குறித்துத் தொல்காப்பியர்,

‘‘கற்பும் காமமும் நாற்பால் ஒழுக்கமும்
மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்து புறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்’’[61]

என வரும் நூற்பாவில் தலைவிக்கு உரிய குணங்கள் பற்றி குறிப்பிடுகின்றார்.

கற்பு என்பது கணவன் முதலியோர் கற்பித்த நிலையில் திரியாத நல்லொழுக்கமாகும்.

அகப்பொருள் நூல்களில் தலை மகள் பன்னீராட்டைப் பிராயத்தளாய்க் குறிக்கப் பெறுவாள்.

பெண்களுக்குரியவையாக அச்சம், மடம், நாண், பயிர்ப்பு என்பவற்றை குணங்களாகக் குறிப்பிடுவதுண்டு.

கற்பு காலத்தில் தலைமகள் கணவனைப் பிரிந்திருக்கும் காலங்களில் மக்கள், சுற்றமும் முதலானவர்களைப் பாதுகாக்கும் கடமையிலிருந்து தவறமாட்டாள். தலைவன் தரும் பலவிதத் துன்பங்களையும் பொறுத்திருக்கும் குணமுடையவள் ஆவாள்.

**பிரிவிடை ஆற்றாள்**

தலைவனைப் பிரிந்த தலைவி, வேங்கை மரத்தின் கீழ் சிறுவர்கள் பசுங்கன்றுங்களை மேய்க்கின்றனர். அச்சிறுவர்கள் வேங்கை மரத்தில் ஏறாமலேயே பூக்கள் உதிர்வதற்காகப் புலி புலி என்று கூச்சலிட்டனர். அவர்கள் போடும் சத்தமானது விண்ணளவில் உள்ள மலைப் பிளவுகளில் எதிரொலிக்கின்றது. இதனை,

“யாம்எம் காமம் தாங்கவும், தாம்தம்
கெழுதகை மையின் அழுதன தோழி!
கன்றுஆற்றுப் படுத்த புன்தலைச் சிறா அர்
மன்ற வேங்கை மலர்பபதம் நோக்கி,
ஏறாது இட்ட ஏமப் பூசல்
விண்தோய் விடரகத்து இயம்பும்
குன்ற நாடற் கண்டஎம் கண்ணே”[62]

என வரும் பாடலடியில் தலைவனைத் தலைவி பிரிந்தமையால் அவளுடைய கண்கள் தாமே அழுகின்றன.

**தலைவி-தோழிக்குக் கூறியது**

சிறிய தினைக் கதிர்களை அறுத்த பின்பு கீழே உள்ள வெண்மையான தட்டைகளில் அவரைச் செடி வளர்ந்து காய்கள் காய்த்துள்ளன. அவற்றைத் திண்ண கிளிகள் வருகின்றன. அந்த கிளிகளை ஓட்டுவதற்கு இடனான புதிய வருவாய்களை உடைய நல்ல மலைநாடன் ஒரு குற்றம் செய்ய விரும்பினான் போலும், அதனால் மாந்தளிர் போன்ற என் மேனி அழகு தடுமாறும் என்று தலைவி தோழிக்குச் சொல்லுகிறாள். இதனை,

''சிறுதினை கொய்த இருவி வெண்கால்
காய்த்த அவரைப் படுகிளி கடியும்
யாணர் ஆகிய நன்மலை நாடன்
புகர் இன்று நயந்தனன் போலும்;
கவரும் தோழி! என் மாமைக் கவினே''[63]

என வரும் ஐங்குறுநூற்றின் பாடல் வழி தலைவி தோழிக்கு இடையே உள்ள உறவினைக் காணமுடிகிறது.

**செவிலி**

தலைவியின் வளர்ப்பு தாய்க்கு செவிலித்தாய் என்று பெயர். தலைவிக்கு உயிர்த் தோழியாக இருப்பவளை ஈன்ற தாயாவாள். இவள் தலைவியிடம் பேரன்பு கொண்டவளாக விளங்குகிறாள். தலைவிக்கு உணவு முதலியன கொடுத்து அவளைப் பாதுகாக்குகின்றாள். தலைவி தலைவனுடன் உடன் போக்கு காலத்து வருந்தி அவளைத் தேடிச் செல்லுவாள். காட்டில் எதிரில் வரக்கூடிய அந்தணர், கண்டோர் ஆகியவர்களிடம் தன் மகளைப் பற்றி வினவுவாள். இதனைத் தொல்காப்பியர்,

"ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாய் எனப் படுவோள் செவிலி யாகும்"[64]

என்று குறிப்பிடுகின்றார்.

**செவிலி - கண்டோர்க்கு சொல்லியது**

தலைவியானவள் பாலைநில வழியே நெடுந்தூரம் செல்கின்றாள். அவளைத் தேடி செவிலியானவள் கண்டோர்களிடம் அவளின் தோற்றம் பற்றி எடுத்துக்கூறி அவளைப் பார்த்தீர்களா என்று கேட்கிறாள் இதனை,

"சேயின் வரூஉம் மதவலி! யாஉயர்ந்து
ஓமை நீடிய கான்இடை அத்தம்,
முன்றாள் உம்பர்க் கழிந்த என்மகள்
கண்பட, நீர்ஆழ்ந் தன்றே; தந்தை
தன்ஊர் இடவயின் தொழுவேன்; நுண்பல்
காடு ஏந்து அல்குல் அரும்பிய திதலை
…...........................................................
தந்தை தன்ஊர் இதுவே
ஈன்றேன் யானே பொலிகநும் பெயரே"[65]

என வரும் பாடலில், தலைவியின் தோற்றத்தை எடுத்துக் கூறும்போது, உடலில் ஆங்காங்கு தேமலும், ஒளி பொருந்திய பற்களும் உடையவள். மேலும், தொடுத்த மலர்களைத் தலையில் சூடியும் கைகளில் சிறு வளையல்களை அணிந்து கொண்டும் நீண்ட கூந்தலையும் உடையவள் ஆவாள். நீண்ட வலிமை மிக்க கைகளையும், வில்லினையும், அம்பினையும் வளமைமிக்க கன்னினையும் கொண்ட அவளது தந்தை ஊர் இது. நான் அத்தலைவியை ஈன்ற தாயாவேன். உம்மை நான் தொழுது

வணங்குகின்றேன். என் நிலைக்கண்டு அவளை நீங்கள் எதிரே கண்டால் என்னைப் பற்றி கூறுங்கள் அது உங்களுக்கு புகழினைத் தரும் என்று செவிலித்தாய் கண்டோரிடம் கூறுவதாக அமைந்துள்ளது.

'வெள்ளிவீதியார்' என்னும் புலவர் பாடிய,

''காலே பரிதப் பினவே; கண்ணே
நோக்கி நோக்கி வாள் இழந் தனவே;
அகல்இரு விசும்பின் மீனினும்
பலரே மன்ற, இவ் உலகத்துப் பிறரே''[66]

என வரும் பாடலில், செவிலித்தாய் தலைவியைத் தேடி அலைந்து திரிகின்றாள். அப்போது, அவளுடைய கால்கள் நடப்பதற்கு அடி எடுத்து வைக்க முடியாமல் தவழ்கின்றன. ஆண்களை இவள் பார்க்கும் போது இவள் தலைவியின் காதலனோ எனக் கருதி இவளின் கண்கள் ஒளி இழக்கின்றன. வானில் நட்சத்திரக் கூட்டம் இருப்பது போல பலர் இருக்கின்றனர்.

## தோழி

தலைவன் தலைவியின் காதல் வாழ்க்கையில் தோழி பெரும் பங்கு வகிக்கிறாள். தலைவிக்கும் தோழிக்கும் இடையே உள்ள நட்புரிமையைத் தலைவனுக்கும் பாங்கனுக்கும் இடையேயும் காண முடியாது. தலைவியினுடைய செயல்கள் யாவற்றையும் இவள் அறிவாள்.

''தோழி தானே செவிலி மகளே''[67]

என்ற தொல்காப்பிய நூற்பாவின்படி செவிலித்தாயின் மகளாகக் கருதப்பெறும் இவளுடைய பேச்சுக்கள் அகப்பொருள் பாடல்களின் சுவையை மிகுதிப்படுத்தும் தன்மையனவாக இருக்கும்.

தோழி எந்த இடத்தில் எப்படிப்பட்ட சூழல்களில் கூற்று நிகழ்த்துபவள் என்பதை,

"நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பினும் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி யெதிர்ப்பா டுள்ளுறுத்து வருஉம்
..................................................................................
ஆங்கதன் தன்மையின் வன்புறை உளப்படப்
பாங்கற வந்த நாலெட்டு வகையும்
தாங்கருஞ் சிறப்பின் தோழி மேன"[68]

தலைவியின் புணர்ச்சியினை அறிய மெய்யாகவும், பொய்யாகவும் பேசுகின்ற இடத்திலும், களவைத் தடுத்துத் திருமணத்திற்கு தூண்டுகின்ற இடத்திலும் வெறியாடல் போதும், அறத்தோடு நிற்றலிலும், தலைவனை வரைவு கடாத இடத்திலும் தலைவியை ஆற்றுவிக்கும் இடத்திலும் தோழியின் கூற்றுகள் நிகழ்கிறன.

**இரவுக்குறி மறுத்தல்**

தலைவன் தலைவியை சந்திக்கும்பொருட்டு இரவு நேரங்களில் வருவதைத் தலைவி விரும்பவில்லை. எனவே பகல் நேரங்களில் வந்து எங்களைப் பார்ப்பாயாக என்கிறாள். இதனை,

"நீயே, அடிஅறிந்து ஒதுங்கா ஆர்இருள் வந்துஎம்
கடியுடை வியல்நகர்க் காவல் நீவியும்
பேர்அன் பினையே பெருங்கல் நாட!
யாமே நின்னும்நின் மலையும் பாடி, பல்நாள்
சிறுதினை காக்குவம் சேறும், அதனால்,
..............................................................
ஆடுமழை இறுத்ததுஎம் கோடுஉயர் குன்றே"[69]

என வரும் பாடலில், தலைவன் இரவு நேரங்களில் வருவதால் தலைவி துன்பமடைகின்றாள். நாணல் புற்கள் மிகுதியாக வளர்ந்த அடர்ந்த மலைப் பக்கத்தில் சிறுகுழியில் கள்ளை மிகுதியாக உண்ணும் ஆடவர்கள் இருக்கின்றனர். அவர்கள் மிகுந்த சினம் கொள்பவர் ஆவர். மேகக் கூட்டங்கள் மலையின் உச்சிப் பகுதியில் வந்து தங்கியுள்ளது. அதனால் நீ என்னை பார்ப்பதற்கு இரவில் வரவேண்டாம் என்கிறாள்.

**நற்றாய்**

நற்றாய் என்பவள் தலைவியைப் பெற்றெடுத்த தாய் ஆவாள். தன் மகளது களவொழுக்கத்தைச் செவிலியின் மூலம் தான் அறிவாள். தலைவியின் உடலில் ஏற்படும் மாற்றத்தைக் கண்டு இவளும் செவிலித்தாயும் வெறியாடும் வேலன் கட்டுவிச்சி முதலியவர்களைக் கண்டு அவ்வேறுபாடுகளின் காரணத்தை ஆராய்வாள். இவள் காரணத்தை வெளிப்படையாகக் அறிந்து கொண்டாலும், வெளிக்காட்டமாட்டாள்.

**நற்றாய் வருந்துதல்**

இனி சந்த நாகனர் என்னும் புலவர் பாடிய,

"மிளகுபெய் தனைய சவைய புன்காய்
உலறுதலை உகாஅய்ச் சிதர்சிதர்ந்து உண்ட
புலம்புகொள் நெடுஞ்சினை ஏறி நினைந்துதன்
பொறிகிளர் எருத்தம் வெறிபட மறுகி
.................................................................
மாண்நலம் கையறக் கலுழும் என்
மாயக் குறுமகள் மலர்ஏர் கண்ணே"[70]

என வரும் பாடலில் பாலை நிலத்தில் தலைவனுடன் தலைவி செல்லும்போது, வெப்பம் கொண்ட புழுதி மிக்க வழியில் செல்கிறாள்.

இருப்பினும் தான் அணிந்த மாலை, சிறிய வலையல்கள் நெகிழ்ந்தாலும் அடிவயிற்றின் மேல் அணிந்துள்ள காஞ்சி மாலையின் காசுகள் மாறினாலும் தனது அழகு குறையாதவளாய்த் திருத்திக் கொள்கிறாள். மலர் போன்ற கண்கள், வெம்மைக் காலத்தில் காட்டுவழியில் செல்வதால் தலைவியை நினைத்து நற்றாய் வருந்துவதாக இப்பாடல் உள்ளது.

### தொகுப்புரை

சங்க இலக்கியங்ககள் வழி தமிழர்களின் வாழ்வியலை அறிய முடிகிறது. தமிழ் மொழியில் உள்ள அக இலக்கியங்களை நோக்கும்போது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என திணை வகுத்துக்கொண்டு அமைத்துள்ளனர். இலக்கியம் என்பது சமூகப் படைப்புக்களில் முக்கியமானதாக விளங்குகிறது.

‘அகம்’ என்பது மக்களின் இல்வாழ்க்கைக் கூறுகளை எடுத்தியம்புகின்றன. தமிழ் மொழியில் உள்ள இலக்கிய இலக்கணங்கள் ஐந்திணைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளன. மேலும் ஐந்திணை வைப்பு முறையை ஆராயும்போது, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனஇலக்கியங்கள் வேறுபடுகின்றன.

மக்கள் தம் வாழும் இடங்களுக்கேற்ப வாழும் வாழ்க்கை முறையை மாற்றி அமைத்துக் கொண்டுள்ளனர். குறிப்பாக காடும் காடு சார்ந்த பகுதிக்கு முல்லை என்றும், மலை மலையும் சார்ந்த இடத்தினைக் குறிஞ்சி என்றும், வயலும் வயல் சார்ந்த பகுதியை மருதம் என்றும், கடலும் கடல் சார்ந்த பகுதியை நெய்தல் என்றும் அமைத்து தமது வாழ்க்கை முறையை வாழ்ந்துள்ளனர்.

திணையைப் பற்றி ஆராயும்போது குடும்பம், குடியிருப்பு, ஒழுக்கம் போன்ற சொற்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் அன்பின் ஐந்திணைகளாக குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை விளங்குகின்றன.

குறிப்பிட்ட ஒரு பாடலில் முதல், கரு, உரிப்பொருள் என்ற மூன்று பொருள்களையும் வகுத்து பண்டைய மக்களின் அகவாழ்வியலை சிறப்பித்துள்ளனர்.

தொல்காப்பியரின் திணைக் கோட்பாட்டை ஆராயும்போது, நிலம், காலம், சமூகம், வாழ்க்கை மனித உணர்வுகள் போன்றவைகள் ஒன்றோடொன்று இணைந்து காணப்படுகிறது. எந்த ஒரு இலக்கியமாக இருந்தாலும் திணையை வைத்து இயங்குவதைக் காண முடிகிறது. மேலும், திணைக் கோட்பாடு அக ஒழுக்கம் ஏழினையும், புறஒழுக்கம் ஏழினையும் பாடு பொருளாகக் கொண்டு விளங்குகின்றன.

முப்பொருள்களான முதல், கரு, உரிப்பொருள் தத்தமக்குரிய திணையோடு கூடி வருதலன்றி மற்ற திணைகளோடும் சேர்ந்து வரும் இதனை திணை மயக்கம் என்பர்.

கூறுபவரிடமிருந்து கேட்பவருக்கு ஒரு செய்தியைக் கொண்டு செல்வதற்கு கூற்று முறை என்று பெயர். இக்கூற்றானது வினா, விடை முறையில் பயன்படுகின்ற வாய்மொழிப்பாடல்களிலிருந்து பெறப்படுகிறது.

கூற்றாளரின் பண்புகளை வெளிப்படுத்துவதாய் கூற்று அமைந்துள்ளது. கூற்று என்னும் சொல்லிற்கு பேச்சு, உரையாடல், எடுத்துரைப்பு, மொழிதல் என்ற பொருள்கள் அமைந்துள்ளன.

கூற்றுக்குரியவர்களாக தலைவன், தலைவி, தோழி, நற்றாய், செவிலி போன்றோர்கள் இருக்கின்றனர். தலைவன் என்பவன் கல்வி, அறிவு, ஒழுக்கம்

போன்றவற்றில் சிறந்தவனாக இருக்க வேண்டும். உயர்குடியில் பிறந்தவனாக தலைவன் இருப்பது வழக்கம்.

தோழி தலைவனின் காதல் வாழ்க்கையில் மிக பெரும்பங்கு வகிக்கின்றாள். தலைவனைக் கண்டவுடன் மயங்கிவிடும் தலைவி போல் அல்லாது பல நாளும் தலைவனுடைய குணங்களை ஆராய்ந்து தேர்ந்து முடிவில் தலைவியிடம் அவனைக் கூட்டுவிப்பாள்.

அகப்பொருள் நூல்களில் தலைமகள் முக்கியமாக விளங்குகிறாள். தலைவி கற்பு நெறியில் ஒழுகி கணவனைப் பிரிந்திருக்கும் காலங்களில் மக்கள் சுற்றம் முதலானவர்களைப் பாதுகாக்கும் கடமையிலிருந்து தவறமாட்டாள். தாய் தந்தையர் முதலியவர்களின் கட்டுப்பாட்டிற்கு அடங்கி நடக்க வேண்டியவளாக இருக்கின்றாள்.

செவிலித்தாய் என்பவள் வளர்ப்புத்தாய் ஆவாள். இவள் தலைவியிடம் பேரன்பு கொண்டவளாக இருக்கின்றாள். தலைவிக்கு உணவு முதலியன கொடுத்து, அவளைப் பாதுகாத்து, இரவிலும் தன் அருகே அவளைத் துயில் கொள்ளச் செய்து காவல் புரிகின்றாள். இவள் தலைமகளைப் பெற்ற நற்றாயினும் பெரிதும் அன்புடையவளாக இருக்கின்றாள்.

# சான்றெண் விளக்கம்

1. தொல்.பொ. நூ. 1.
2. மேலது., நூ. 5.
3. இறையனார் அகப்பொருள், களவு. 1.
4. வீரசோழியம், பா. 5.
5. மேலது.
6. அகப்பொருள் விளக்கம், நூ. 6.
7. தொகுப்பு ஆசிரியர்கள், வாழ்வியல் சுரங்கம் ப. 218.
8. கா.கோ.வேங்கடராமன், தமிழ் இலக்கிய வரலாறு. ப.27.
9. குறள். 236.
10. கார்த்திகேசு சிவதம்பி. பண்டைத் தமிழ்ச் சமூகம் ப. 4.
11. தொல்.பொருள். நச்சினார்கினியர் உரை. ப. 5.
12. புறம். பா. 49.
13. மேலது. பா. 138:1-10.
14. நற்றி. பா. 5.
15. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 85.
16. மலைபடு. பா. 404-410.
17. குறுந். பா. 65.
18. ஐங். பா. 411.
19. பெரும்பா. பா. 156-168.

20. மலைபடு. பா. 449-453.

21. நற். பா. 50.

22. குறுந். பா. 295.

23. சிறுபாண். பா. 143-153.

24. நற். பா. 172.

25. குறுந். பா. 184.

26. ஐங். பா. 185.

27. பெரும்.பாண். பா. 83-88.

28. அகம். பா. 179.

29. குறுந். பா. 104.

30. தொல். அகம். பா. 16.

31. மா.அ. பா. 295.

32. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப. 22.

33. பெ. மாதையன், சங்க கால இனக்குழச் சமுதாயமும், அரசு உருவாக்கமும், ப. 10.

34. ந. சுப்புரெட்டியார். தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 247.

35. டாக்டர். ப. கோபாலன், தமிழ் இலக்கியக் கலைச் சொல்லகராதி, ப. 123.

36. தி.வெ. கோபாலையர், தமிழ் இலக்கணம் பேரகராதி பொருள். அகம், பா. 3.11.56.

37. தொல். பொருள். அகம் நூ. 15.

38. மேலது., நூ. 14.

39. மேலது., நூ. 21

40. தொல். அகத். நூ. 21.

41. குறுந். பா. 25:3-5.

42. அகம். பா. 176:9.

43. மேலது., பா. 226:6.

44. நற்றி. பா. 70:1-3.

45. மேலது., பா. 356:1-6.

46. குறுந். பா. 300:6

47. அகம். பா. 34.

48. மேலது. பா. 40.

49. தொல்.அகத். நூ. 48.

50. ச.வே. சுப்பிரமணியன். தொல்காப்பியம் தெளிவுரை, ப. 371.

51. தொல். நூ. 313.

52. அ.ச.ஞானசம்பந்தன், அகமும் புறமும், ப. 17.

53. Oxford, The advanced Learners Dicionary Indian Edition, P. 1358.

54. T.S. Elioz. Tradition and the Individual talent, P. 71.

55. தொல்.எச்ச. நூ. 56.

56. மேலது.மரபு. நூ. 1.

57. தொல்.கள. நூ. 2.

58. மேலது., நூ. 7.

59. நற். பா. 213.

60. குறுந். பா. 302.

61. தொல்.களவு. நூ. 17.

62. குறுந். பா. 241.

63. ஐங்கு. பா. 286.

64. தொல்.களவு. நூ. 34.

65. நற்றி. பா. 198.

66. குறுந். பா. 44.

67. தொல்.களவு. நூ. 35.

68. மேலது., நூ. 24.

69. நற்றி. பா. 156.

70. மேலது., பா. 66.

## இயல் - 2

# களவு வாழ்வில் வாயில்கள்

**முன்னுரை**

தமிழர்கள் தங்களின் அக வாழ்வினை பொன், பொருள் என்பதின் அடிப்படையாக எண்ணாமல் தன் மனதின் அடிப்படையில் தேர்ந்தெடுத்தனர். அது களவு வாழ்க்கை என்று சங்க காலத்தில் அழைக்கப்பெற்றமையைக் காணமுடிகிறது. பெரும்பான்மையான திருமணங்கள் களவு மணமாகவே நடைபெற்றுள்ளதைச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. ஒத்த அன்புடைய தலைமக்கள் ஒருவரை ஒருவர் சந்தித்த உடனேயே கரணம் நிகழவில்லை. இருவரும் அன்பின் ஆழத்தை உணர்ந்து, கருத்துக்களைப் பரிமாறி ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு காதல் வாழ்வு நீடித்துப் பிறகு திருமண வாழ்வை ஏற்படுத்திக் கொண்டனர். அதாவது களவு வாழ்க்கையின் மூலமாகக் கற்பு வாழ்வினை அமைத்துக் கொண்டனர்.

களவு வாழ்க்கையில் தலைவன், தலைவி, தோழி, நற்றாய், செவிலி, பாங்கன், கண்டோர் மற்றும் வாயில்கள் போன்றோரின் கூற்றுகள் நடைபெறுகின்றன. வாயில்கள் கூற்றுகளில் தான் கூறவந்த செய்தியினை நேரடியாகவும், மறைமுகமாகவும் கூறுவதைக் காணமுடிகிறது. தலைவன், தலைவி, தோழி போன்றோரின் கூற்றுகளில் உள்ளுறை, உவமம், இறைச்சி, குறிப்புமொழி போன்றவற்றை எவ்வளவு நயமாகவும் சிறப்பாகவும் கையாண்டு உள்ளதை சங்கப்பாடல்கள் எடுத்தியம்புகின்றன.

களவு காலத்தில் தலைவிக்கும், தலைவனுக்கும் ஏற்பட்ட இன்பத்தை நாகரிகமான சொற்களில் வெளிப்படுத்தியதையும், தமிழர்கள் களவிலும் எப்படி

கற்போடு சிறந்து விளங்கியுள்ளனர் எனும் பண்பாட்டின் சிறப்பையும், புலவர்களின் சொல்வண்மையையும் இயற்கையின் மூலம் வெளிப்படுத்திய பண்பினையும் எடுத்தியம்புவதே இவ்இயலின் நோக்கமாகும்.

**களவு - விளக்கம்**

களவு என்பது நோய்நொடி இல்லாமல் அழகும், இளமையும் ஒருசேரப் பெற்ற தலைவனும் தலைவியும் ஊழின் காரணமாக தானே எதிர்ப்பட்டு கூடுவதே களவு என்பதாகும். அதாவது தலைவியை ஈன்றெடுத்த தாய்தந்தை அவளை கொடையாகச் சான்றோர் முன்னிலையில் தராமல் தலைவனும் தலைவியும் தானே உள்ளத்து அன்பால் இணைவது களவு எனப் பெயர்பெற்றது. பிறர்க்குரியப் பொருளை எவரும் அறியாமல் மறைமுகமாக கவர்ந்து கொண்டதனால் களவு என்று இதனை அழைத்தனர்.

இக்களவானது அன்பின் ஐந்திணை நிலங்களில் எண்வகை மணங்களில் ஒன்றாக சங்ககாலத்தில் நிகழ்ந்துள்ளது. இதனை இறையனார் அகப்பொருளில்,

> ‘‘அன்பின் ஐந்திணைக் களவெனப்படுவது
> அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள்
> கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்’’[1]

என்பதன் மூலம் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐவகை நிலங்களில் உள்ள எண்வகை மணங்களில் ஒன்றான கந்தருவ மணம் என்பதனை களவு என்ற பெயரில் வழங்கப்பட்டுள்ளதை அறியலாம். மேலும், தொல்காப்பியரும் களவினை,

''இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக்கூட்டம் காணுங்காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டினுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே''[2]

என்ற நூற்பாவின் அகத்திணை ஏழனுள் கைக்கிளை, பெருந்திணை ஒழிய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற நடுவன் அன்பின் ஐந்திணைகளில் தலைவனுக்கும் தலைவிக்கும் களவாகிய காமக்கூட்டம் நிகழும் என்பதை அறியலாம். மேலும், களவினைத் தொல்காப்பியர் மறைந்த ஒழுக்கம், மறை, அருமறை என்ற சொற்களால் குறிப்பிடுவதைக் காணலாம்.

களவு என்றதன் காரணத்தை இறையனார் அகப்பொருள் ஆசிரியர், ''என்னை, இது களவியலன்றே இது கற்க வீடுபேறு பயக்குமாறு என்னை, களவு கொலை, காமம் இணைவிழைச்சு என்பன வன்றே சமயத்தாரானும் உலகத்தாரானும் கடியப்பட்டன. அவற்றுள் ஒன்றலோ இது எனின், அற்றன்று. களவு என்னுஞ் சொற்கேட்டுக் களவு தீதென்பதூஉம், காமம் எனுஞ் சொற்கேட்டு காமம் தீதென்பதூஉம், அன்று மற்று அவை நல்ல ஆமாறும் உண்டு'' என்று கூறுவதன் மூலம் களவின் சிறப்பை அறியலாம்.

தொல்காப்பிய களவு நூற்பாவிற்கு உரைவகுத்த இளம்பூரணர், ''இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், களவியல் என்னும் பெயர்த்து. களவொழுக்கம் உணர்த்தினமையாற் பெற்ற பெயர். அ∴குதல் ஈண்டு உரைக்கின்றதனால் பயன் இன்றாம். களவென்பது அறம் அன்மையின் (எனில்) அற்றன்று. களவு எனும் சொற்கண்டுழியெல்லாம் அப்பாற்படாதென்றல் அமையாது. களவாவது, பிறர்க்குரிய பொருள் மறையிற் கோடல், இன்னதன்றி ஒத்தார்க்கும் மிக்கார்க்கும் பொதுவாகிய கன்னியரைத்

தமர் கொடுப்பக் கொள்ளாது கன்னியர் தம் இச்சையினால் தமரை மறைத்து புணர்ந்து பின்னும் அறநிலை வழுவாமல் நிற்றலால் இ.்.து அறமெனப்படும்'' என்று கூறுவதைக் காணலாம்.

தலைவன் தலைவியர் தன்னுடைய பெற்றோர்க்கு தெரியாமல் மனதைப் பறிகொடுத்து தங்கள் அன்பினால் தாங்களாகவே இணைந்து அறநிலையைப் பின்பற்றி கற்பு நிலைக்கு வருவதால் களவு என்பது அறமாகவே கருதப்படும் என்று கூறுவதை உணரமுடிகின்றது.

களவு என்பது பிறர்க்கு தெரியாமல் (கள்ளத்தனமாக) செய்வதால் களவு என்று பெயர் பெற்றதை அறியலாம். மேலும் களவு, கள்வன், களவானி போன்ற சொற்களின் பொருள் ஒருவரின் பொருளை அவருக்குத் தெரியாமல் மற்றொருவன் களவாடுவதே ஆகும்.

சங்க இலக்கியத்தில் தலைவன், தலைவியின் உள்ளத்தை யாருக்கும் தெரியாமல் களவாடியதாலும், தலைவி, தலைவனின் உள்ளத்தை யாருக்கும் தெரியாமல் களவாடியதாலும் இதனை களவியல் என்ற பெயரில் அழைப்பதை கருதமுடிகின்றது. உள்ளத்தைத் களவாடியவருக்கு வழங்கப்பட்டப் பெயர் பின்னாளில் பொருள், பொன், பணம் போன்றவற்றை திருடியவர்களுக்கும் களவு, கள்வன் என்ற அப்படியே நின்றுவிட்டதை அறிந்துகொள்ளலாம். ஆகவே, சங்ககாலத்தில் களவு என்பது தலைவன் தலைவியர் தங்கள் உள்ளங்களை மாறிமாறி களவாடிக்கொண்டதால் ஏற்பட்ட காரணப்பெயர் என்பது தெளிவாகின்றது. களவுமணம் என்பது எண்வகை மணங்கள் சிறந்தது என்பதை,

''முந்திய நூலோர் மொழிந்த வெண் மணத்தினும்
கந்தருவ முறைமை களவெனப்படுமே''[3]

எனவும்,

"மறைய அவர்க்கு மாண்டதோர் இடத்தில்
மெய்யுறு வகையுமுன் னல்லது உடம்படாத
தமிழியல் வழக்கமெனத் தன்னன்பு மிகை பெருகிய
களவெனப்படுவது கந்தருவ மணமே"[4]

எனவும்,

"அவற்றுள் களவந் தணர்மறை மன்றல்
எட்டனுள் யாழோர் இயல்பின தாகும்"[5]

என, இலக்கண நூல்களின் மூலம் களவு என்பது எண்வகை மணங்கள் சிறப்புடன் விளங்கக் கூடியதாக காந்தர்வம், யாழோர் கூட்டம் என்னும் களவு மணம் விளங்குவதை அறியலாம்.

**களவில் வாயில்கள்**

சங்க இலக்கியக் களவு வாழ்க்கையில் தமிழர்களின் பண்பாட்டுச் செய்திகள் பல புதைந்து கிடக்கின்றன. தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் சந்தித்துக் காதல் கொள்கின்றனர். அதுதான் களவு வாழ்க்கை என்பதாகும். அந்தக் களவு வாழ்க்கையில் தலைவனுக்கும், தலைவிக்கும் பல்வேறு வகையில் உதவுபவர்களாகவும், அவர்களின் களவு வாழ்க்கையில் பங்கு கொண்டு காதல் வளரத் துணைபுரிபவர்களாகவும் துன்பங்களைக் களைபவர்களாகவும் தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய், பாங்கன் ஆகியோர் ஈடுபடுகின்றனர்.

தலைவன்-தலைவியிடத்தும், தலைவி-தலைவனிடத்தும் தூதுவிடும் வழக்கம் மிகவும் தொன்மையான வழக்கம். இதை தொல்காப்பியர் வாயில்கள் என்று குறிப்பிடுகின்றார். கற்புகாலத்தில் தோழி, தாய், பார்ப்பான், பாங்கன்,

பாணன், பாடினி, இளையர், விருந்தினர், கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர் இவர்களை வாயில்கள் என தொல்காப்பியர் கூறுகின்றார்.

**களவில் இன்றியமையாத வாயில்கள்**

சங்க இலக்கியத்தில் பல வாயில்கள் இடம்பெற்று இருந்தாலும், களவு வாழ்க்கையைப் பொறுத்தவரை தலைவன், தலைவி, பாங்கன், தோழி, செவிலி என்ற அறுவரே இன்றியமையாத மாந்தர்களாக விளங்குகின்றனர். இதனையே தொல்காப்பியர்,

''பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி
சீர்த்தகு சிறப்பிற்கிழவன் கிழத்தியோடு
அளவியல் மரபின் அறுவகை யோரும்
களவியல் கிளவிக்கு உரியர் ஆகலும்''[6]

என்று களவிற்குரிய மாந்தர்களைக் குறிக்கின்றார். இதன்மூலம் மேற்கூறிய அறுவருமே களவு வாழ்க்கை சிறப்பாக முறையில் நடைபெறுவதற்குரிய வாயில்கள் என்பதைத் தெளிவாக அறியலாம்.

களவு வாழ்க்கையில் பல்வேறு வாயில்கள் இருந்தாலும் அவர்களுடைய பெயர்களை வெளிப்படையாக கூறுகின்ற மரபு நம் தமிழ்ப் பண்பாட்டில் இல்லை. அப்படிப்பட்ட சிறப்புகளைக் கொண்டு விளங்கியது நம்முடைய தமிழர் வாழ்வு முறையாகும். அதனால் தான் காதல் வாழ்வில் ஈடுபடுகின்ற ஆணையும், பெண்ணையும் அவர்களுடைய பெயர்களால் குறிப்பிடாமல் தலைவன், தலைவி என்ற பொதுப்பெயரிலே குறிப்பிட்டனர். இதனை,

''மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்
சுட்டி ஒருவர் பெயர்பௌப் பெறாஅர்''[7]

என்று தொல்காப்பியர் கூற்றிலிருந்து அறிந்துக் கொள்ள முடிகின்றது. கைக்கிளை, பெருந்திணை இரண்டும் சமூகத்திற்கு ஏற்றுக்கொள்ளத் தகாதது என்ற காரணத்தல் அவற்றிற்கு தொல்காப்பியத்தில் முக்கியத்துவம் கொடுக்கவில்லை. ஆனாலும், அவற்றிலும் பொதுப்பெயரையே கடைப் பிடித்து உள்ளதைக் காண முடிகின்றது.

இந்தக் கருத்தை வலுசேர்க்கின்ற வகையில் வ.சுப.மாணிக்கனார் தம் நூலில் பெயர்களை ‘‘தலைவன், பாங்கன், பாகன், பாணன், தகப்பன், அண்ணன்மார் என்றும், தலைவி தோழி, செவிலி, தாய், பரத்தை, ஊரார் என ஆண், பெண் வாயில்கள் வருவர். இவ்வாட்களை தலைவன் தலைவி தோழி என உறவுப் பெயரால் கூறலாம்.

இம்முறையை விடுத்து கூப்பிடும் பெயர்சுட்டி காதல் புனையப்படுமாயின், அக்காதல் எத்துணைச் சிறந்ததாயினும் அகத்திணைப் பாற்படாது என்பது இலக்கணத் துணிபு’’ என்று கூறி உள்ளதைக் காணமுடிகின்றது.

தமிழர்கள் காதலை மிகமிகத் தூய்மையானதாக வைத்துப் போற்றி வந்தனர். அதனை ஐந்திணை நெறிகளின் மூலமாக படைத்துக்காட்டுகின்ற காதல் வாயில்கள் இவ்வுலக மாந்தர்களிடம் இருக்கின்றனரா அல்லது இருக்க முடியுமா? என்று நாம் ஐயமுறுகின்ற அளவில் சங்க இலக்கியத்தில் காதல் வாழ்க்கை காட்டப்பட்டுள்ளது.

அப்படிப்பட்ட சிறந்த காதல் வாழ்க்கையின் மூலம் நம் பண்டைய தமிழர்கள் இல்லற வாழ்வை அமைத்து வாழ்ந்து வந்தனர் என்பதை அறியமுடிகின்றது. ஆனால், அனைத்தும் உண்மையும் அல்ல, பொய்மையும் அல்ல என்பதை நாம் உணர வேண்டும். இதனை அறிந்த தொல்காப்பியரும்,

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்

பாடல் சான்ற புலனெறி வழக்கம்"[8]

என்ற நூற்பாவில் உலக வழக்கும் நாடக வழக்கும் கலந்தது தான் என்று தெளிவாக கூறியுள்ளதை அறியலாம்.

**வாயில்கள்-பற்றிய விளக்கம்**

தலைவன் தலைவி இருவரும் இணைந்து இல்லறம் நடத்தும் போது இடையில் பிற பெண்களால் குறுக்கீடு ஏற்படுவதுண்டு. தலைவனிடம் காதல் பாராட்டுகிற அல்லது காமம் பூண்டு பழகும் பரத்தையர் தலைமக்களது இல்லறத்தில் குறுக்கிடுவர். அதனால் தலைமக்களிடையே சிக்கல் ஏழும். தலைவன் மீது தலைவி ஊடல் கொள்வதும் பின்பு ஊடல் தீர்க்கும் வாயில்கள் மூலம் அந்தப் பிணக்குத் தீர்வதும் சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

களவிலும், கற்பிலும் தலைவன் தலைவியர்க்குத் துணை நிற்பவர்கள் வாயில்கள் ஆவர். "ஐம்பொறி, கடை, கதவு, காரணம், திறம், தூது வாய்தல், தூவரம், என்று பல பொருள்களை" வெள்ளி விழா அகராதி குறிப்பிடுகின்றது.

**வாயில்-இலக்கணம்**

வாயில்களின் இலக்கணமாக தொல்காப்பியர்,

"தோழி தாயே பார்ப்பான் பாங்கன்

...................................................

....................................................

யாத்த சிறப்பின் வாயில்களென்ப"[9]

எனும் பன்னிருவரும் வாயில்கள் என்று சொல்லுவார். அகவொழுக்கம் நிகழ்வதற்கு வாயில் போன்று விளங்குதலால் வாயில்கள் எனப்பட்டனர். இதனை,

“எல்லா வாயிலும் இருவர் தேத்தும்
புல்லிய மகிழ்ச்சிப் பொருளவென்ப”[10]

மேற்கூறிய பன்னிருவாயில்களும் தலைவனும் தலைவியும், இன்பமாக வாழும் வாழ்க்கைக்கு உதவுவர். புதல்வனும் தலைவனுக்கு வாயிலாவதைக் காட்டும் பாடலும் உள்ளது.

**களவில் கூற்றுகுரிய வாயில்கள்**

கூற்று என்பது இருவர் நேரடியாக பேசிக்கொள்ளும் முறையாகும். ஒருவர் தனது கருத்தை மற்றவருக்கும் நேரடியாக தெரிவிப்பது கூற்று என்று கொள்ளலாம். ஆனால், தொல்காப்பியர் கூற்று என்பதனைப் பற்றி விளக்கவில்லை. ஆனாலும், கூற்றுக்குரியவர்கள் யார்? யார்? என்பதனையும், எந்தெந்த நிலைகளில் கூற்று நிகழும் என்பதனையும் தெளிவாக விளக்கியிருப்பதனைக் காணமுடிகின்றது. களவில் கூற்றுக்குரிய வாயில்களாகத் தொல்காப்பியர் பின் வருவோரைக் குறிப்பிடுகிறார். சங்க இலக்கியத்தில் வாயில்கள் பன்னிருவர் ஆவர். தொல்காப்பியர் இந்த வாயில்கள் யார்? யார்? எனப் பட்டியலிட்டுக் காட்டுகிறார். பன்னிருவாயில்களை இதனை,

“.........................................தோழி செவிலி
.......................................................................
களவினில் கிளவிக்கு உரியர் என்ப”[11]

என்று பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி என்ற அறுவரும் களவில் கூற்றுக்குரியோர் என்பதனை அறியலாம்.

கூற்று என்பதனை, குளோரியா சுந்தரமதியின், ‘‘கூற்று என்ற அம்சம் அகப்பாட்டின் அமைப்புக் கூறுகளில் மிக அடிப்படையானது. அகப்பாட்டு அகமாந்தர் ஒருவரின் கூற்றாகவே அமைய முடியும். கூற்று என்ற அமைப்புக் கூறு அகப்பாட்டின் அமைப்பைத் தெளிவாக வரையறை செய்து விடுகிறது.

வரையறுக்கப்பெற்ற கூறுவோரின் கூற்றாக எடுத்துரைக்கப்பெற்ற கூறுவோர் கேட்போர் என்ற வட்டத்திற்குள் நிலவுவதாகவே ஒரு பாடலை அகப்பாட்டுப் புலவன் படைக்க முடியும்’’ என்ற தனது நூலில் குறிப்பிட்டுள்ளதைக் காணமுடிகிறது. அகப்பாடல் இயற்றுகின்ற புலவன் கூற்று என்பதனை கடைப்பிடித்தாக வேண்டும் என்பதை அறியலாம்.

**நம்பியகப்பொருளில் வாயில் பிரிவுகள்**

தொல்காப்பியம், அகத்திணையியலில் களவு, கற்பு ஆகிய இருவகைக் கைகோளுக்குரிய பிரிவு வகைகளைப் பொதுவகையாகச் சுட்டுகின்றது. பிற்காலத்தில் நாற்கவிராசநம்பி இப்பிரிவை களவுக்கும், கற்புக்கும் உரியனவாகத் தனித்தனியே கூறுகின்றார். இதனை,

‘‘ஒருவழித் தணத்தல் வரைவிடை வைத்துப்
பொருள்வயிற் பிரிதலென் றிருவகைத்தாகும்’’[12]

எனக் களவுக்குரியதாகவும்,

‘‘பரத்தையிற் பிரித லோதற்குப் படர்தல்
அட்டகு காவலொடு தூதிற் ககறல்
உதவிக் கேகல் நிதியிற் றிகழ்தலென்
றுரைபெறு கற்பிற் பிரிவறு வகைத்தே’’[13]

எனக் கற்பிக்குரியதாகவும் குறிப்பிடுகின்றார். இங்குத் தூதிற் பிரிவு, கற்புக் காலத்தில் நிகழும் என்று நம்பி அகப்பொருள் கூறுகின்றது. இறையனார் அகப்பொருளில் கற்புக்குரிய பிரிவு வகைகள் ஆறுவகை என்பதை,

"ஓதல் காவல் பகைதணி வினையே
வேந்தர்க் குற்றுழி பொருட்பிணி பரத்தையென்
றாங்கவ் வாறே யவ்வயிற் பிரிவே"[14]

என்று கூறுகின்றது.

தொல்காப்பியர் களவு, கற்பு எனும் இருவகைக் கைகோளுக்கும் உரிய பிரிவு வகைகளைப் பொதுநிலையில் சுட்டியிருந்தாலும், பிற்காலத்தில் இவை களவுக்கும், கற்புக்கும் எனத் தனித்தனியே வரையறுத்துக் கூறப்பட்ட வளர்ச்சி நிலையையும், தூதிற் பிரிவு கற்புக் காலத்துக்கேயுரியது என்ற கருத்தை பிற்கால இலக்கண நூல்கள் கூறுகின்றது.

**கூற்று வாயில்கள்**

களவு வாழ்வில் தலைவன், தலைவி எண்ணங்களை வெளிக்காட்டவும் கருத்துக்களை எடுத்துரைப்பதற்கும் கூற்று மற்றும் வாயில்கள் மிகவும் இன்றியமையா அடிப்படையில் அமைவதை அறியமுடிகிறது.

"தொல்காப்பியர் கூற்று என்பதை விளக்காவிடினும் கூற்றிற்கு உரியவர் யார்? அல்லாதவர் யார்? எவர்தம் கூற்று கண்டெடுத்து மொழியப்படும்? என்பது குறித்து விளக்கியிருப்பதும், கூற்றிற்குரியார், கூற்றுநிகழ்த்தும் சூழல் ஆகியவற்றை வரையறை செய்திருப்பது எண்ணத்தக்கது"[14] என்று ப. வெங்கடேசன் குறிப்பிடுவதைக் காணமுடிகிறது.

**தலைமகன்**

தலைமகன் என்பவன் களவுக்காலத்தில் இன்றியமையாதவன் ஆவான். தலைமகன் என்பான் கல்வி, அறிவு, ஒழுக்கங்களால் சிறந்தவன், வழிவழியே வரும் உயர்குடியில் பிறந்தவன் பெருஞ் செல்வத்தினன். இவனும், தலைவியும் ஓர் உயிரும் ஈருடலும் போன்ற நட்பினை உடையவர்கள். இவர்கள் தொடர்பு பிறவிதோறும் தொடர்ந்து வருவதாகக் கூறுவார். தொல்காப்பியர் இதனை,

''ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்''[15]

என்று சிறப்பித்துக் கூறுவர்.

''மகன் என்ற சொல் வெறும் ஆண்மகனை மாத்திரம் குறிக்கும் சொல் அன்று. நல்லூழின் பெருக்கால் எய்தலாகும் எல்லா உயர்வுகளும் ஒருங்கு வாய்க்கப்பெற்ற பெருந்தகையை மட்டிலும் குறிக்கப்படும் சொல் இது. இத்துணைச் சிறப்பு வாய்ந்த விழுமிய பெயருடன் 'தலை' என்ற அடை மொழியும் சேர்ந்தால் இத் தலைமகன் என்ற பெயரால் குறிப்பிடப்பெறும் தலைவர்களின் பெருமைகளை நாமே எண்ணிப் பார்த்துக் கொள்ள வேண்டியது தான்'' என்ற ந. சுப்புரெட்டியார் கூறுவது ஒப்பு நோக்கக் கூடியதாகும். தலைமகனுடைய இலக்கணத்தைத் தொல்காப்பியம் இதனை,

''பெருமையும் உரனும் ஆடூஉ மேன''[16]

என்று கூறுகின்றது. பெருமை என்பதற்கு அறிவு, ஆற்றல், புகழ், கொடை, ஆராய்ச்சி பழிபாவங்கட்கு அஞ்சுதல் ஆகிய பெருமைக்குரிய குணங்கள் என்றும், உரன் என்பதற்கு கடைப்பிடிப்பும் நிறையும் கலங்காது துணிதலும் முதலிய வலிமையின் பகுதி என்றும் நச்சினார்க்கினியர் கூறுவர்.

தலைவன் இடையூறு வந்த காலத்தில் நெஞ்சமிழந்து வெகுத்தலும் இன்பம் வந்தடையும் போது, மகிழ்தலும் போன்ற எளியோரிடம் காணப்பெறும் குணங்களின்றி எப்போதும் ஒரே பெற்றியினராக இருக்கும் பெருமையினை உடையவர்கள் இவர்கள். களவொழுக்கத்தின் போது இவர்களிடம் இப்பெருமையும் உரனுமாகிய குணங்கள் ஒளிவிட்டு திகழ்வதைக் காணலாம். இதனை,

'பதினாறு வயது உடையவாக கூறப்படுகின்றான. இறையனார் களவியலுரை ஆசிரியர் அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்பவற்றைத் தலைமகனது குணங்களாகக் கூறுவர். அறிவு என்பது, எப்பொருளாயினும் அப்பொருட்கள் நின்று அம்மெய்ம்மையை அறிவது நிறை என்பது ஒரு பொருளை ஆராய்ந்து உணர்தல் கடைப்பிடி என்பது கொண்ட பொருள் மறவாமை' என்ற இறையனார் களவியல் உரை கூறுகின்றது.

ஊழின் வழியால் தலைவியை எதிர்ப்பட்ட பொழுது அவள் அழகு சிறப்பைக் கண்டு வியந்து, அவள் மானிடப்பெண் அல்லள் தெய்வம் என்று ஐயுறுவான் பின்பு ஐயம் தெளிந்து தலைவியுடன் தலைவன் இன்புறுவான் என்பதைத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

**தலைமகள்**

களவு வாழ்க்கையில் தலைவனுக்கு அடுத்து முக்கியமாக விளங்குபவள் தலைமகள் ஆவாள். அகப்பொருள் நூல்களில் காணப்பெறும் தலைமகள் அழகும், அறிவும் சிறந்தவளாக காணப்படுகின்றாள். தலைமகளை குறித்து தொல்காப்பியர் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார். ஓரிடத்தில்,

> "கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்
> மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
> விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும் பிறவும்"[17]

என்ற நூற்பாவின் மூலம் தலைவியின் குணங்களாக குறிப்பிடப் பெற்றுள்ளதை காணலாம்.

“கற்பு என்பது கணவன் முதலியோர் கற்பித்த நிலையில் திரியாத நல்லொழுக்கம் காமம் என்பது. அன்பு நற்பால் ஒழுக்கம் என்பது தன்குலத்திற்கு ஏற்றவாறு ஒழுகும் ஒழுக்கமாகும். மெல்இயற் பொறை என்பது மெல் என்ற நெஞ்சிரையாய்ப் பொறுக்கும் பொறை நிறை என்பது, மறைக்கூடிய செயல்களைப் புறந்தருதல். வறுமையையோ செல்வத்தையோ கருதாது இயன்றவரை விருந்தினரை பாதுகாத்து அவர்களை மனம் மகிழ்வித்தல். சுற்றம் ஓம்பல் என்பது தொடர்புள்ள மக்களைப் பாதுகாத்து, அவர்கள் உண்டபின் தான் உண்டல் என்பதாகும்.

அகப்பொருள் நூல்களில் தலைமகள் பன்னிரண்டு பிராயத்தனாய்க் குறிக்கப் பெறுகின்றாள். அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்பவற்றை தலைமகள் குணங்களாகக் களவியல் உரையாசிரியர் குறிப்பிடுகின்றார். இதனை தொல்காப்பியம்,

“அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்
நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப”[18]

என்ற நூற்பாவின் மூலம் அறிய முடிகின்றது.

தலைமகள் கற்பு நெறியில் ஒழுகிக் கணவரைப் பிரிந்து இருக்கும் காலங்களில் மக்கள் சுற்றம் முதலானவர்களைப் பாதுகாக்கும் கடமையிலிருந்து தவறாள். அன்றியும் களவு நெறியில் ஒழுகும் போது தந்தை, தாய் முதலியவர்களின் கட்டுப்பாட்டிற்கு அடங்கி நடக்க வேண்டியவள். தலைவன் தரும் பலவித துன்பங்களைப் பொறுத்திருக்கும் குணமுடையவள். இந்நிலையில் தன்துயரைச் சிறிதும் கருதாது தலைவன் துயரையேப்

பெரிதும் கருதி வாழும் தலைவியின் பெருமை போற்றத்தக்கதாக அமைகின்றது.

“களவு காலத்திலும் சரி கற்பு காலத்திலும் சரி, இவள் தலைவனுடைய அருங்குணங்களையெல்லாம் தோழியிடம் சொல்லிப் பாராட்டுவாள். இவளது கரந்த ஒழுக்கத்தினை அறியாத பெற்றோர் வேறொருவர்க்கு திருமணம் செய்ய முயலும் போது தன்னுடைய காதல் ஒழுக்கத்தினை வெளிப்படுத்தி வெற்றிக் காண கூடியவள்”[19] தலைவி ஆவாள் என ந. சுப்புரெட்டியார் தனது நூலில் தலைமகள் குறித்து உறுவதைக் காண முடிகின்றது.

தலைவி அனைத்து குணங்களும் சிறப்பும் பொருந்தியவளாக விளங்குகின்றாள். தலைவனை எதிர்ப்பட்ட பொழுது தலைவனுக்கு நிகழ்வது போன்ற ஐயம் தலைவிக்கு நிகழாது. தலைவிக்கு ஐயம் நிகழ்ந்தால் அவளுக்கு அச்சம் தோன்றும் அது இயற்கை புணர்ச்சிக்கு தடையாகும். தலைவி நாணமும் மடனும் உடையாளாதலின் களவொழுக்கத்தில் குறிப்பான் அறிவித்தல் இன்றி வெளிப்படையாக வேட்கையைக் கூறமாட்டாள் என்பதையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

**பாங்கன்**

பாங்கன் என்பவன் களவு வாழ்க்கையில் தலைமகனுக்கு உறுதுணையாக இருந்து உதவக்கூடியவன் ஆவான். பார்ப்பன் என்பவன் தலைவனுக்கு தோழனாக இருப்பவன் தலைவன்களவு ஒழுக்கத்தில் ஒழுகும் போது அவனுக்கு உற்ற துணையாக இருந்து கொண்டு அவன்செயல்களில் உதவுபவன் தலைவியைச் சந்தித்து, அவளுடன் மறைந்து ஒழுகும் ஒழுக்கத்தால் அவன்உடலில் காணும் தோற்ற வேறுபாடுகளைக் கண்டு

காரணத்தை வினவியறிந்து அது முதல்இவனுக்குத் துணைவனாக இருப்பவன். களவில் தலைவன் காதல் வளர்ச்சி அடைய முழுமனதோடு உதவுபவனாக பாங்கன் விளங்குவதைச் சங்க இலக்கியங்களில் நாம் காண முடிகின்றது. தலைவனின் மனதைப் புரிந்துக்கொண்டு அவனுக்கு உற்ற துணையாக பாங்கன் களவில் விளங்குகின்றான்.

**தோழி**

களவு வாழ்க்கையில் இன்றியமையாத மிக முக்கியமான பாத்திரம் தோழி ஆவாள். தலைவன் தலைவியின் காதல் வாழ்க்கையில் பெரும்பங்கு கொண்டு துணைபுரிபவள் தோழி. தலைவியுடன் ஒன்றின நெஞ்சினையுடையவள். தலைவிக்கும், தோழிக்கும் இடையே உள்ள நட்புரிமைத் தலைவனுக்கும் பாங்கனுக்கும் இடையேயும் காணமுடியாது.

தலைவினுடைய செயல்கள் யாவற்றையும் இவள் அறிவாள். இவள் தன்னலம் சிறிதும் இல்லாமல் தலைவன் தலைவியரது நலத்தை மட்டிலும் கருதிப் பலவகை இன்னல்களுக்கு இடையிலும் சாமர்த்தியமாகச் செயலாற்றும் திறனுடையவள் தலைவியை விட அறிவு மிக்கவள் தோழி ஆவாள். தலைவியை வளர்க்கின்ற செவிலித்தாயின் மகள் தோழி ஆவாள். தாய்க்கொண்டு உயிர் ஒன்றாய் வருபவள். பாட்டிக்குத் தலைவியின் செவிலித்தாய் உயிர்த்தோழியாகவும், தாய்க்குச் செவிலித்தாய் உயிர்த்தோழியாகவும் தனக்கு அச்செவிலித் தாயின் மகள் தோழியாகவும் வருவது தாய்த் தாய்க் கொண்டு உயிர் ஒன்றாய் வரும் நிலையாகும்.

‘‘ஐந்திணை களவொழுக்கத்தில் தோழியின் பங்கு மிகச் சிறந்தது. இன்றியமையாதது. இயற்கைப் புணர்ச்சி அறிந்து தோழியற் கூட்டத்திற்கு உதவுதல் முதல் மணம் புரிந்து கொண்டு தலைவி தலைவன் இல்லம்

செல்லும் வரை அவள் பணி இன்றியமையாதது. உடன்போக்கு போன்ற காலங்களில் எல்லாம் குடும்பப் பண்பிற்கும் பெருமைக்கும் இழுக்கு ஏற்படாதவாறு பணியாற்ற வேண்டிய பெரும்பங்கு உடையவள் தோழி ஆவாள்'' என்று அ. சிவலிங்கனார் குறிப்பிட்டுள்ளார். இதனை தொல்காப்பியரும்,

''தோழி தானே செவிலி மகளே''[20]

என்று குறிப்பிடுவதன் மூலம் அறியலாம். தோழி அகப்பொருள் நூல்களில் இவள் உலகறிவு மிக்கவளாகத் திகழ்கின்றாள். தலைவன் தலைவியை விட்டுப் பிரிய நேரிடும் சந்தர்பங்களை எல்லாம் நன்கு ஆராய்ந்து செயல்படுவாள். தலைவனை விட்டுப் பிரிந்து வருந்தும் தலைவியைப் பலவாறு சொல்லித் தேற்றுவாள். சில சமயம் தலைவனிடம் குறை கண்டால் கழறியுரைத்து அவனைத் திருத்த முயல்வாள். தலைவன் தலைவியரின் கூட்டுறவுகளை நற்றாய், செவிலித்தாய்க்கு திறம்பட உரைத்து அவர்களது உடன்பாட்டைப் பெறுவாள்.

''களவு ஒழுக்கத்திலும் சரி, கற்பு ஒழுக்கத்திலும் சரி, இவளுடைய தொடர்பு இல்லாத இடங்களே இல்லை என்று கூறலாம். அவ்வளவு முதன்மை பெற்றவள் தோழி ஆவாள் என்ற ந. சுப்புரெட்டியார் தனது நூலில் குறிபிட்டுள்ளார்.

களவு வாழ்க்கையில் தலைவனுக்கும் தலைவிக்கும் உள்ள காதலை வலுப்படுத்துவதற்கும், சிறப்புபெறுவதற்கும் அந்த களவு கற்பாக மாறுவதற்கும் தோழி என்பவள் இன்றி நடைபெறாது என்பதை நாம் அறிய முடிகின்றது.

''சங்க இலக்கியத்தில் 882 களவுப்பாடல்கள் உள. இவற்றுள் 742 பாடல் 95 விழுக்காடு தோழியிற் புணர்ச்சி என்னும் ஒரு வகையில் வருவன. இதனால், தோழியின்றி காதலர்களின் களவொழுக்கம் நீளாது என்பதும்

ஐந்திணை இலக்கியப் படைப்புக்குத் தோழி என்னும் ஆள் (பாத்திரம் இன்றியமையாதவள் என்பதும், தோழியிற் புணர்ச்சிக்குரிய துறைகளே புலவர்களின் நெஞ்சத்தைக் கவர்ந்தன என்பதும் பெறலாம்''[21] என்று வ.சுப. மாணிக்கனார் குறிப்பிட்டுள்ளார். மேலும்,

தலைவயின் செயல் காதலிப்பதோடு அமைகின்றது. அவள் காதலை வெற்றிபெறச் செய்து கற்போர்க்கும் முயற்சியில் மதியுடன்படுத்தல் முதலாக வாயில் நேர்தல் இறுதியாக தோழி செயலாற்றுவதினால் அவள் கூற்று மிகுகிறது. உரிமையும் உணர்வும் மிகுதியாக கொண்டிருந்தமையால் தோழியின் கூற்றாக அமைந்த பாடல்கள் மிகுதியாக உள்ளது போலும்'' என்ற ஈ.கோ. பாஸ்கரதாஸ் தனது நூலில் குறிப்பிடுவதன் மூலம் அறியலாம்.

தோழி களவில் முதன்மை பெற்று விளங்குவதை அறிய முடிகின்றது. ‘‘சங்கப் பாடல்களில் 68 பாடல்கள் மட்டுமே தலைவி தலைவினிடம் பேசுதல். 449 பாடல்கள் தலைவி தோழியிடம் பேசுகின்றாள். தலைவியிடம் கூறும் கூற்றாக 398 பாடல்களும் தலைவனிடம் கூறும் கூற்றாக 295 பாடல்களும் செவிலி போன்றோர் கூறும் கூற்றாக 91 பாடல்களும் இடம்பெறுகின்றன. ஆகவே தோழி, தலைவன், தலைவி, செவிலி, பாணண் ஆகியோரின் பண்புகளை விளக்கும் கண்ணாடியாக நிலவுகிறாள்'' குறிப்பிட்டுள்ளதன் மூலம் அறியலாம்.

ஆகவே, களவு வாழ்க்கையில் தலைவன் தலைவி இருவருக்கும் இன்றியமையாதப் பாத்திரமாக தோழி விளங்குவதையும் தோழி இன்றி களவு வாழ்க்கை சிறப்புறாது என்பதை நாம் உணர முடிகின்றது.

**செவிலி**

தலைவியை வளர்த்த தாய் செவிலித்தாய் ஆவாள். களவு வாழ்க்கையில் தலைவன் தலைவி காதல் நிகழ்வை அறிந்து கோபப்படுவாள்

செவிலித்தாய் ஆவாள். செவிலித்தாய் என்பவள் தலைவியின் மீது தாயை விட அன்பும் அரவணைப்பும் கொண்டவள் ஆவாள். செவிலியின் சிறப்பினை உணர்ந்த தொல்காப்பியரும் செவிலியைத் தாய் என்றே குறிப்பிடுகிறார். இதனை,

''ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாய் எனப் படுவோள் செவிலி யாகும்''[22]

என்ற நூற்பாவின் மூலம் செவிலித்தாயின் சிறப்பினை அறிந்து கொள்ள முடிகின்றது.

செவிலி என்பவள் தலைவியை வளர்த்த தாய். தலைவிக்கு உயிர்த்தோழியாக இருப்பவளை ஈன்ற தாய். நற்றாய்க்குத் தலைவியைப் பெற்றவளுக்கு தோழியாக விளங்குபவள். இவ்வாறு செவிலியைப் பற்றி இலக்கண நூல்கள் கூறும். இவள் தலைவியிடம் பேரன்பு கொண்டவள். தலைவிக்கு உணவு முதலியன கொடுத்து அவளைப் பாதுகாத்து, இரவிலும் தன் அருகே அவளைத் துயில் கொள்ளச் செய்து காவல் புரிபவள். தலைவியின் கரந்த ஒழுக்கத்தைத் தோழியின் மூலம் இவள் அறிவாள்.

''தலைவி தலைவனுடன் உடன்போகும் காலத்து வருந்தி அவளைத் தேடிச் செல்லக்கூடியவள். காட்டில் எதிரில் வரக்கூடிய அந்தணர், கண்டோர் ஆகியோர்களிடம் தன் மகளைப் பற்றி வினவுவாள். நற்றாயுடன் சேர்ந்து கொண்டு தலைவயின் தோற்ற வேறுபாடுகளின் காரணத்தை அறிய குறத்தி முதலியோரைக் கொண்டு குறிபார்த்து ஆராய்வாள். இவள் தலைமகளைப் பெற்ற நற்றாயினும் பெரிதும் அன்பும் அந்தரங்கமும் உடையவளாயின் இக்களவு வரலாற்றிற்குச் சிறந்தவளாய்த் தாய் என்றே சிறப்பித்து கூறப்படுகின்றாள்.''

தலைவிக்குத் தாயாக இருந்து களவில் உண்மைத் தன்மைகள் ஆராயக் கூடியவளாக செவிலித்தாய் விளங்குவதை அறியமுடிகின்றது. களவு வாழ்க்கையில் செவிலித்தாயின் பங்கினைப்பற்றி அ. சிவலிங்கனார் தனது தொல்காப்பிய உரைவளம் நூலில்,

''நற்றாய் போல் இருந்து தலைவியிற் களவொழுக்கத்தினைத் தன் மகள் உளம் உணர்ந்து தானும் ஆய்ந்து அறிந்து, தலைவியைக் காக்க வேண்டிய முறையில் காத்து, நற்றாய்க்கு மரபு வழுவாமல் உணர்த்தி அவள்மூலம் தந்தைக்கும் தமையன்மாருக்கும் உணர்த்தும் இயல்புடையவள்'' செவிலித்தாய் ஆவாள் என்று இயம்புவதைக் காணமுடிகின்றது.

களவு வாழ்க்கையில் தலைவியின் மீது அன்பும் அரவணைப்பும் கொண்டவளாகவும், அவளுடைய வாழ்வு சிறப்பானதாக அமைய தாயைவிட சிறப்பு பொருந்தியவளாக செவிலித்தாய் விளங்குவதை நாம் அறிய முடிகின்றது.

**வாயில்களின் செயல்பாடுகள்**

சங்க இலக்கிய களவு வாழ்க்கையில் தலைவன் தலைவி, தோழி, செவிலி, பாங்கன், நற்றாய் ஆகிய அறுவரும் எந்த நிலைகளில் அடிப்படையாகக் கொண்டு செயல்படுவார்கள் என்பதைத் தொல்காப்பியர் சிறப்பாக கூறியுள்ளார். இதனை,

''காமப்புணர்ச்சியும் இடந்தலைப்படலும்
பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்று
ஆங்கநால் வகையினும் அடைந்த சார்வொடு
மறையென மொழிதல் மறையோர் ஆறே''[23]

என்று கூறுவர். காமப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், தோழியற் கூட்டம் என்ற நான்கும் காதல் ஒழுக்கத்தில் வரும் நான்கு நிலைகள் படிகள்

ஒவ்வொரு நிலையிலும் பல நிகழ்ச்சிகள் உண்டு. தனித்தனி நிகழ்ச்சியைத் துறை என்று குறிப்பர். இலக்கண நூலார் இந்த நான்கு நிலைகளைச் சார்ந்து வரும் சிறு படிகளும் உள்ளன. அவற்றை எல்லாம் தொல்காப்பியம் விரிவாகக் கூறுகின்றது.

காமப்புணர்ச்சி என்பதற்கு களவியலுரையாசிரியர் “தலைமகனும் தலைமகளும் தமயராய் ஒரு பொழிலகத்து எதிர்பட்டுத் தன் உணர்வின்றி வேட்கை மிகுதியால் புணர்வது என்று கூறுவர். தலைமகனுடைய சிறந்த குணங்களும் வேட்கை மிகுதியால் புனல் ஒருவழிப் புல் சாய்ந்தாற் போல அமைந்து கிடக்க இருவரும் புணர்தல் காமப்புணர்ச்சி என்று அவர் பெற வைப்பர். இதை இயற்கை புணர்ச்சி என்றும் முன்னுறு புணர்ச்சி என்றும் தெய்வப்புணர்ச்சி என்றும் இலக்கண ஆசிரியர் கூறுவதைக் காணலாம்.

தலைவியின் அழகைக் கண்டு தலைவன் மயங்குதல் இயற்கை புணர்ச்சி என்பது தலைவனும் தலைவியும் முதன்முதலாக இறைவனுடைய அருளால் ஒருவரையொருவர் சந்தித்துக் கொள்கின்ற நிகழ்வே இயற்கை புணர்ச்சி என்பதாகும்.

**வாயில் மறுத்தல்**

வாயில் மறுத்தல் என்னும் இத்துறை,

1. வாயில் வேண்டல்
2. வாயில் மறுத்தல்
3. வாயில் நேர்வித்தல்
4. வாயில் நேர்தல்

என்னும் நான்கு அகத்துறைகளை உள்ளடக்கியது. பரத்தையிற் பிரிவு பற்றிக் கூறும் நம்பியகப் பொருள்,

"வாயில் வேண்டல் வாயில் மறுத்தல்
வாயில் நேர்வித்தல் வாயில் நேர்தல்என்
றாய பரத்தையின் அகற்சிசால் வகைத்தே"[24]

என, இந்நான்கு வகையைப் பற்றிக் கூறுகின்றது. எனவே, இவை ஒன்றோடொன்று தொடர்பு உடையவை என அறியலாம்.

**வாயில் மறுத்தல்-விளக்கம்**

மருதத்திணையில்; ஊடலும் ஊடல் நிமித்தமும் உரிப்பொருளாக அமைகிறது. அதனுள் ஊடலுக்குக் காரணமாகப் பரத்தமை ஒழுக்கம் கூறப்பட்டுள்ளது. அவ்வாறு பரத்தமையை நாடிச் செல்லும் தலைவனைத் தோழி மூலமாக வாயில் மறுக்கின்றாள் தலைவி. களவு வாழ்க்கையின் போது பல அன்பான இனிய சொல்லைக் கூறித் தலைவியின் அன்பைப் பெற்றவன் கற்பு வாழ்க்கை தொடங்கிய சில நாட்களிலேயே பரத்தையை நாடிச் செல்கிறான்.

அவ்வாறு, செல்லும் தலைவன், வாயிலாக பாணன், விறலியர், கூத்தர் போன்றோரை அனுப்புகிறான். அவர்களும் தலைவனின் கொடுமையை மறந்து அவனுக்குச் சார்பாகவே வாயில் வேண்டுகின்றனர். இதைத் தொடர்ந்து தலைவனும் வாயில் நேர்வதுண்டு. அதற்குத் தலைவி நேரடியாக வாயில் மறுக்காமல் தன் நலத்தில் பெரிதும் அக்கறை கொண்டுள்ள தோழியின் மூலம் வாயில் மறுக்கின்றாள்.

**வாயில் மறுக்கும் சூழல்**

வாயில் மறுக்கும் சூழலில் பெரிதும் பங்கு கொள்பவள் தோழியே. அவள் தலைவன் தலைவி, இருவரின் களவு, கற்பு ஆகிய இரு காலகட்டத்திலும் உடனிருந்து தலைவனின் தீய செயலை இடித்துரைத்துக்

கொண்டே இருப்பவள். தலைவியின் நலத்தில் பெரிதும் அக்கறை கொண்டவளாய், தலைவனை உரிமையோடு கண்டித்தாள்.

“தலைவன் பரத்தை வீட்டிற்குச் சென்று தங்கிப் பின்னர் தலைவியைக் காணவரும் போது அவன் உள்ளூர அஞ்சினான். இதனால் வீட்டினுள் புக அஞ்சினான். அகத்தினுள் புகுவதற்குத் தலைவன் பாணனை முதலில் வாயில் வேண்டும் பொருட்டு அனுப்பினான். சில சமயம் தலைவனே வாயில் வேண்டுவதாய்ப் பாடல்கள் உள்ளன. அப்படி வாயில் வேண்டும் போது தலைவியின் சார்பாகத் தோழி வாயில் மறுப்பாள்.”

### வாயில் மறுத்தலில் தோழி

களவுக் காலத்தில் தோழி பெரும்பான்மையான சந்தர்ப்பங்களில் தலைவன் தலைவியைக் காண வரும் போது திருமணம் செய்து கொண்டு இந்த ஊர் தூற்றுவதை நீக்கிப் பின் தலைவியை அழைத்துச் செல்லுமாறு கூறுவாள். கற்புக்காலத்தில் தலைவன் குறிப்பறிந்து வாயில் மறுப்பதுண்டு. தலைவனுக்குத் தலைவி வாயில் மறுப்பதும் உண்டு. தலைவனையும் தலைவியையும் இணைத்து வைப்பது தோழியின் நோக்கமாக இருந்தது. களவுக் காலத்தில் தலைவன் தலைவியிடம் கொண்ட அன்பு கற்புக் காலத்தில் குறைகிறது. இதனை இடித்துரைத்தும் தோழி வாயில் மறுக்கிறாள்.

### தலைவன் கூற்று

களவு வாழ்வில் தலைவன் கூற்று பல்வேறு இடங்களிலும் நடைபெறுகின்றது. மேலும், தலைவன் தலைவியின் வாழ்க்கையில் தொடர்புடைய வாயில்களாகப் பன்னிருவரை தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். இதனை,

“தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
பாணன் பாட்டி இளையர் விருந்தினர்
கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்
யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப”[25]

என்ற நூற்பாவின் மூலம் தலைவன் தலைவியோடு கூற்றுக்கு உரியவர்களை வாயில்கள் என்று தொல்காப்பியர் குறிப்பிடுவதைக் காணலாம். களவில் தலைவனுக்கான கூற்று நிகழும் இடங்களைத் தொல்காப்பியர் பின்வருமாறு பட்டியலிடுகிறார். இதனை,

“மெய்தொட்டுப் பயிறல் பொய்பாராட்டல்
இடம்பெற்றுத் தழாஅல் இடையூறு கிளத்தல்
..................................................................................
..................................................................................
நீக்கலி னாகிய நிலைமையும் நோக்கி
மடல்மா கூறும் இடனுமா ருண்டே”[26]

என்று தலைவன் தலைவியின் மெய்யினைத் தொட்டுப் பழகும் போதும், நலத்தினைப் பாராட்டல், இடம்பெற்று தழுவுதல், அவள் நிலையில் ஏற்படும் இடையூற்றைச் சொல்லுதல், இடையூற்றை மிகுதியாக நினைந்து இரங்குதல், கூட்டத்திற்கு உள்ளம் பொருந்துதல், இன்ப நுகர்ச்சி பெறுதல், தன் தீராத காதல் தன்மையைக் கூறல் ஆகிய எட்டும், மறுநாளும் பெற்ற வழி மகிழ்ச்சியும், அவள் பிரிந்த வழிக் கலங்கலும், நடந்தவற்றை நினைத்துப் பின் நிகழ்ந்தவற்றை உரைக்கும் போது கூற்று நிகழும்.

இவனைக் குற்றம் கூறிய பாங்கன் விரும்புகின்ற போதும், விரும்பிய வாயிலாகிய தோழியை இரந்து வலியுறுத்தும் போதும், ஊர், பேர், கேட்டு

நான் தொலைத்த மானைக் கண்டீரோ? போல் கேட்டுத் தன் தன்மையைச் சொல்லித் தோழியிடம் தன் தன்னுடைய குறையைத் தெரிவிக்கின்ற போதும், தோழி குறையுறுதல் தலைவியிடம் என்பதை மெய்யுறக் கூறுகின்ற போதும், நிறைவுற்று அமையாது இரத்தலும், நெஞ்சோடுகிளத்தலும், சொல் தலைவியைச் சார்தலின் புல்லிய நெஞ்சத்தனான போதும், களவு நீட்டித்தலால் தோழி இவனைக் குறை கூறுகின்ற போதும், தோழி இவனுடைய குறையை நீக்காத போதும், மடலேறுவேன் என்று கூறுகின்ற போதும் ஆகிய இருபத்தோரு இடங்களில் களவு வாழ்வில் தலைவன் கூற்று நடைபெறும் என்பதை அறியலாம். இதனை,

''தீண்டலும் இயைவது கொல்லோ - மாண்ட
வில்லுடை வீளையர் கல்இடுபு எடுத்த
..........................................................................................
மாறு கொண்டன்ன உண்கன்
நாறு இருங் கூந்தல் கொடிச்சி தோளே!''[27]

என்ற பாடலில், காட்டிடத்துத் தன் இனத்தைப் பிரிந்து எதிர்ப்பட்ட மான் மீது அத்தலைவியின் அண்ணன்மார் எய்த அம்பைப் பறித்தபோது அதன் கடையில் சிவந்த கண்ணையுடைய அவளது தோளை இனிக் கூடப் பெறுவேனோ? என்று பெருமையும் உரனும் உடைய தலைமகன் காதல் வெள்ளம் புரண்டோட தலைவியை மெய்தொட்டு பயின்றதைப் பாங்கனிடம் கூறுவதைக் காணமுடிகிறது. மேலும், களவு வாழ்க்கையில் ஈடுபடுகின்ற தலைமகனுக்கு ஏற்படும் கூற்றினை அகத்திணையியலில் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். இதனை,

''ஒன்றாத் தமரினும் பருவத்தும் சுரத்தும்
ஒன்றிய மொழியொடு வலிப்பினும் விடுப்பினும்

இடைச்சுர மருங்கில் அவள்தமர் எய்திக்
இரத்தலுந் தெளித்தலும் என இருவகையோடு
உரைத்திற நாட்டம் கிழவோன் மேன"[28]

என்பதன் மூலமாக களவு வாழ்வில் தலைவியோடு ஈடுபட்டததைச் சுற்றத்தார் அறிந்து வரைவுக்கு உடன்படாத இடத்திலும், தலைவியோடு உடன்போக்கிற்குப் பருவம் பொருந்தாத இடத்திலும், காட்டுவழிப் பாதையினும், கருத்திற்கு ஒன்றிய தோழி உடன் போக்கினைத் துணியுமிடத்தும், தோழி பாதுகாப்புச் சொல்லி விடுக்குமிடத்தும், காட்டுவழி இடைப்பாதையில் தலைவியின் தமர் எய்தி, அவளைத் திரும்ப அழைத்துச் செல்லுகின்ற போதும் கூற்று நிகழும்.

மேலும், தலைவி கலங்கித் துன்புறும்போது எழும் அலரின் காரணமாகவும், வாழும் நாள் சில என்பதைக் கூறி இளமையின் அருமையைக் கூறி, முயற்சியின் சிறப்பைச் சொல்லி, தகுதியது அமைதியும் பொருள் இன்மையின் இளிவையும் பொருள் உடைமையின் உயர்ச்சியையும் அன்பினது பெருக்கத்தையும் பிரிவினது அருமையையும் கூறி பொருள் ஈட்டுவதற்காக தலைவியைப் பிரிந்துச் செல்லும் காலத்திலும், புகழையும் பெருமையையும் எடுத்து வற்புறுத்தித் தூதுக்காகப் பிரியுங்காலத்தும், தன்பக்கத்தார்க்கு உதவும் பொருட்டுத் துணைவயிற் பிரிவின் கண்ணும் போன்ற இருவகை நிலையிலும் தலைவன் கூற்றுகள் அமையும் என்பதைக் காணமுடிகிறது.

களவின் கூற்றுகளைப் பற்றி வ.சுப.மாணிக்கனார், "அகத்திணை முற்றும் கூற்று வகையான் அமைந்த நாடகப் பாங்கினதாயினும், அக்கூற்றுகள் மக்கள் பெயர் பெறாது. தலைவன் தலைவி, தோழி, செவிலி, நற்றாய் எனக் கூற்றுபெயர்கள் பெறும். கூற்று பெயரனைய பொதுப்பெயர்களையும் பெறும்.

அ.்.தன்றி எவ்வகையான மெய்ப்பெயருக்கும், புனை பெயருக்கும் இடமில்லை'' என்று கூறுவதன் மூலம் உணர்ந்துகொள்ள முடிகிறது.

களவு வாழ்வில் தலைவன் தலைவியைக் கண்டு காதலுற்ற போதிலும், அதனைத் தோழனிடம் கூறுகின்ற போதும், தலைவியை அடைவதற்கும் அடைந்த பின்னும் அவளோடு எந்த சிக்கலுமின்றி காதல் நிகழ்வு சிறப்பாக அமைவதற்கும் அவளை மணந்து கொள்ள துணிகின்ற தோழியோடும் தலைவனுடைய கூற்றுக்கள் களவில் நடைபெறுவதைச் சங்கப்பாடல்கள் எடுத்துரைக்கின்றன. மேலும், தலைவனுடைய கூற்று நிகழும் இடத்தினைத் தொல்காப்பியர்,

''பண்பிற் பெயர்ப்பினும் பரிவுற்று மெலியினும்
அன்புற்று நகினும் அவட்பெற்று மலியினும்
ஆற்றிடை புறுதலும் அவ்வினைக் கியல்பே''[29]

என்ற நூற்பாவின் மூலம் எடுத்துரைப்பதைக் காணலாம். இதற்கு உரைவகுத்த இளம்பூரணர், இ.்.து அவன் மடல்மா கூறுவதற்கு நிமித்தமாகிய நீக்கத்தின் மாறுப்பட்டுக் கூறத் தலைமகள் இயல்பைக் கூறிப் பெயர்ப்பினும், அ.்.தறிந்து தான் உடன்படத் தலைமகன் வருத்தத்தினால் மெலிகின்றமை கூறிய இடத்தினும் தலைமகன் குறையை மறுப்புழி அன்பு தோன்ற இடத்தும், தோழி உடன்பாடுற்ற வழியும், தலைமகனும் மேற்கூறப்பட்ட மடல்மா கூறுதல் இடையூறுபடுதலும் தோழியற் கூட்டத்திற்கு இயல்பு என்றவாறு என்று கூறுவதன் மூலம் மேலும் தலைவன் கூற்று நடைபெறுவதை அறியமுடிகிறது.

தலைமகள் இளமைப்பண்பு கூறிப்பெயரும் போதும், இரக்க உள்ளத்துடன் மெலியும்போதும் அன்புற்றுச் சிரிக்கும் போதும், அவள் பெற்று மகிழும்போதும் வழி இடைச்செல்லும் போதும் தலைவன் கூற்றுநிகழும் என்பதை அறியலாம்.

தலைவன் கூற்று, தலைவி, தோழி, பாங்கன், பாணன் ஆகியோரிடம் அமையும் என்பதை உணர்ந்துகொள்ள முடிகின்றது. களவு வாழ்வில் தலைமகனின் இளமைப் பண்பு கூறிப் பெயர்த்த வழித் தலைவன் கூற்றினை,

> ''குன்றக் குறவன் காதல் மடமகள்
> வண்டுபடு கூந்தல் தண்தழைக் கொடிச்சி
> வளையள் முளைவாள் எயிற்றள்
> இளைய எளாயினும் ஆரணங் கினளே''[30]

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது. மேற்கூறிய வகையில் தலைவனின் கூற்றுக்கள் களவு வாழ்வில் நடைபெறுவதை உணரமுடிகிறது.

**தலைவி கூற்று**

களவு வாழ்வில் தலைவனுக்கு ஏற்படும் கூற்றினைப் போல தலைவிக்கும் கூற்றுகள் நடைபெறுகின்றன. இதனை,

> ''காமத் திணையிற் கண்ணின்று வரூஉம்
> நாணும் மடனும் பெண்மைய ஆகலின்
> குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை
> நெறிப்பட வாரா அவள்வயின் ஆன''[31]

என்பதன் மூலம் களவொழுக்கத்தில் நாணும் மடனும் அவள் கண்ணின்வழி வெளிப்படுத்துவாள் அன்றி தலைவி தன் விருப்பத்தைத் தலைவனிடம் நேரடியாக தெரிவிக்கமாட்டாள் என்பதை அறிந்துகொள்ளலாம். தலைவி தன்னுடைய எண்ணத்தைக் குறிப்பாலும் சூழ்நிலையாலும் வெளிப் படுத்துவாள் என்பதை அறியலாம்.

தலைவி தலைமகனிடம் நேரடியாக சென்று தனது காதலைக் கூறுவதாக சங்க இலக்கியத்தில் எந்த இடத்திலும் காணப்படவில்லை. இன்றும் பெரும்பான்மையான காதல் வாழ்வில் ஆண்களே தனது காதலை வெளிப்படையாகத் தலைவியிடம் நேரடியாகக் கூறுவதைக் காணமுடிகிறது. இதற்கு உரைவகுத்த இளம்பூரணர், ‘‘தலைவியிடத்து நிலைமை பெற்று வருகின்ற நாணமும் மடனும் பெண்மைக்கு அங்கமாகலின், காமவொழுக்கத்தின் கண் குறிப்பினாலும் இடத்தினாலும் அல்லது வேட்கை புலப்பட நிகழாது தலைவியிடத்து என்றவாறு என்று கூறுவதன் மூலம் அறியமுடிகிறது.

களவு வாழ்வில் தலைவி கூற்று நிகழ்கின்ற போதும் அவள் தமிழ்ப்பண்பாட்டு முறையோடு விளங்கியதை உணரலாம். ஆனால், இன்று சில பெண்கள் சென்று ஆண்களிடம் காதலை கூறுகின்ற நிகழ்வினையும் காணமுடிகிறது. இது காலமாற்றத்தின் காரணமாக நிகழும் பண்பாட்டுத் தேய்மானம் எனலாம். மேலும் உள்ளுறை, இறைச்சி, குறிப்புமொழி போன்றவற்றில் தலைவியின் கூற்றினை விரிவாகக் காணலாம்.

களவு வாழ்க்கையில் தலைவியின் கூற்றானது, தான் விரும்புகின்ற தலைவனைத் தலைவி மறைந்திருந்து பார்க்கின்ற போதும், தன்னுடைய தலைவனுக்குத் தான் இங்கு தான் இருக்கின்றேன் என்று காட்டுகின்ற போதும், தன்மீது அளவற்ற காதல் கொண்ட தலைவன் பேசுகின்றபோதும் தான் கொண்ட ஆசையினைத் தலைவி பேச இயலாது நிற்கின்ற போதும், தலைவன் தன்னை இரத்தலை மறுக்கின்ற போதும், மறுத்த பின்பு பிறகு அவனை ஏற்றுக் கொள்கின்ற போதும், தலைவனுடைய அன்பை உணர்ந்து குற்றமற்ற புன்னகையைச் சிறிது தோற்றுவிக்கின்ற போதும், தலைவனின் கை தன்னைத் தீண்டுதலால் ஏற்படுகின்ற கலக்கத்தினாலும், அப்போது

ஏற்படுகின்ற நாணத்தின் காரணமாகவும், தலைவியை விட்டு தலைவன் தூது, கல்வி, பொருள் போன்றவற்றின் காரணமாக பிரிகின்றேன் என்று கூறும் போதும் ஏற்படும் வருத்தத்தினாலும் கூற்றுகள் நிகழும்.

தலைவியின் உண்மை காதலால் பிரிவைத் தலைவன் நீக்கிய போதும், வந்தவழி கூட்டத்தை இகழ்கின்ற போதும், நெட்டு உயர்த்து வருந்துகின்ற போதும், தலைவன் தன்னடைய கருத்துக்களை எடுத்துரைத்து தலைவியைத் தெளிவிக்கும் இடத்திலும், அச்சம் மிக்க இடத்தும், தலைவன் தலைவியைப் பிரிந்த இடத்து கலங்குகின்ற போதும், தலைவனை மீண்டும் பெற்றவழி மகிழ்கின்ற போதும் கூற்று நிகழும்.

தோழி, தான் கூறியதை ஏற்றுக்கொள்ளாத போதும், தலைவியின் காதலை அறிந்து வீட்டில் பெற்றோர் சிறைவைத்தபோது தன் தலைவனோடு திருமணம் செய்துகொள்ளவேண்டும் என்ற தனது விருப்பத்தைத் தோழியிடம் கூறுகின்ற போதும் தலைவியின் கூற்றுகள் களவு வாழ்க்கையில் நடைபெறும் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

தலைவி தன் நெஞ்சோடு பேசிக்கொள்கின்ற போதும், தன் உயிர் போகும்படியான தான் விரும்பிய தலைவனை விடுத்துத் தனக்கு வேறொருவனோடு திருமண ஏற்பாட்டைப் பெற்றோர் செய்கின்ற போதும், செவிலி போன்றோர் இவளைக் கூர்ந்து பார்கின்ற போதும், தன் இயல்பான நிலையில் இருந்து புறமாற்றத்தை மறைக்கின்ற போதும், ஐவகை பொறிகளால் ஏற்பட்ட புணர்ச்சியைத் தெரிந்து, ஒத்த கேண்மையாளாகத் தோழி, தலைவியின் தன்மையை நாற்றம், தோற்றம் போன்ற எண்வகை நிலையால் தெரிந்த இயல்பின் கண்ணும், தான் விரும்பிய தலைவியை அடைய தலைவன் மடலேறுவேன் என்று கூறிய பொய்மையின் போதும், செயலற்ற தோழி தலைவியின் கண்ணீரைத் துடைக்கின்ற போதும்,

பெற்றோர் முருகனை அழைத்து வந்து, தலைவிக்கு வெறியாட்டு நிகழ்த்துகின்ற போது ஏற்படுகின்ற அச்சத்தின் போதும், தன்னுடைய களவினை பிறர் அறிந்து கொண்டபோதும், தன் இல் செறித்து காத்த போதும், தலைவன் பிழையில்லை தன் பிழையே என்று கருதிய இடத்திலும் தலைவி கூற்று நிகழும்.

அவன் நிலைத்த பண்புகளைத் தலைவி அறியும்போதும், காலமும் வழியும் தந்த இடரால் துன்பம் வந்தபோது மனஅழிவு ஏற்பட்ட போதும், அவா மிகுகின்ற பெருமை சான்ற மகிழ்ச்சியின் கண்ணும், தன் வயின் உரிமையும் தலைவன் இன்னும் திருமணம் செய்துகொள்ளாமல் காலம் தாழ்த்துவதால் அவன் அயன்மையும் போன்ற இடங்களில் களவு வாழ்வில் தலைவி கூற்று நடைபெறுகின்றது என்பதைத் தெளிவாக உணரமுடிகிறது. இதனை தொல்காப்பியர்,

"மறைத்தவற் காண்டல் தற்காட் டுறுதல்
நிறைந்த காதலில் சொல்லெதிர் மருங்கல்
வழிபாடு மறுத்தல் மறுத்தெதிர் கோடல்
..........................................................................
காமஞ் சிறப்பினும் அவனறி சிறப்பினும்
..........................................................................
அன்னவு முளவே ஓரிடத் தான"[32]

என்ற நூற்பாவின் மூலம் தலைவி கூற்று நிகழ்வினை அறிந்துகொள்ள முடிகின்றது. முல்லைக் கலியில் இதனை,

"தேங்கொள் பொருப்பன் சிறுகுடி எம்ஆயர்
வேந்தூட்டு அரவத்து நின்பெண்டிர் காணாமல்
காஞ்சித்தா துக்கன்ன தாதெரு மன்றத்துத்

தூங்குங் குரவையுள் நின்பெண்டிர் கேளாமை
ஆம்பற் குழலாற் பயிர்பயிர் எம்படப்பைக்
காஞ்சிக் கீழ் செய்தேங் குறி”[33]

என்பதன் மூலமாக களவு வாழ்வில் தலைவிகூற்று நிகழ்வதைக் காணலாம். தலைவியின் கூற்றானது தலைவன், தோழி, செவிலி, வாயில்கள் ஆகியோர்களிடம் அமைந்திருப்பதனை சங்க இலக்கியங்களின் மூலமாக அறியலாம்.

**பாங்கன் கூற்று**

தலைவன் தலைவி கூற்றினைப் போலவே பாங்கனின் கூற்றும் களவு வாழ்வில் பன்னிரெண்டு வகையில் அமையும் என்பதை அறியலாம். இதனை தொல்காப்பியரும்,

“பாங்கர் நிமித்தம் பன்னிரண் டென்ப”[34]

மேற்கூறிய நூற்பாவில் பாங்கன் கூட்டம் பன்னிரெண்டு வகையில் நடைபெறுவதை உணரலாம். இதற்கு உரைவகுத்த இளம்பூரணர், “பலவகை மனத்திற் பாங்கராயினார் துணையாகுமிடம் இத்துணையென வரையறுத்துணர்த்துதல் நூற்பாயிற்று. பாங்கராயினர் துணையாகக் கூடும் கூட்டம் பன்னிரண்டு வகையென்றவாறு. பிரம்மம் முதலிய நான்கும், காந்தருவப் பகுதியாகிய களவும், உடன்போக்கும் அதன்கண் கற்பின் பகுதியாகிய இற்கிழத்தியும், காமக்கிழத்தியும், காதற்பரத்தையும் அரசும் முதலாகிய மூன்றுமென இவை” என்று கூறுவதன் மூலம் அறியலாம்.

காமம் சாலா இளமையோள் வயின் ஏமம் சாலா இடும்பை எய்திய தலைவனை அளவோடு கூட்டுவது. காமக்கூட்டத் தொடக்கத்தில் காட்சி,

ஐயம், துணிவு நிகழ்ந்தவுடன் மேலும், புணர்ச்சிக்கு முயலாமல் பாங்கனைக் கொண்டு கூடலாம் என எண்ணித் தலைவன் பாங்கனை அணுகி அவனால் கூடுவது இயற்கைப் புணர்ச்சியாகும். பின்னர் இடந்தலைப்பாடு கொண்டோ கொள்ளாமலோ பாங்கன் நிமித்தமாகக் கூடுவது.

தோழி களவொழுக்கத்தில் உடன்போக்கிற்குத் துணை நிற்பதுபோல் பாங்கன் துணை நிற்க உடன்போவது களவொழுக்க முடிவில் தலைவன் தலைவியின் உற்றார் உறவினருடன் பேசி, மணவினை நிகழ்ச்சிக்குத் துணையாக நிற்க மணந்து கூடுவது போன்றவற்றின் மூலமாக களவு வாழ்க்கையில் காணமுடிகிறது. ஆனால், பாங்கன் அதிகமாக பேசவில்லை. தலைவனே பாங்கனிடம் கூற்று நிகழ்த்துகின்றான் என்பதை சங்கப் பனுவல்களின் மூலமாக அறியமுடிகின்றது. இதனை நக்கீரனார் தனது பாடலில்,

"பெருவரை மிசையாது நெடுவெள் அருவி
முதுவாய் கோடியர் முழவின் ததும்பி
சிலம்பின் இழிதரும் இலங்குமலை வெற்ப
நோதக் கன்றே காமம் யாவதும்
நன்று என உணரார் மட்டும்
சென்றே நிற்கும் பெரும் பேதைமைத்தே"[35]

என்னும் பாடலில், பெரிய மலையின் உச்சியில் உள்ளதாகிய நெடிய வெள்ளிய அருவி, அறிவு வாய்த்தலையுடைய கூத்தர்களின் முழவு ஒலிப்பதைப் போல ஒலித்துப் பக்கமலைகளில் கீழ் இறங்கி வீழும் காட்சி சுட்டப்படுகின்றது. இத்தகைய தன்மை விளங்கும் மலைக்குப் பகுதியின் தலைவனே, காமம் என்பது தன்னைச் சிறிதும் நன்மையுடையது என உணரும் அறிவில்லாதவரிடத்தும் சென்று தங்குகின்ற பெரிய அறிவில்லாமையை உடையது. ஆதலின், அது வெறுக்கத்தக்கது என்று

தலைவனுக்கு அறிவுரை கூறும்போது பாங்கனின் கூற்றினை காணமுடிகின்றது. மற்ற பெரும்பான்மையான இடங்களில் தலைவனே பாங்கனிடம் கூற்று நிகழ்த்துகின்றான்.

தலைவிக்கு அவளுடைய இன்ப துன்பத்தை கூறுவதற்கு தோழி உள்ளதைப் போல, தலைவனுக்கு உறுதுணையாகப் பாங்கன் இருப்பதை பாங்கன் கூற்றின் மூலமாக அறிந்துகொள்ள முடிகின்றது. மேலும், பாங்கன் கூற்றினை,

> ''ஆங்ஙனும் புணர்ந்த கிழவோன் தன்வயின்
> பாங்க னோரறிற் குறிதலைப் பெய்தலும்
> ....................... தலைப் பெயல் மரபே''[36]

என்ற இறையனார் களவியல் நூற்பாவின் மூலம் அறிந்துகொள்ளமுடிகிறது.

பாங்கன் நிமித்தத்தை வெள்ளைவாரணர் “இது களவொழுக்கத்தில் தலைவன் தலைவி இருவரும் கூடுதற்கு நிமித்த மாவன பன்னிரெண்டு என்பர் . அவையாவன காட்சி, ஐயம், துணிவு என இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னர்க் கூறிய மூன்றும், குறிப்பறிதலின் பயனாய்த் தோன்றும் வேட்கை முதல் சாக்காடு ஈறாகச் சொல்லப்பட்ட ஒன்பதும் ஆகும்.

இவை பன்னிரெண்டுமே அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற் காமக்கூட்டத்திற்குக் காரணமாவனவாதலாற் பாங்காம் நிமித்தம் எனப்பட்டன. பாங்காம் நிமித்தம் என்பது பாங்கு ஆம் நிமித்தம் எனப்பிரியும். பாங்கு-துணை. நிமித்தம் காரணம். பாங்கா நிமித்தம் என்பதே ஏடெழுது வோரால் பாங்கர் நிமித்தம் எனப் படிக்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்பதையும் அறிய முடிகின்றது.

தலைவன் தலைவியின் காதல் வாழ்க்கையில் தலைவனோடு அவனுடைய காதலைக் கற்பாக மாறும் வரை பாங்கன் உறுதுணையாக இருந்து கூற்று நிகழ்த்துவதையும், கற்பிற்கும் அவன் துணையாக விளங்கியதை சங்கப் பனுவல்களின் மூலமாக அறிந்துகொள்ளலாம். பாங்கன் கூட்டத்தின் நிகழ்வினை நம்பியகப்பொருள்,

‘‘சார்தல் கேட்டல் எதிர்மறை
நேர்தல் கூடல் பாங்கியற் கூட்டல் என்று
ஆங்குஎழு வகைத்தே பாங்கற் கூட்டம்’’[37]

என்றும், மேலும்,

‘‘தலைவன் பாங்கனைச் சார்தலும் பாங்கன்
தலைவனை உற்றது வினாதலும் தலைவன்
உற்றது உரைத்தலும் கற்றறி பாங்கன்
...................................................... பாங்கியற்
கூட்டலும் என்றாங்கு ஈட்டுறால் ஆறும்
காட்டிய பாங்கற் கூட்டத்து விரியே’’[38]

என்ற நூற்பாக்களின் மூலமாக தலைவன் பாங்கன் உதவியால் தலைவியைக் கூடும் கூட்டம் பாங்கற் கூட்டமாக இருபத்து நான்கு விரிகளை உடையதை உணரமுடிகிறது.

தலைவன் தன் உள்ளத்தை தலைவியிடம் பறிகொடுத்துவிட்டு அவளை நினைத்து பாங்கனிடம் புலம்புகின்றான். ‘‘பாணர்கள் பரிசிலாகப் பெற்ற விரிந்த கழுத்து மயிரைக் கொண்ட நல்ல குதிரையின் கவிந்த காற்குளம்பு மோதுதலால் செப்பமாக்கப்பட்ட மலையின்கண் உள்ள சிறிய வழியில், இளைக்காமல் இரவலர் ஏறுகின்ற பொறையின் புகழ் மிக்க

கொல்லிமலையின் உயர்ந்த இடத்தே அகன்ற இலையையுடைய காந்தளின் அசையும் பூங்கொத்துகளில் வண்டுகள் பாய்ந்து தேனை நுகரும் அத்தகு தேனடைகள் உள்ள அம்மலையில் தெய்வத்தாற் செய்து வைத்த செயற்கைத் தொழில் மாட்சிமைப்பட்ட பாவை போன்ற அத்தலைவி என்னைக் கொலை செய்யும் வண்ணம் ஆராய்ந்து அறிந்தனள். அவளால் துன்பம் மிகுதியாயிற்று எனலாம்.

இத்தகைய என் வருத்தத்தை நீ கண்ணாற் கண்டும். அவளுடன் கூட்டுவிக்கும் முயற்சியை செய்யவில்லை எனின் அ∴து உன்னால் வந்தன்று என் ஊழ்வினையால் வந்ததென அவ்வூழ் வினையே என்று தலைவன் பாங்கனிடம் கூறுவதைப்,

“பரிசில் பெற்ற விரி உளை நல்மான்
கவி குளம்பு பொருத கல் மிசைச் சிறுநெறி
இரவலர் மெலியாது ஏறும், பொறையன்
உரைசால் உயர்வரைக் கொல்லி குடவயின்
அகல் இலைக் காந்தள் அலங்கு குலைப் பாய்ந்து
பறவை இழைத்த பல் கண் இறாஅல்
தேனுடை நெடுவரை தெய்வம் எழுதிய
வினை மாண் பாவை அன்னோள்
கொலை சூழ்ந்தனளால் நோகோ யானே”[39]

என்பதன் மூலமாக தலைவன் பாங்கனிடம் நீயே என் காதலை சேர்த்து வைக்கவில்லை என்றால் அந்த ஊழினை தான் குறைகூற வேண்டும் என்று கூறுவதன் மூலம் பாங்கன் கூற்றின் சிறப்பினை உணரமுடிகின்றது.

பாங்கன் கூற்று என்பது களவு வாழ்க்கையில் தலைவனுக்கு இன்றியமையாத ஒன்றாக விளங்குவதைக் காணமுடிகிறது. வ.சுப.

மாணிக்கனார், அற்றாள் தன் உள்ளம் கவர்ந்த ஆகத்தைத் தழுவும் நாளே என்றும், அதன்பின் வீண் வாழ்க்கை சிறுபொழுதும் வேண்டாம் என்றும், ஆராக் காதலால் தன் நண்பன் அதிரும் குறிக்கோளைச் சொல்லுகின்றான் கேளிர் கேளிர் என்று தோழனை அன்பு தோன்ற அடுத்தடுத்து விளித்தல் காண முடிகின்றது. உண்மை நட்பு மறுப்பறியாது. பாங்கற் கூட்டம் பற்றி 27 பாடல்கள் உள. இவற்றுள் பாங்கன் கூற்றாய் வருவன இரண்டே ஆகும்.

"எஞ்சிய இருபத்தைந்தும் தலைவன் கூற்றாவன"[41]

என்று கூறுவதன் மூலமாக களவில் பாங்கன் கூற்றினை அறிந்துகொள்ள முடிகின்றது. மேற்கூறிய வகையில் களவில் தலைவன் தான் விரும்பிய பெண்ணை அடைந்து இன்பமாக வாழ்வதற்கு துணையாகப் பாங்கன் கூற்றானது அமையும் என்பதை தெளிவாகக் காணமுடிகின்றது.

தலைவன் ஒரு பெண்மீது காதல் கொண்டிருக்கிறான். அவன் காதல் ஒருதலைக் காதலாகத் தோன்றுகிறது. தன்னுடைய காதல் வெற்றி பெறாததால் தலைவன் உடல் மெலிந்து காணப்படுகிறான். தலைவனுடைய மெலிந்த தோற்றத்தைக் கண்ட தோழன் (பாங்கன்) தலைவனுக்கு அறிவுரை கூறி, அவனைத் தேற்றுகிறான். இதனை,

"பெருவரை மிசையது நெடுவெள் ளருவி
முதுவாய்க் கோடியர் முழவின் ததும்பிச்
சிலம்பின் இழிதரும் இலங்குமலை வெற்ப
நோதக் கன்றே காமம் யாவதும்
நன்றென உணரார் மாட்டும்
சென்றே நிற்கும் பெரும்பே தைமைத்தே"[41]

என்கின்றது.

தலைவன் ஒரு பெண்ணின்மீது காதல் கொண்டு, காமநோயால் வருந்துகிறான். அவன் நிலையைக் கண்ட தோழன் அவனுக்கு அறிவுரை கூறுகிறான். இதனை,

''காமம் காமம் என்ப காமம்
அணங்கும் பிணியும் அன்றே நினைப்பின்
முதைச்சுவற் கலித்த முற்றா இளம்புல்
மூதா தைவந் தாங்கு
விருந்தே காமம் பெருந்தோ ளோயே''[42]

என்கிறது.

**தோழி**

சங்க இலக்கிய களவு வாழ்க்கையில் உள்ள பாடல்களில் பெரும்பான்மையான கூற்றுகள் தோழியின் கூற்றாக அமைந்திருப்பதைக் காணமுடிகின்றது. தோழியின் கூற்று நடைபெறுவதைத் தொல்காப்பியர் அகத்திணையியலில்,

''தலைவரும் விழும நிலை எடுத்துரைப்பினும்
போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும்
நீக்கலின் வந்த தம்முறு விழுமமும்
வாய்மையும் பொய்மையும் கண்டோர்ச் சுட்டித்
தாய்நிலை நொக்கித் தலைப்பெயர்த்துக் கொளினும்
நோய்மிகப் பெருகித்தன் னெஞ்சுக லுழ்ற் தோளை
அழிந்தது களையென மொழிந்தது கூறி
வன்பறை நெருங்கி வந்ததன் திறத்தோடு
என்றிவை எல்லாம் இயல்புற நாடின்
ஒன்றித் தோன்றுந் தோழி மேன''[43]

என்ற நூற்பாவின் மூலம் தலைவிக்கு வருகின்ற துன்பத்தை எடுத்துக் கூறுகின்ற போதும், தலைவன் தலைவியை உடன்போக்கிற்கு அனுப்பிவைக்கின்ற போதும், தலைவனைப் பொருள் பிரிவு போன்றவற்றிற்கு விடுக்கும் போதும், உடன்போக்கில் தலைவன் தலைவி இருவரும் செல்லும் போது வழியில் ஏற்படும் துன்பங்களைப் பற்றி கூறும் போதும், நற்றாய், செவிலி, கண்டோர் ஆகியோர் கூறிய வாய்மை, பொய்மை செய்திகளைக் கேட்டு தலைவி உற்ற துயரை நீக்குமிடத்தும் தலைவன் பிரிந்து சென்றதனால் அவனை நினைத்து வருத்தமுற்று இருக்கின்ற தலைவியை சென்றதை மறந்துவிட்டு நடந்ததைக் கூறி தலைவன் அன்பை வற்புறுத்தும் போதும் இதுபோன்ற பல்வேறு நிலைகளில் தோழியின் கூற்றுகள் நிகழ்வதை அறியலாம்.

களவுப் பாடல்களில் 481 பாடல்கள் தோழியின் கூற்றாகவே அமைந்திருப்பதைச் சங்கப் பனுவல்கள் மூலமாகக் காணமுடிகிறது. தலைவனுடைய காதலை தலைவிக்கு எடுத்துரைத்து அவளின் இசைவை பெற முயற்சிப்பதை, “தோழி வாழ்வாயாக! மாயோனைப் போன்ற பெரிய மலைப்பக்கம். அங்கு, அவனுக்கு முன்பிறந்த வெள்ளை நிறத்தவன் ஆன பலதேவனைப் போன்று வெண்மையாய் விளங்கும் அருவிகள். அத்தகு மலைக்குரிய தலைவன் நாள்தோறும் நம் புனத்தின் பக்கத்தே வந்து நம்மை விரும்பி வருந்தினான் என்று கூறும் எனது உண்மையான உரையைத் தெரிந்து கொள்ளவில்லை.

என்னைக் கேட்பதை விடுத்து நீயும் அவனை நோக்குவதுடன் உன்னிடத்து அன்பு கொண்ட தோழியரோடும் ஆராய்ந்து அறியத்தக்கது இதுவென அறிந்து பின்பு அளவளாவுக” என்று கூறுவதைக் காணலாம். கபிலர் தனது பாடலில் இதனை,

‘‘மாயோன் அன்ன மால் வரைக் கவாஅன்
வாலியோன் அன்ன வயங்கு வெள் அருவி
அம் மலைகிழவோன் நம் நயந்து என்னும்
வருந்தினன் என்பது ஓர் வாய்ச் சொல் தேறாய்
நீயும் கண்டு நுமரொடும் எண்ணி
அறிவு அறிந்து அளவல் வேண்டும்’’[44]

என்று தலைவியின் மனநிலையை மாற்ற தோழி முயற்சிப்பதைக் காணலாம். தோழிக்குக் கூற்று நிகழுமிடத்தைத் தொல்காப்பியர் களவியலில் சுட்டுகிறார். இதனை,

‘‘நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பினும் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி யெதிர்ப்பா டுள்ளுறுத்து வரூஉம்
உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர் பொருள் நாட்டத் தானும்
..............................................................................
அங்கதன் தன்மையின் வன்புறை உளப்படப்
பாங்குற வந்த நாலெட்டு வகையினும்
தாங்கருஞ் சிறப்பின் தோழி மேன’’[45]

என்ற நூற்பாவில், தலைவியின் மேல் நறுமணம் விரவிக்கமழும் மணமும், தோற்றத்தில் மாற்றமும் ஒழுக்க வேறுபாடும், உண்டி சுருக்கலும், செயல் மாற்றங்களும், செய்வினைகளை மறைத்தலும், தனியே செல்லலும், தனியே துயில்தலும், மேற்கூறிய உணர்ச்சி ஏழும் உணர்ந்தபின், தோழி உண்மையானும் பொய்யானும் பல பொருள்கள் பற்றிப்பேச அவள் உண்மை

நிலை அறியும் விருப்பத்தானும், தோழியிடம் தன் குறைகளைக் கூற முயன்ற தலைவனைத் தெரியாதாள் போல் மாற்ற முயல்கின்ற போதும், உலக வழக்கப்படி தலைவியை மணம் செய்துகொள்க என்று கூறும் போதும் கூற்றுகள் நிகழும்.

மேலும், என்னால் இயலாது அகல முயலும் போதும், தலைவியிடமே நேரே அறிவித்துப்பின் என்னிடம் வா என்கின்ற போதும், தலைவிக்கு பேதைமையை ஏற்றிக் கூறுகின்ற போதும், முன்போல் முயல்க என உரைக்கின்ற போதும், அஞ்சி அச்சுறுத்துகின்ற போதும், வந்த தலைவனைப் பொய்கூறிப் பொறுத்த காரணத்தை அறிந்த இடத்திலும், காதலில் தலைவனும்> தலைவியும் இணைந்த பின்பு அவனிடம் வணங்கி பேசுகின்ற போதும், தலைவனுடைய குறையைத் தலைவியிடம் கூறுகின்ற போதும், மறைத்த தலைவியின் முதல் மூன்று கூட்டங்களை உணர்ந்து பின் நிகழும் நிகழ்ச்சிகளின் போதும் கூற்று நிகழுகின்றது.

மேலும், தலைவி உடன்பட்டதைத் தலைவிடம் கூறும் போதும், பலரும் அறிந்தால் நகைப்பிற்கு இடமாகுமெனக் கூறுகின்ற போதும், தலைவன் கூட்டத்தை வேண்டுகின்ற போதும், பிரிவு வேண்டுகின்ற போதும், தலைவி விருந்து புறந்தருதலை விரும்பிய இடத்தும், கூடியதை அறிந்த தோழி அறியாதாற் போல் நின்ற மடச்சிறப்பின் போதும், தலைவியைப் பாதுகாத்துக் கொள்க எனக் கூறுமிடத்தும், செங்கடு மொழியாள் தலைவன் குறையைக் கூறி அன்பு நெகிகழப் பிரிந்தோளாகிய தலைவியின் வழிச்சென்று அன்பை வற்புறுத்தற் கண்ணும், தலைவன் வரும் வழிக்கண் ஏற்படும் தீமையால் ஏற்படும் கலக்கத்தின் போதும் கூற்றுகள் நிகழும்.

மேற்சுட்டியவையன்றி, காவல் கடுமையானதால் செயலற்ற இடத்தும், இடம், காலம் இவற்றைக் கூறாது விலக்கும் நிலையும், தலைவனது நாடு,

ஊர், இல், குடிப்பெருமை, பிறப்பு, சிறப்பு இவற்றை நோக்கி அவன் சொன்னதைக் கேட்டு வரைதல் வேண்டுகின்ற போதும், தாயாரின் ஐயச் செய்கையை மாற்றி உண்மையைக் கூறுகின்ற போதும், அவள் காப்பு மிகுதியால் நிலையை ஆய்கின்ற போதும், பிறன் வரைவினை இவள் தமர் மறுக்கும் போதும், முன்னிலை அறத்தொடு நிலை என்ற இரு வகையால் குற்றம் நீங்கிய சொல்லைத் தாயிடம் உணர்த்தும் போதும், மணத்திற்கு உடன்பட்டபின் தலைவனை விரைவுபடுத்தக் கோரும் போதும், தலைவியைக் காத்திருக்குமாறு வற்புறுத்துவது உளப்பட சிறப்புற வந்த முப்பத்திரண்டு வகையாக தடுத்தற்கரிய சிறப்பினையுடைய தோழி கூற்றுக்கள் அமையும் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

தலைவன் தலைவிக்குள்ள காதலை சிறப்பானதாகவும் எவ்வித இடையூறின்றியும், இடையூறு ஏற்பட்டாலும் அதனைத் தீர்த்து இருவரின் காதலைக் கற்பாக மாற்றும் வரை தோழியின் பங்கு சிறப்பு பொருந்துவதாக அமைவதைக் காணலாம்.

வ.சுப. மாணிக்கனார் தோழி கூற்றின் சிறப்பினை, ‘‘சங்க இலக்கியத்தில் 882 களவுப் பாடல்கள் உள. இவற்றுள் 40 பாடல்கள் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம் என்ற மூன்று வகைக்கும் உரியன. எஞ்சிய 842 பாடல்கள் 95 விழுக்காடு தோழியற் புணர்ச்சி என்னும் ஒரு வகைக்கே உரியன. இதனால் தோழியின்றி களவொழுக்கம் நீளாது என்பதும் தெளிவாகின்றது’’ என்று கூறுவதன் மூலம் அறியலாம்.

மு.வரதராசனார் காதல் வாழ்வில் தோழி கூற்றின் சிறப்பை, தலைவன் தலைவியைக் கண்டு காதல் கொண்ட பிறகு, அந்த உறவை மேலும் வளர்த்துப் பழகுவதற்குத் துணையாக இருந்து உயிர்த் தோழியாகப்

பழகியவள் அவளே. தலைவன் ஒருநாள் தோழியிடம் சென்று தன் காதலை எடுத்துரைத்து அவளுடைய உதவியைக் கோரினான். அவனுடைய உண்மை நிலை அறிந்த தோழி தலைவியும் அவனிடம் காதல் கொண்டிருப்பதை எடுத்துரைக்கின்றாள்'' என்பதன் மூலம் அறியலாம்.

தலைவியைக் காண இரவில் வந்து செல்லுகின்ற வழியில் ஏற்படும் பிரச்சினைகளையும், அதனால் ஏற்படும் விளைவுகளையும் நயமாகக்கூறி அதனால் நீ விரைவில் அவளை மணந்துகொள் என்று தோழி தலைவனிடம் கூறுகின்றாள். இதனைக் கபிலர் தனது பாடலில்,

''கான மான் அதர் யானையும் வழங்கும்
வான மீமிசை உருமுநனி உரறும்
அரவும் புலியும் அங்சுதகவு உடைய
.........................................................................
ஊதல் வேண்டுமால் சிறிதே வேட்டொடு
வேய்பயில் அழுவத்துப் பிரிந்தநின்
நாப்பயிர் குறிநிலை கொண்ட கோடே''[46]

என்று தலைவனுக்கும் தலைவிக்கும் உள்ள காதலை ஊரறிய திருமணம் செய்து வாழவேண்டும் என தோழி கூற்று நிகழ்த்துவதைக் காட்டுகின்றார். தோழியின் கூற்று களவில் சிறப்புற்று இருப்பதை உணரமுடிகிறது.

## செவிலித்தாய், நற்றாய் கூற்றுகள்

தலைவன் தலைவியின் காதல் வாழ்க்கையில் செவிலி நற்றாயின் கூற்றுகளும் இன்றியமையாதனவாக அமைந்துள்ளது. தலைவியின் செயல்பாடுகளில் மாற்றத்தைக் காணும் போதும் தலைவியின் காதலை தோழியின் மூலம் அறிந்து நற்றாயிடம் தெரிவிக்கின்ற போதும் தலைவனோடு

உடன்போக்கு சென்றதை எண்ணி துன்பப்படுகின்ற நிலையிலும் செவிலித்தாயின் கூற்றுகள் களவு வாழ்க்கையில் நடைபெறுவதை அறிந்துகொள்ள முடிகின்றது. களவில் செவிலிக்கூற்று நிகழ்வதை தொல்காப்பியர்,

''களவல ராயினுங் காமமேற் படுப்பினும்
அளவுமிகத் தோன்றினுந் தலைப்பெய்து காணினுங்
கட்டினுங் கழங்கினும் வெறியனெ இருவரும்
கற்பின் ஆக்கத்து நிற்றற் கண்ணும்
பிரிவின் எச்சத்து மகள்நெஞ்சு வலிப்பினும்
இருபாற் குடிப்பொருள் இயல்பின் கண்ணும்
இன்ன வகையிற் பதின்மூன்று கிளவியொடு
அன்னவை பிறவுஞ் செவிலி மேன''[47]

என்ற நூற்பாவின் வழி காதல் வாழ்வில் செவிலிக் கூற்று நிகழ்வதை அறிந்துகொள்ளமுடிகிறது. இதற்கு உரைவகுத்த இளம்பூரணர் ''மேற்றலைவற்கு தலைவிக்குந் தோழிக்குரிய களவியெல்லாங் கூறி இனிச் செவிலிக்குரிய களவி யுணர்த்தல் நுதலிற்று என்கின்றார்.

களவலராதல் முதலாகச் சொல்லப்பட்ட பதின்மூன்று கிளவியும் அத்தன்மைய பிற கிளவியும் களவு காலத்துச் செவிலியின் மேலன என்றவாறு. இவற்றுள் தோழியை வினாதலென வேறொரு களவியாக ஓதினாராயினும், அதன் முன்பு நிகழும் கிளவியெல்லாம் அவளை வினாதற்குக் காரணமாதலின் அவை யீண்டுப் பதின்மூன்றென வெண்ணப்பட்ட வென்க'' என்று கூறுவதன் மூலம் அறியலாம்.

தலைவியின் களவு வெளிப்பட்ட போதும், களவொழுக்கம் தலைவியின் மெய்யின் வழி வெளியான போது; தலைவியின் பெண்தன்மை

மிக்க போதும், கட்டு, கழங்கு, வெறியாடல் போன்றவற்றால் செய்தி தெரிந்த போதும், வெறியாடச் சென்ற போதும் தோழியால் இடையூறு நேர்ந்த இடத்திலும், தலைவிக் கனவில் அரற்றுதலை அறிந்த போதும், தோழியை வினாவும் போதும், தலைவியின் நன்மைக்காகத் தெய்வத்தை வாழ்த்துமிடத்தும், உடன்போக்கு நிகழ்ந்த பின்பு தோழியொடு இணைந்து தலைவியின் கற்பின் ஆக்கத்திற்குத் துணைநிற்கும் போதும் தலைவியைப் பிரிந்த காலத்தும், மகள் நெஞ்சு திண்மையான போதும் தலைவன் தலைவி குடிப்பெருமையை நினைக்கும் போதும் போன்ற இடங்களில் செவிலியின் கூற்றுகள் நிகழ்வதை அறியமுடிகிறது.

தோழி எப்படி தலைவிக்கு முழு உரிமை உடையவளோ அதனைப்போல செவிலி நற்றாய்க்கு முழு உரிமை உடையவளாக விளங்குகிறாள். தலைவியைத் தன்னுடைய மகளைப் போன்று பேணி காத்து நடத்தி வருவாள். களவு வாழ்வில் தலைவியின் செயல்பாடுகளில் மாற்றம் காணும் முதல் உடன்போக்கு நிகழ்கின்றவரை செவிலியின் கூற்றுகள் களவில் நடைபெறுவதை உணரலாம்.

தனது மகள் ஒரு தலைவனோடு காதல் புரிவதாக ஊர் மகளிர் பழிச்சொல் தூற்றுவதைக் கேட்ட செவிலித்தாய் தனது மகளாகிய தலைவியின் தோழியிடம் அச்சம் மிகுவதற்குக் காரணமாகிய கொல்லிமலை பெரிய அணிகலனையுடைய சேரனுக்கு உரியது. கரிய கண்களையுடைய தெய்வத்தால் அம்மலையின் மேற்குபுறத்தில் எழுதப்பட்ட நல்ல இயல்புடைய பாவையைப் போன்ற மெல்லிய இயல்புடையவள் தலைவி ஆவாள். அவள் பரந்த அடிப்பகுதியை உடைய உரலில் பகுத்து வாயால் பாடும் வள்ளைப் பாட்டினைப்பாடி உலக்கையை ஓச்சி இடிக்கும்போது அயலார் குறை கூறுதலும் செய்வர். இத்தகை அறிவின்மையை உடைய ஊரினர் கூறும்

சொற்களுக்காக வருந்தி என்ன பயன்? என்று செவிலி தோழியிடம் கூற்று நிகழ்த்துவதைக் காணமுடிகிறது. இதனை,

''பாஅடி உரல பகுவாய் வள்ளை
ஏதில் மாக்கள் நுவலறலும் நுவலிய
அழிவது எவன்கொல் இப்பேதை ஊர்க்கே?
பெரும்பூண் பொறையன் பேஎம் முதிர் கொல்லிக்
கருங்கட் தெய்வம் குடவரை எழுதிய
நல்இயல் பாவை அன்ன இல்
மெல்இயல் குறுமகள் பாடினள் குறினே''[48]

என்ற பாடலின் மூலம் தலைவியின் காதல் நிலையை அறிந்த செவிலித்தாய் தோழியிடம் வினவுவதை அறியமுடிகிறது.

தான்பேணிக்காத்து வளர்த்த தலைவி தன் குடும்பத்திற்கு தெரியாமல் களவில் ஈடுபடுவதை ஊரவரின் சொற்களின் மூலம் அறிந்து தன் மகளா இப்படி செய்வாள் என்ற பதற்றத்தில் தோழியிடம் வினவுவதை உணரமுடிகிறது.

செவிலிக்குக் கூற்று நிகழ்வதை, ''இது செவிலிக்குக் கூற்று நிகழுமாறு கூறுகின்றது. அக்கூற்றுச் செவிலி தானே கூறப்படுவனவும், தலைவியிற் தோழியுங் கொண்டு கூற்றாகக் கூறப் படுவனவுமென இருவகையாகும். இக்கூறப்பட்ட பதிமூன்று கிளவியும் அவை போல்வன பிறவும் செவிலிதானே கூறப்படுவனவும் தலைவியும் தோழியும் அவள் கூற்றாயக் கொண்டெடுத்து மொழியப்படுவனவுமாய்ச் செவிலிக்குரியவாம் 'இன்னவகை' என்றார்.

தன் கூற்றங்கொண்டு கூற்றுமாய் நிகழுமென்றற்கு என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடுவதைக் காணமுடிகிறது. செவிலிக்குக் கூற்று நிகழுமிடத்தினைக் கயமனார் பின்வரும் பாடலில் புலப்படுத்துகின்றார். இதனை,

> ‘‘பாலும் உண்ணாள் பந்துடன் மேவாள்
> விளையாடு ஆயமொடு அயர்வோள் இனியே
> எளிது என உணர்ந்தனள் கொல்லோ முளிசினை
> ஓமைக்குத்திய உயர்கோட்டு ஒருத்தல்
> வேனிற் குன்றத்து வெவ்வறைக் கவாஅன்
> மழை முழங்கு கடுங்குரல் ஓர்க்கும்
> கழை திரங்கு ஆர்இடை அவனொடு செலவே?’’[49]

என்பதன் வழி, தன் மகளை நினைத்து செவிலித்தாய் மனம் வருந்தி புலம்புவதைக் காணமுடிகிறது.

இன்றும் களவில் ஈடுபட்டு தன்மகள் தலைவனோடு உடன்போக்கு சென்றுவிட்டாள் என்பதனை அறிந்து தாயின் உள்ளம் பல்வேறு வகையில் புலம்புவதையும், அவளைப் பற்றி நெருங்கிய பலரிடம் கூற்று நிகழ்த்துவதையும் அப்போது அவள் பெருமையும் சென்றவீட்டில் எப்படி வாழ்வாளோ என்று கூறுவதையும் காணமுடிகிறது.

களவு வாழ்க்கையில் தாயின் கூற்றும் செவிலியின் கூற்றும் ஒரே நிகழ்வுகளிலே நடைபெறுவதை சங்கப் பனுவல்களில் காணமுடிகிறது. இதனை தொல்காப்பியர்,

> ‘‘தாய்க்கும் வரையார் உணர்வுடம் படினே’’[50]

என்பதன் மூலம் நற்றாய்க்கும் செவிலிக்கும் ஒரே வகையான கூற்று நிகழ்வதை அறியலாம். இதற்கு உரை கூறும் இளம்பூரணர், ‘‘இது

நற்றாய்க்கு உரியதோர் இலக்கணமுணர்த்தல் நுதலிற்று. செவிலியுணர்வோடு உடம்பட்ட உள்ளத்தளாயின் நற்றாய்க்கும் மேற்சொல்லப்பட்டவை எல்லாம் வரையப்படா எனலாம்.

உணர்வுடம்படுதலாவது, தலைவியை உற்றுநோக்கம் நிகழ்ந்த வழியின்றித் தானும் செவிலியைப் போல உற்று நோக்காளென்று கொள்க. இப்பொருள்மேற் கிளவி வருவன உளவெனுஞ் செவிலியைப் போல வொருப்பட்ட உள்ளத்தாயின் அவள் கண்ணும் இக்கிளவியெல்லாம் நிகழும் என்றவாறு. உடம்படாதவாறு என்னையெனின், யாரிடத்தும் மக்களை வளர்ப்பார் செவிலியராகலானும் தமக்குத் தம் இல்லற நிலைக்குக் கடவ பகுதியான அறனும் பொருளும் இன்பமும் வேண்டுதலானும் கூற்றொடு வேறுபாடு தோன்றாது என்று கூறுவதைக் காணமுடிகிறது.

தலைவனோடு உடன்போக்கு சென்றத் தலைவியை நினைத்து தாய் சொல்லியது, ‘‘அவளுடைய தொய்யில் எழுதிய வனைந்து பருத்த இளைய மார்பகங்கள் நோகுமோ என்று நான் அவனை அணைத்திருந்த கையை நெகிழ்த்தினேன். அவள் அதனைப் பொறுக்காது தான் தன்னுடைய பெரிய அமர்த்த குளிர்ந்த கண்கள் நீரை வடிக்கக் கலங்கினாள். வெம்மையாய்ப் பெருமூச்செறிந்தாள்.

அத்தகைய மென்மையும் கரிய நீண்ட கூந்தலும், பெரிய மடப்பமும் உடைய தகுதிமிக்கவள் என்மகள். ஏனைய பருவம் ஒன்றும் எய்தாமல் வேனிற் பருவம் ஒன்றனையே எய்துகின்ற காய்ந்து வாடிய கூந்தளையுடைய அழல் வீசுகின்ற நீண்டசுரம், அங்கு நிற்கவும் நிழலிடம் பெறாமல் குட்டிகளை ஈன்று காட்டில் காவல் செய்திருந்த பெண்புலி மிகவும் பசியுடையது என்று அதன் பசியைப் போக்க மாலைப்பொழுதில் வழயினிடையில் செல்வாரைக் கொல்லும் பொருட்டு ஆண்புலி நோக்கி நிற்கும். அத்தகைய புன்மை மிக்க

சிறிய வழியில் என்மகள் எங்ஙனம் செல்ல வல்லவள்'' என கூறுகின்றாள். பூதனார் தனது பாடலில்,

''நின்ற வேனில் உலந்த காந்தள்
அழல்அவிர் நீள்இடை நிழலிடம் பெறாஅது
ஈன்று காண் மடிந்த பிணவுப்பசி கூர்ந்தென
மான்ற மாலை, வழங்குநர்ச் செரி இய
புலி பார்த்து உறையும் புல் அதர்ச் சிறுநெறி
யாங்கு வல்லுநள் கொல்தானே யான்தன்
வனைந்து ஏந்து இளமுலை நொவகொல் என
நினைந்து கைந்நெகிழ்ந்த அனைத்தற்குத் தான்தன்
பேர்அமர் மழைக் கண்ஈரிய கலுழ
வெய்ய உயிர்க்கும் சாயல்
மைஈர் ஓதி பெருமடத் தகையே?''[51]

என்ற பாடலின் மூலமாக நற்றாயின் கூற்று வெளிப்படுகிறது.

மக்கட்போக்கிய தாய் கூற்றினை டாக்டர் குளோரியா சுந்தரமதி, ''அகப்பாடல்களில் பொதுவாகப் பாடப்பெறுவது தலைவன் தலைவி தம் அகவுணர்வு. இக்கிளவி இதனின்று வேறாக ஒரு தாயின் மன உணர்வுகளைப் பாடுபொருளாகக் கொண்டுள்ளது. அவளது அன்புள்ளத்தை, மகளின் உடன்போக்கால் அவள் மனதில் எழும் உணர்ச்சி அலைகளை வெளியிடும் வாய்ப்பை வழங்கியுள்ளது'' என்று கூறுவதைக் காணலாம்.

கயமனார் என்ற புலவர் அதிகப்பாடல்களை பாடியுள்ளார். அவர்க்கு அடுத்ததாக ஓதலாந்தையார் ஐங்குறுநூற்றில் பாடியுள்ளதைக் காணமுடிகிறது. களவில் ஈடுபடும் தலைவி தலைமகனோடு உடன்போக்கியதை உணர்ந்து

பெற்ற தாய், வளர்த்த தாய் ஆகிய இருவரும் துன்பப்படுவதும், தலைவியின் மீது கொண்டுள்ள அன்பின் ஆழமும் அவர்களின் கூற்றுகள் மூலம் வெளிப்படுகின்றது. செவிலித்தாய், நற்றாய் கூற்றுகள் பாலைத் திணையில் வருவதை சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

களவு வாழ்க்கையில் தலைவன், தலைவி, பாங்கன், தோழி, செவிலி மற்றும் நற்றாயின் கூற்றுகள் மாந்தரின் கூற்றுகளாக நடைபெறுவதைக் காணமுடிகிறது. களவு வாழ்வின் இறுதியாகவும் கற்பின் தொடக்கமாகவும் உள்ள கண்டோர் கூற்றும் நடைபெறுவதை அறியலாம்.

கண்டோர் கூற்றினைத் தொல்காப்பியர்,

“பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி
வழுவின் ஆகிய குற்றம் காட்டலும்
ஊரது சார்வும் செல்லும் தேயமும்
ஆர்வநெஞ்சமொடு செப்பிய வழியினும்
மான்ற மாலை, வழங்குநர்ச் செரி இய
புலி பார்த்து உறையும் புல் அதர்ச் சிறுநெறி
யாங்கு வல்லுநள் கொல்தானே யான்தன்
வனைந்து ஏந்து இளமுலை நொவகொல் என
நினைந்து கைந்நெகிழ்ந்த அனைத்தற்குத் தான்தன்
பேர்அமர் மழைக் கண்ஈரிய கலுழ
வெய்ய உயிர்க்கும் சாயல்
மைஈர் ஓதி பெருமடத் தகையே?”[52]

என்ற பாடலின் மூலமாக நற்றாயின் கூற்று வெளிப்படுகிறது. மக்கட்போக்கிய தாய் கூற்றினை டாக்டர் குளோரியா சுந்தரமதி, ‘அகப்பாடல்களில் பொதுவாகப் பாடப்பெறுவது தலைவன் தலைவி தம் அகவுணர்வு. இக்கிளவி

இதனின்று வேறாக ஒரு தாயின் மன உணர்வுகளைப் பாடுபொருளாகக் கொண்டுள்ளது. அவளது அன்புள்ளத்தை, மகளின் உடன்போக்கால் அவள் மனதில் எழும் உணர்ச்சி அலைகளை வெளியிடும் வாய்ப்பை வழங்கியுள்ளது' என்று கூறுவதைக் காணலாம்.

களவு வாழ்க்கையில் தலைவன், தலைவி, பாங்கன், தோழி, செவிலி மற்றும் நற்றாயின் கூற்றுகள் மாந்தரின் கூற்றுகளாக நடைபெறுவதைக் காணமுடிகிறது. களவு வாழ்வின் இறுதியாகவும் கற்பின் தொடக்கமாகவும் உள்ள கண்டோர் கூற்றும் நடைபெறுவதை அறியலாம்.

செல்லுங்காலமும், வழியும் அஞ்சத்தக்கனவாய் உள்ள குற்றங்களையும், செய்திகளையும் காட்டுகின்ற போதும், அருகில் இருக்கும் ஊர் பற்றியும் தலைமக்கள் செல்லும் இடம் பற்றியும் ஆர்வமுடன் கூறியபோதும், இணைந்த தலைமக்களுடன் மிகுந்த அன்புடன் தம் மிடத்துத் தங்கச் செய்து விடுக்கும் போதும், தலைமக்களைத் தேடிவந்த தாய் நிலையை உணர்ந்து தடுத்து, பின்விடுக்கும் போதும், மிகத் தூரமான இடத்திற்குச் சென்ற தலைமக்கள் செல்லும்போதும், வரும்போதும் கண்டோர் கூற்றுகள் அமையும் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

இதற்கு உரை வகுத்துள்ள இளம்பூரணர், 'பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி வழுவின் ஆகிய குற்றம் காட்டலும், ஊரது சார்பும், செல்லும் தேயமும் ஆர்வ நெஞ்சமொடு செப்பிய வழியினும் என்பது, காலமும் நெறியும் அச்சம் வருமாறு தோன்றி வழுவுதலினாகிய குற்றம் காட்டலும் ஊரது அணிமையும் செல்லும் தேயத்தின் சேய்மையும் ஆர்வ நெஞ்சமொடு செப்பிய பக்கத்தினும் என்றவாறு' என்று கூறுவதைக் காணலாம்.

தலைவனும் தலைவியும் காதல் வாழ்வில் இன்புற்று அதன் இறுதியாக உடன்போக்கு செல்லுகின்ற போது அதனைக் கண்ட அறிவர்கள் என்று கூறப்படுகின்ற கண்டோர் அவர்களைத் தேடி வருகின்ற செவிலியிடம் வாழ்வின் உண்மைத் தன்மைகளை எடுத்துரைப்பதாக சங்க இலக்கியங்களில் கண்டோர் கூற்றுகள் நிகழுகின்றன. ஓதலாந்தையாரின் பாலைத்திணையில்,

''அறம்புரி அருமறை நவின்ற நாவின்
திறம்புரி கொள்கை அந்தணீர்! தொழுவல் என்று
ஒண்டொடி வினவும் பேதை அம்பெண்டே!
கண்டனெம் அம்ம சுரத்தினை அவளை
இன்துணை இனிது பாராட்ட
குன்று உயர் பிறங்கல் மலை இறந்தோளே''[53]

என்பதன் மூலம் காதல் வாழ்வின் உண்மைகளை எடுத்துரைப்பதாக கண்டோர் கூற்று நிகழ்வதைக் காணலாம். மேலும் உடன்போக்கின்கண் இடைச்சுரத்து உரைத்த பத்து என்னும் பாடல்கள் அமைந்திருப்பதையும் அறியமுடிகிறது.

கண்டோர் கூற்றினை ந. சுப்புரெட்டியார், “கண்டோர் என்பார் தன் களவினை உணர்ந்து தன்னை வேற்றவர்க்கு மணம் நிச்சயிக்கப்போகும் போதும், தலைவி தலைவனுடன் சென்று அவன் மனையில் வரைந்துகொள்ளும் நோக்குடன் செல்லும் போதும் காட்டு வழியில் சந்திக்கும் மாந்தர் என்று கூறுவதைக் காணலாம்.

தலைமகனும், தலைமகளும் உடன்போக்கு மேற்கொள்ள அவர்களை வழியிடையில் கண்டவர், இவ்வளவு கடுமையான வழியில் தலைமகளைக் கூட்டிச் செல்லும் தலைமகனின் உள்ள வலிமை போற்றி கண்டோர் கூற்று நிகழ்வதைப் பெரும்பதுமனார் பாடல் பின்வருமாறு உரைக்கிறது.

‘‘அழுந்துபட வீழ்ந்த பெருந்தண் குன்றத்து
ஒலிவல் ஈந்தின் உலவைஅம் காட்டு
ஆறுசெல் மாக்கள் சென்னி எறிந்த
எல்லிடை நீங்கும் இளையோன் உள்ளம்
காலொடு பட்ட மாரி
மால்வரை மிளிர்க்கும் உருமினும் கொடிதே’’[54]

என்ற பாடலில் உடன்போக்குச் சென்ற தலைமக்களைக் கண்டு கண்டோர் கூற்று நிகழ்த்தியதை அறியமுடிகின்றது. மேலும் நம்பியகப்பொருள் ஆசிரியர் கண்டோர் கூற்றினை,

‘‘தீதுடைப் புலவி தீர்த்தலும் அவன்வரல்
காதலிக்கு உரைத்தலும் கண்டோர்க் குரிய’’[55]

என்பதன் மூலம் கண்டோர் கூற்றினை அறியலாம்.

களவில் உடன்போக்கின் மூலமாக தலைவன் தலைவியின் நிலையினையும் அவர்களுடைய தாய்க்கு வாழ்வின் உண்மையையும் காதலின் சிறப்பினையும் எடுத்துரைக்கும் சிறப்பு பொருந்தியவர்களாக களவு வாழ்வில் கண்டோர் கூற்று நிகழ்த்துகின்றனர். களவு வாழ்க்கைச் சிறப்புற்று அமையவும் கற்பாக மாறுவதற்கும் மேற்கூறிய அனைவரின் கூற்றுகளும் களவில் இன்றியமையாதன என்பதை உணரலாம்.

கூற்றுகளில் குறிப்புமொழி, உள்ளுறை உவமம், இறைச்சி களவு வாழ்க்கையில் நிகழும் கூற்றுகளில் தலைவன், தலைவி, தோழி போன்றோர் தனது கருத்துக்களைக் கூறுமிடத்தில் வெளிப்படையாகக் கூறாமல் மறைமுகமாகக் கூறுவதற்குக் குறிப்புப்பொருள், உள்ளுறை உவமம், இறைச்சிபோன்றவற்றைப் பயன்படுத்தியுள்ளனர். இவை சங்கப் புலவர்களின்

சொல்வன்மையையும் தமிழ் மொழியின் ஆளுமைத் திறனையும் உலகம் அறிந்து கொள்வதற்கும் உதவியாக அமைகிறது.

**குறிப்புமொழி**

குறிப்புமொழி கவிதையைத் துய்ப்போருக்குச் சுவையைக் கூட்டித்தரும் சொற்பொருளுக்குப் புறத்தே அமைவதாகும். கவிதை சுவையினைச் சுவைக்கவல்லவரால் மட்டும் அறியமுடிவது குறிப்புமொழி ஆகும். இதனை வடமொழியில் தொனி என்றழைப்பர். களவில் கூற்று நிகழ்த்துகின்ற போது தான்கூற வந்த செய்தியை நயமாகவும், மறைமுகமாகவும் வெளிப்படுத்துவதற்கு குறிப்புமொழி பயன் பட்டுள்ளதை அறியமுடிகிறது.

களவில் தன் உள்ளத்தைக் கவர்ந்து தன்னோடு பழகி வரும் தலைவனைப் பற்றி தோழியிடம் தலைவி அறத்தொடு நிற்கின்ற போது, ‘‘மாட்சிமை பொருந்திய தகுதியையுடைய என் தலைவன் வீரர்கள் கூடி எடுக்கும் வில்விழாவின் கண்ணும், மகளிர் தத்தமக்குரிய மள்ளரைத் தழுவியாடுகின்ற துணங்கைக் கூத்தின்கண்ணும், இவையல்லாத பிற இடத்தும் தேடியும் காணக் கிடைத்திலேன், யானும் ஆடுகின்ற களத்திற்குரிய ஒரு மகளே. என் கையிலுள்ள, சங்கறுத்துச் செய்யப்பட்ட வளையல்களை நெகிழச் செய்த பெருமை பொருந்திய தலைவனும் ஆடுகின்ற களத்திலுள்ள ஒருவனே என்று கூறுகின்றாள்.

இவற்றில் யானும் ஆடுகள மகள் என்பது தலைவனோடு துணங்கை ஆடியதையும், குரிசில் ஆடுமகள் என்பது அத்துணங்கைக்குத் தலைவி தலைக்கை தந்து ஆடியதையும் குறிப்பு மொழியின் மூலமாக வெளிப்படுத்துவதைக் காணலாம்.

மேலும், தலைவன் தன்னோடு நட்புப் பூண்டமை கூறி நொதுமலர் வரைதல் அறனன்று எனத் தலைவி அறத்தொடு நின்றதையும், மாண் தக்கோன், பீடுகெழு குரசில் என்பன தலைவனைத் தலைவி உயர்த்திக் கூறும் செய்திகளாகும். ஆதிமந்தியின் பாடலில்,

"மள்ளர் குழீஇய விழவினானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டும் காணென், மாண் தக்கோனை
யானும் ஓர் ஆடுகள மகளே என்கைக்
கோடு ஈர் இலங்கு வளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலும் ஓர் ஆடுகளமகனே"[56]

என்ற பாடலின் மூலம் தலைவியின் கூற்றில் குறிப்பு மொழி அமைந்திருப்பதை அறியலாம்.

ஒருவர் கூறும் கூற்றை வெளிப்படையாக தெரிவிப்பதையே பெரும்பான்மையானோர் கடைப்பிடிப்பர். அதில் சில நேரங்களில் மங்களம், குழூஉக்குறி, தகுதி வழக்கு, போன்ற இலக்கியவகை சொற்களை கையாள்வதையும் காணலாம். களவு வாழ்க்கையில் ஈடுபடுகின்ற தலைவன், தலைவி போன்றோர் தங்கள் கருத்துக்களை எண்ணங்களை மறைமுகமாக வெளிப்படுத்துவதற்கு குறிப்புமொழியைப் பயன்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

குறிப்புமொழி குறித்து கு.வெ.பாலசுப்பிரமணியன், "அசை அழுத்தம், ஒலியழுத்தம், தொடரழுத்தம் என ஒலிக்குமுறை மாறுபாட்டால் சொல் தனக்குரிய பொருள் இழந்து எதிர்பொருள் பயக்கவும் கூடும். உள்ளக் குறிப்பு கேட்பானுக்குப் புலனாகும் வகையிற் கூறுவதுண்டு. இதனை,

“அரிதாரச் சாந்தம் கலந்தது போல
உருகெழத் தோன்ற வருமே முருகுறழும்
அன்பன் மழை பெய்த நீர்”[57]

என்பது குறிப்பு மொழி. இதனை தெரிந்துமொழி கிளவி என்பார் தொல்காப்பியர்.

களவு வாழ்வில் ஈடுபடும் கூற்றுகளின் வாயில் வெளிப்படும் கருத்துக்களைச் சிறப்புப் படுத்துவதற்குக் குறிப்புமொழி பயன்பட்டுள்ளதை அறியமுடிகிறது. கற்பவர்கள் தாமே தன்னுடைய அறிவுத் திறனிற்கேற்ப பல்வேறு கருத்துக்களைத் தீர்மானிப்பதற்கும் அச்செய்யுளிலுள்ள நுட்பங்களைக் கண்டு இன்புறுவதற்கும் குறிப்புமொழி துணைபுரிகின்றன. இதனை,

“இன்னன் ஆயினள் நன்னுதல் என்று அவர்த்
துன்னச் சென்று செப்புநர்ப் பெறினே
நன்றுமண் வாழி தோழி நம் படப்பை
நீர்வார் பைம்புதற் கலித்த
மாரிப் பீரத்து அலர்சில கொண்டே”[58]

என்பதில் தலைவி தோழியிடம் “தோழி நம்முடைய தோட்டத்தில் நீர் ஒழுகுகின்ற பசுமையான புதரைப் பற்றுக் கோடாகக் கொண்டு, படர்ந்து தழைத்த, மழைக்காலத்தில் மலரும் பீர்க்கின் மலர்கள் சிலவற்றைக் கையில் ஏந்தி, தலைவனிடம் நெருங்கச் சென்று நல்ல நெற்றியையுடைய தலைவி, இம்மலரைப் போன்ற பசலையை அடைந்தாள் என்று சொல்லுவாரைப் பெற்றால் மிகவும் நல்லது என்று கூறுகின்றாள். இவற்றில் இப்பீர்க்கம் பூக்காண் என்பது தலைவியின் தோட்டத்தினது என்று கூறுகின்ற போது

தலைவன் தலைவிக்கு மட்டும் உரியவன் என்று குறிப்பு மொழியை உணர்த்துவதைக் காணமுடிகிறது.

களவின் மாந்தர்களின் கூற்றுகளில் குறிப்புமொழி என்றதனை அமைத்துக் கற்போரை மேலும் மேலும் தனது சிந்தனைகளைத் தூண்டி, கருத்து விளக்கம் பெறுவதற்காகச் சங்கப் புலவர்கள் அமைத்திருப்பதனை அறியமுடிகிறது.

**உள்ளுறை உவமம்**

அகப்பாடல்களில் ஒருவருடன் மற்றொருவர் கூற்று நிகழ்த்துகின்ற களவு வாழ்க்கையின் போது தங்கள் கருத்துக்களை பெரும்பாலும் உவமையின் மூலமாகவே வெளிப்படுத்துவார்கள். என்பதனை சங்கப்பனுவல்கள் நமக்கு உணர்த்துகின்றன. இதனை உள்ளுறை உவமம் என்பதன் மூலம் வெளிப்படுத்தியதைக் காணமுடிகிறது.

தொல்காப்பியர் உள்ளுறை உவமத்தை உவமயியலில் குறிப்பிட்டுள்ளார். அதற்கு முன்பே அகத்திணையியலில் உள்ளுறை உவமத்தை,

"உள்ளுறை உவமம் ஏனை உவமமெனத்
தள்ளா தாகும் திணையுணர் வகையே"[59]

என்ற நூற்பாவின் மூலம் உள்ளுறைக்கண் வரும் உவமமும் ஒழிந்த உவமும் என இருவகையாலும் திணை உணர்வகை தள்ளாது வரும் என்பதனை அறியலாம். மேலும்,

"உள்ளுறுத்து இதனோடு ஒத்துப்பொருள் முடிகென
உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்"[60]

என்ற நூற்பாக்களின் மூலம் அறியலாம்.

இதற்கு உரைவகுத்த இளம்பூரணர், ‘‘உள்ளுறுத்துப் பொருள் இதனோடு ஒத்து முடிக என உள்ளுறுத்தப்பட்ட கருப்பொருளை உள்ளுறுத்துக் கருதிய பொருள் இதனோடு ஒத்துமுடி என உள்ளுறுத்து உரைப்பதே உவமம் என்று கூறுவதன் மூலம் அறியமுடிகிறது.

‘‘குறுங்கை இரும் புலிக் கோள் வல் ஏற்றை
பூநுதல் இரும்பிடி புலம்ப தாக்கி
தாழ்நீர் நனந் தலைப் பெருங்களிறு அடூஉம்
கல்லக வெற்பன் சொல்லின் தேறி
யாம் எம் நலன் இழந்தனமே யாமத்து’’[61]

என, தலைவன் இரவுக்குறியிடத்தே வந்து நிற்க அதனை அறிந்த தோழி அவன் விரைவில் மணந்துக் கொள்ள வேண்டி, ‘‘குறுமையான முன்னங்கால்களை உடைய கொல்லவல்ல பெரிய ஆண்புலி பொலிவு மிக்க நெற்றியையுடைய கரிய பெண்யானை புலம்புமாறு நீரற்ற அகன்ற காட்டின்கண் பெரிய களிற்றைக் கொல்லும் அத்தகு காட்டிடத்ததாகிய மலை பொருந்திய நாட்டினனாகிய தலைவன் உன்னைப் பிரியமாட்டேன் என்று கூறிய சொல்லை உண்மை எனக் கொண்டு நாம் நம்நலத்தை இழந்துவிட்டோம் என்று தலைவி கூறுவதாகத் தலைவி கூறுகின்றாள்.

இவற்றில் வெளிப்படையாகப் பார்த்தால் யானையைத் தாக்குகின்ற புலி இருக்கின்ற காட்டின் தலைவர் என்னைப் பிரிய மாட்டான் என்று தலைவி கூறுவதைக் காணலாம். ஆனால், யானையைபோல தாக்கி கொள்ளுகின்ற அளவிற்கு வீரம் நிறைந்த புலியைப் போல இந்த ஊரின் பழிச்சொல்லை நீக்கி என் தலைவன் விரைவில் மணம் செய்வான் என்று தலைவி கூறுவதில் உள்ளுறைப் பொருள் பொதிந்துள்ளது. இதனை,

"கோழிலை வாழைக் கோண்மிகு பெருங்குலை
ஊழுறு திங்கனி உண்ணுநர்த் தடுத்த
.....................................................................
அறியாது உண்ட கடுவன் அயலது
கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது
நறுவீ அடுக்த்து மகிழ்ந்துகண் படுக்கும்
குறியா இன்பம் எளிதின் நின்மலைப்
பல்வேறு விலங்கும் எய்தும் நாட"[62]

என்னும் இப்பாடலில், நீரை எதிர்பார்த்து வந்த குரங்கானது, தேனை எதிர்பாராமல் உண்டதைப் போல, விலங்கு வேட்டைக்கு வந்த தலைவன் எழில் ஓவியமான தலைவியை அடைகின்றான். தேனை அதிகம் உண்ட போதையால், தன்னுடைய தொழிலாகிய மரம் ஏறுதலை விட்டு விட்டு மலரில் படுத்து உறங்குகின்றது. அதனைப் போல தலைவனும் களவு ஒழுக்கத்தில் எல்லையற்ற இன்பத்தை அடைகின்றான்.

அவற்றிலிருந்து விடுப்பட்டு அனைவரும் அறிய தலைவியை மணந்து கொள்ளவேண்டும் என்று எண்ணாமல் களவிலேயே இன்பம் துய்க்க வேண்டும் என்று எண்ணுகின்றான் என்கிறாள் தோழி. இதன்மூலம் தலைவன் விரைவில் தலைவியை மணந்து வாழ வேண்டும் என உள்ளுறையாக குறிப்பிடுவதைக் காணலாம். தான்கூற வந்த செய்தியை வெளிப்படையாகக் கூறாமல் மறைமுகமாக கூறுவதற்கு அகமாந்தர்களுக்கு பயன்பாடாக உள்ளுறை அமைந்ததை உணரலாம். மேலும், தொல்காப்பியர் உள்ளுறை உவமையை பொருளதிகாரத்தில்.

"உவமப் போலி ஐந்து என மொழிப"[63]

என்று நூற்பாவில் குறிப்பிடுகின்றார். இதற்கு உரைவசுத்த இளம்பூரணர், இதற்கு அவையாவன இதற்குவமையில்லை எனவும், இதற்கிது தானே

உவமை எனவும் பல பொருளினுமுளதாகிய உறுப்புக்களைத் தெரிந்தெடுத்துக் கொண்டு சேர்த்தின் இதற்குவமையாகும் எனவும், பல பொருளினுமுளதாகிய கவின் ஓரிடத்துவரின் இதற்குவமையாம் எனவும், கூடாப்பொருளோடு உவமித்து வருவனவும் என்று விளக்கம் கூறுவதை காணலாம்.

**தொகுப்புரை**

வாயில்களின் வாயிலாக தலைமக்களின் களவு வாழ்வில் வெளிப்படுத்திய செய்திகளை அறிந்து கொள்ளமுடிகின்றது.

திருமணத்திற்கு முன்பு கூட்டுறவு கொள்வது தவறு. அது பெண்களின் கற்பு நிலைக்கு இழுக்கானது. ஆனால், உண்மையில் ஒரு பெண் ஒரு ஆடவனை மனதில் நினைத்துவிட்டாளே அவள் கற்பை இழந்தவளாகின்றாள் என்பதை அறிய முடிகின்றது.

சங்க களவு வாழ்க்கையில் தலைவனுக்கும் தலைவிக்கும் திருமணத்திற்கு முன்பே கூட்டுறவு நடைபெற்றுள்ளது என்பதனை உணர்ந்து கொள்ள முடிகின்றது. அதனை தலைவன் தலைவியின் கூற்றுகளின் மூலமாகவே நாம் அறிந்து கொள்ள முடிகின்றது.

தலைவன், தலைவி தங்களுக்குள் நடைப்பெற்ற கூட்டுறவை வெளிப்படையாக கூறாமல் மறைமுகமாக வெளிப்படுத்தியுள்ளதையும் காண முடிகின்றது. இதற்கு சங்கத் தமிழ் புலவர்கள் உள்ளுறை, இறைச்சி என்ற உத்தியைப் பயன்படுத்தியுள்ளதை காணலாம்.

தலைவன், தலைவி, தோழி போன்றவர்கள் தங்களுடைய எண்ணங்களையும் இன்ப துன்பங்களையும் வெளிப்படுத்துகின்ற போதும் பிறர்மனம் புண்படாத வகையில், நவநாகரிகமாக தனது கருத்துக்களை

மறைமுகமாக வெளிப்படுத்தியதை கூற்றுக்களின் மூலம் காணுகின்ற போது, நம்தமிழ் சமூகத்தின் பண்பாட்டு சிறப்பினையும் ஒழுக்கலாறுகளையும் உணர்ந்து கொள்ள முடிகின்றது.

தலைமகன் தலைவியோடு பழகி இன்பத்தில் இருந்துவிட்டு பிறகு அவளோடு பழகவில்லை என்று பொய் கூறிய செய்தியினையும் அதன்பிறகே திருமணச் சடங்குமுறை தோன்றியது என்பதனையும் கூற்றுக்களின் மூலம் தெளிவாகின்றது.

தலைவன் தலைவியின் காதல் நிறைவேறி ஊரறிய கற்பாக மாற வேண்டும் என்பதற்காக தோழி பல்வேறு உதவிகளையும் கருத்துக்களையும் எடுத்துரைப்பதை தோழியின் கூற்றின் மூலமாக அறியலாம்.

தலைவன் தலைவியோடு உடன்போக்கு சென்றதை அறிந்த நற்றாய், செவிலித்தாய் ஆகியோர் அவரள் சென்ற பாதையை எண்ணி புலம்புவதையும் தலைவி மீது வைத்துள்ள அளவற்ற பாசத்தையும் இருவரும் திரும்பி வந்தால் ஊரறிய திருமணம் செய்துவைப்பேன் என்ற தெரிவிப்பதையும் நற்றாய், செவிலித்தாய் கூற்றின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

தலைவன் தலைவியை உடன்போக்கில் தேடிச் செல்லும் தாயிடம் உலக உண்மைகளை எடுத்துரைத்து களவு மணம் தவறில்லை என்ற வாழ்வியல் உண்மைகளை கண்டோர் அறிவர் கூற்றின் மூலம் தெரிவிப்பதை காணலாம்.

சங்கப்புலவர் தாம் கூற வந்த செய்தியினையும், ஒழுக்கலாறுகளையும் தங்களின் தமிழ்ப்புலமை, சொல்வன்மை ஆகியவற்றை களவிற்குரிய கூற்றுக்களின் மூலம் வெளிப்படுத்திதை சங்கப் பனுவல்களின் வழி அறியமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. இறையனார் அகப்பொருள், நூ. 01.
2. தொல்.பொருள்.களவு. நூ. 1037.
3. தமிழ்நெறி விளக்கம், களவு. நூ. 1.
4. யாப்பருங்கலவிருத்தி, நூ. 612.
5. மேலது., நூ. 613.
6. தொல்.அகம். நூ. 189.
7. தொல்.பொருள்.அகம். நூ. 54.
8. தொல்.அகத். நூ. 53.
9. தொல்.கற்பு. நூ. 52.
10. தொல்.பொருள். நூ. 176.
11. தொல்.களவு. நூ. 187.
12. அகப்பொருள் விளக்கம், நூ. 39.
13. நம்பி.அகப். நூ. 62.
14. இறையனார் அகப்பொருள், நூ. 35.
15. தொல்.களவு. நூ. 387.
16. மேலது., நூ. 7.
17. தொல்.கற்பு. நூ. 153.
18. தொல்.களவு. நூ. 96.
19. நா. சுப்புரெட்டியார், ப. 135.
20. தொல்.களவு. நூ. 34.

21. வ.சுப. மாணிக்கனார், ப. 38.

22. தொல்.களவு. நூ. 126.

23. தொல்.செய். நூ. 1778.

24. நம்பியகப்பொருள், பா. 204.

25. தொல்.கற்பு. நூ. 191.

26. மேலது., நூ. 99.

27. குறுந். பா. 272.

28. தொல்.அகம். நூ. 44.

29. தொல்.களவு. நூ. 1049.

30. ஐங்குறு. பா. 251.

31. தொல்.களவு. நூ. 1054.

32. தொல்.பொருள். நூ. 113.

33. கலித். பா. 108.

34. தொல்.களவு. நூ. 101.

35. குறுந். பா. 78.

36. இறையனார் களவியல், நூ.

37. நம்பியகப்பொருள், பா. 136.

38. அகப்பொருள் விளக்கம், நூ. 136.

39. நற்றி. பா. 185.

40. ஐங்குறு. பா. 175.

41. குறுந். பா. 78.

42. மேலது., பா. 136.

43. தொல்.அகம். நூ. 42.

44. நற்றி. பா. 32.

45. தொல்.களவு. நூ. 112.

46. அகம். பா. 318.

47. தொல்.பொருள். நூ. 118.

48. குறுந். பா. 89.

49. மேலது., பா. 396.

50. தொல்.பொருள். நூ. 24.

51. நற்றி. பா. 29.

52. தொல்.பொருள். நூ. 43.

53. ஐங்குறு. பா. 387.

54. நற்றி. பா. 2.

55. அகப்பொருள். நூ. 99.

56. குறுந். பா. 31.

57. இலக்கண விளக்கம், சொல். நூ. 592.

58. குறுந். பா. 98.

59. தொல்.அகம். நூ. 46.

60. மேலது., நூ. 51.

61. நற்றி. பா. 36.

62. அகம். பா. 2.

63. தொல்.உவமை. நூ. 1244.

## இயல் - 3

# கற்பு வாழ்வியல் வாயில்கள்

**முன்னுரை**

பண்டைத் தமிழர்கள் அகவாழ்க்கையை களவு, கற்பு என இருநிலைகளாகப் பகுத்தனர். களவு என்ப சமூகத்தில் பிறர் அறியா வண்ணம் மேற்கொள்ளப்படும் வாழ்வு எனவும், கற்பு என்பது சமூகத்தின் அனுமதியோடு வெளிப்படையான வாழ்க்கையைக் கொள்வதாகவும் அமைகிறது.

சங்கக் காலத்திலிருந்து தமிழ்மொழி மக்களின் பேச்சுவழக்கிலும், இலக்கிய வழக்கிலும் தொடர்ந்து உயிர்ப்புடன் வாழ்ந்து வரும் தன்மையுடையதாக உள்ளதை அனைவரும் அறிவர். இந்த நீண்டகால வரலாற்றில் பல சொற்களின் பொருள் மாற்றம் அடைவதும், ஒரு சில சொற்களுக்கு பல விளக்கங்கள் வழங்கி வருவதும், பலசொற்கள் வழக்கத்திலிருந்து மறைந்துவிட்ட வரலாற்றையும் காணமுடிகின்றது. அப்படிப்பட்ட பண்புள்ள, சொற்களில் ‘கற்பு’ என்பதும் ஒன்று என்பதும் அறியத்தக்கது. காலந்தோறும் ‘கற்பு’ என்பது பெண்ணை அதிகாரத்துடன் இயக்கிக் கொண்டிருக்கிறது என்பதும் கருதத்தக்கது.

சங்கஇலக்கியத்தில் கற்பு எனும் சொல் களவு வாழ்க்கைக்குப் பிந்தைய திருமண வாழ்வைச் சொல்கிறது. கற்பு என்றால் ‘கற்பிக்கப்படுதல்’ என்கிறார் நச்சினார்க்கினியர். இத்தகையச் சிறப்பு மிக்க மகளிர் கற்புக்கோட்பாட்டில் வரையறைச் செய்துள்ளது. ஆகவே, தலைமக்களின் இக்கற்பு வாழ்வு பெரிதும் சிறப்பதற்கு துணைநின்ற “கற்பு வாழ்வில் வாயில்கள்” பற்றி ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

**கற்பு**

'கற்பு' என்பதற்கு அகராதியில் கல்வி, அறிவு, முல்லைக்கொடி, கதி, மகளிர், கற்பு எனப் பல பொருள்கள் கூறப்பட்டுள்ளன. வள்ளுவர் மகளிர் கற்பு குறித்து,

"பெண்ணினிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மை யுண்டாகாப் பெறின்"[1]

என்று வியந்து போற்றினார் வள்ளுவப் பெருந்தகை, 'பெண்ணின் பெருமை' பேசியவர் திரு.வி.க. 'புதுமைப் பெண்' களைப் படைத்துக் காட்டியவர் மகாகவி பாரதியார். பெண் குழந்தைகள் பற்றி சிறப்பாகப் பாடிவைத்தவர் பாரதிதாசன். மாயூரம் வேதநாயகம் பிள்ளை முதன் முதலில் பெண்கள் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டவர். இப்படி எத்தனையோ அறிஞர்களும் கவிஞர்கள் பெண் பிறவியைப் பெரும் பிறவியாகப் போற்றியுள்ளனர்.

ஔவையார், காரைக்கால் அம்மையார், சங்ககாகாலப் பெண்பாற் புலவர்கள் எனப் பலரும் தம்முடைய பாடல்களில் ஒழுக்கம், கற்புநெறி போன்றவற்றை மீண்டும் மீண்டும் வலியுறுத்தி எழுதியதன் காரணம், 'கற்பு' ஒன்றுதான் பெண்ணுக்கு அணிகலன்" என்பதால்தான் அதனை இருவருக்கும் (ஆண்-பெண்) பொதுவாக்குவோம் என்றார் மகாகவி பாரதி.

வள்ளுவரும், இளங்கோவும், கம்பனும் கூட வரையறுக்காத ஒரு கருத்தை ஔவையார் கூறியிருக்கிறார். கற்பு என்றால் என்ன என்று எந்த புலவனும் வரையறுக்கவில்லை. அது பெண்ணின் உடலோடும், மனதோடும் சம்பந்தப்பட்டது என்று மட்டுமே கருதப்பட்டது. அது பெண்ணுக்கு மட்டுமே உரியது என்று ஓரவஞ்சனையுடன் உணர்த்தப்பட்டது.

ஔவையார் ஒருவர் தான் கற்புக்கு இலக்கணம் கூறியவர், தான்சொன்ன சொல் மாறாத தன்மை தான் கற்பு என்ற பொருளில், ‘கற்பெனப்படுவது சொல் திறம்பாமை’ என்று ஓங்கி அடித்தார். ஆண், பெண் என்ற உடல்களை தாண்டி வாக்குத்தவறாத நேர்மை தான் கற்பு என்று மனிதகுலத்துக்கே பொதுவான அறமாக்கினார். அப்படி நோக்கினால் வார்த்தையை காப்பாற்றும் அனைவரும் கற்புடையவர்களே, தவறினால் அனைவரும் கற்பிழந்தவர்களே என்பது ஔவையின் அளவுகோல் என்று பாடியிருக்கிறார். இதனை,

“கற்பெனப்படுவது சொல் திறம்பாமை”[2]

என்றார் ஔவையார்.

கற்பு எனப்படுவது, தன்னையே முழுதுமாகச் சார்ந்து விட்ட கணவரது சொல் மீறாத நிலையாகும். தொல்காப்பியரும் திருமணச் சடங்கு (கற்பியல்- நூ.1) கூறுமிடத்து கற்பு குறித்து விளக்கியுள்ளார். மேலும், வாயில்கள் கூற்றாகவும் (தொல்.11- 1098) கூறியுள்ளார். கற்பில்லா மகளிர் பற்றி நீதிநெறி விளக்கத்தில், குமரகுருபரர் இரு பாடல்களில் (81, 82) கூறியுள்ளார் . இத்தகைய பாடல்களின் மூலம் இல்லறம் காக்கும் பெண்ணுக்குக் கற்பின் அவசியம் பற்றி வலியுறுத்தப் பட்டுள்ளது.

கற்பு என்பது மகளிர்க்கு மாந்தர் மாட்டு நிகழும் மனநிகழ்ச்சி, அதுவும் மனத்தான் உணரக் கிடந்தது என்றும், “கொடுப்பக் கொள்வது கற்பு என்றமையால், அதுகொடுக்குங்கால், களவு வெளிப்பட்ட வழியும் களவு வெளிப்படாத வழியும் கொள்ளப் பெறும் எனக் கொள்க”[3] என்பதும் இளம்பூரணர் உரை. கலித்தொகை, பாலைக்கலியின் முதல் பாடலிலேயே கற்பின் சிறப்பு கூறப்பட்டுள்ளது. பொருள்தேடும் பொருட்டு பிரிந்துசெல்லப்போகும் தலைவனிடம்,

''மறப்பருங் காதல் இவள் ஈண்டு ஒழிய,

.......................... இறப்பத் துணிந்தனர்''[4]

என்று தலைவியின் நிலையைத் தோழி எடுத்துக்கூறி சாடுகிறாள். உலகமே வறட்சியில் துன்பப்படும் காலத்தும், மழையைப் பெய்விக்கும் கற்புத்திறம் (சக்தி) உடையவள் இவன் மனைவி என்று கூறுவதை,

''வறன் ஓடின் வையகத்து வான்தரும் கற்பினாள்''[5]

என்பதால் அறியமுடிகிறது. மேலும், தலைவியின் கற்பின் சிறப்பை,

''மலைவாழ் மகளிர் கணவனைத்

தொழுதெழும் கற்பு மேம்பாடுடையவர்கள்''[6]

என்பதைத் தோழி விளக்குவதாக ஒரு பாடல் அமைந்துள்ளது. மேலும், தலைவியின் கற்பு மேம்பாட்டினை பாலைக்கலியில்,

''தொல்லியல் வழாஅமைத் துணை எனப் புணர்ந்தவள்''[7]

எனறும்,

''வடமீன் போல் தொழுதேத்த வயங்கிய கற்பினாள்''[8]

என, தோழி கூறுவதிலிருந்து தலைவி நிலை பெற்ற கற்புடையவள் என்பதும், வடமீனைப் போல பலரும் தொழுது போற்றும் உயர்ந்த கற்புடையவள் என்பதும் பெறப்படுகிறது.

**தொல்காப்பியத்தில் கற்பு**

கற்பு என்பது இல்லறவொழுக்கமாகும். கற்பிக்கப்படுவது கற்பு, கற்பெனப்படுவது உயரிய ஒழுக்கம். பிறர் நெஞ்சம் புகாமை என்று பல்வேறு

விளக்கங்களைக் கற்புக்குக் காட்டுவது அறியத்தக்கது. கற்பு என்பதற்கு, ‘‘மகளிர்நிறை, இல்லறவொழுக்கம், நீதிநெறி, முறைமைவிதி, கல்வி, கற்பனை, மதில், மதிண்மேடை, முல்லைக்கொடி போன்ற பல பொருள்களைக் காணலாம்.

‘களவு கொண்டு விடுதற்குறியது. கற்பு கைக்கொள்ளுதற்குரியது என்று களவின் நிலையாமையையும் கற்பின் மூலம் கற்பு வாழ்க்கைக்குக் களவு நல்ல தோற்றவாய்’ என்று உணரமுடிகிறது. இதனை,

‘‘கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குறி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே’’[9]

என்னும் நிலையில் மட்டும் அமைந்திருந்தது. அதாவது ஒரு தலைவியை தலைவனிடம் அவனின் இணையாகத் தருவது என்பது மட்டுமே தொல்காப்பிய நெறி. கற்பு தலைவனுக்கு உரியது, அல்லது தலைவிக்கு உரியது என்ற அழுத்தங்கள் அதில் இல்லை. கற்பு என்பது ஒரு வாழ்க்கை முறை. அவ்வாழ்க்கை முறையைக் கடைபிடித்து ஒழுகுவது இருவரின் கடன் என்பதாகவே தொல்காப்பியம் கொள்கின்றது. கொள்ளுதற்குரிய தலைவன்; கொடுத்தற்குரிய மரபினோர் கரணவழி நின்று தலைவியைக் கொடுக்கக் கொள்ளும் சடங்குவழிப்பட்ட மணநிகழ்வே கற்பு என்று வரையறுக்கிறது. முறை வெளிப்படுத்தல், தமரிற்பெறுதல், மகிழ்தல், புலத்தல், ஊடல் தீர்தல், பிரிதல் என்று கற்புக் கால நிகழ்வுகளை,

‘‘மறை வெளிப்படுத்தலும் தமரின் பெறுதலும்
இவை முதலாகிய இயல் நெறி திரியாது
மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே’’[10]

என, தொல்காப்பிய நூற்பா எடுத்துரைக்கிறது. ஆனால், பின்னால் வந்த இலக்கண இலக்கியங்கள் கற்பு என்பது பெண்களுக்கு மட்டும் உரியது என்று வரையறைகளை உருவாக்கிவிட்டன. இந்தப் பின்னணியில் கற்புடைய பெண்ணின் இலக்கணங்களாக உலகியல் வழக்கிலும், இலக்கியங்களிலும் பல புனைவுகள் புனையப்பெற்றன. அவற்றின் பெருக்கத்தைக் காணும் போது, பெண்ணிற்கான வரையறை தமிழ்ச்சமுதாயத்தில் எவ்வளவு அதிகமாக உள்ளது என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

**கற்பு - சொல் விளக்கம்**

கல்+பு=கற்பு. இச்சொல் 'கல்' என்னும் பகுதியடியாகப் பிறந்தது. கற்பு என்பதற்கு இளம்பூரணர், "மகளிர்க்கு மாந்தர்மாட்டு நிகழும் மனநிகழ்ச்சி அதுவும் மனத்தான் உணரக் கிடந்தது என்கிறார். நச்சினார்க்கினியர், தன் கணவனைத் தெய்வமென்று உணர்வதோர் மேற்கோள்" என்கிறார். வ.சுப.மாணிக்கம்,

"கற்பு என்பது அகத்திணை வலியுறுத்தும் அறங்களுள் தலையானது" என்கிறார். புலவர் குழந்தை, "கணவன் மனைவி இருவரையும் ஒன்றுபடப் பிணித்து நிற்கும் நெஞ்சுகலந்த அன்பின் பயனே கற்பு ஆகும்"[11] என்கிறார்.

கற்பு என்பதற்குப் பல்வேறு விளக்கங்கள் தந்தாலும் இச்சொல் 'கல்' என்ற சொல்லை அடிப்படையாகக் கொண்டது. 'கல்' என்பதற்குக் கற்றல் என்ற பொருளுண்டு. அதாவது வாழ்வுக் கலையைக கற்றலாகும் எனலாம். கற்பொழுக்கம் இருபாலுக்கும் பொதுவானதென அறிய முடிகின்றது. எனினும், பெண்டிர்க்கே முதன்மைப் படுத்தப்பட்டுள்ளது.

‘கல்’ என்ற வேர்ச்சொல்லினின்றும் பிறந்தவை ‘கற்பு’, ‘கல்வி’ போன்ற சொற்கள். ‘கல்’ என்றால், ‘தோண்டுதல்’. ஆங்கிலச் சொல், ‘Cultivate, Culture’ போன்ற சொற்களும் இந்தத் ‘தோண்டுதலை’ (உழுதல்-லத்தீன்-Cultivatus) அடிப்படையாகக் கொண்டு பிறந்த சொற்கள்தாம். கற்பிக்கப்படுவது எதுவோ அது ‘கற்பு’. கல்வியினால் உண்டாகும் ஞானமும் ‘கற்பு’ தான். ‘பெரிய திருமொழியில்’ (திருமங்கை ஆழ்வார் மன்னன்), ‘கற்பு’ என்ற சொல் ‘பெரிய ஞானம்’ என்ற பொருளில் ஆளப்பட்டிருக்கிறது.

‘ஆழி ஏந்திய அந்தணர் கற்பினை கழுநீர் மலரும் வயல் கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனே’. ‘அந்தணர் கற்பு’ என்றால் ‘சான்றோர் ஞானம்’ என்ற பொருள். அகத்திணை ஒழுக்கத்தில் ‘களவு’குப் பிறகு, ‘கற்பு’ என்றால் என்ன? தொல்காப்பியம் கூறுகிறது. இதனை,

“இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக் கூட்டம் காணுங்காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்லியாழ்த் துணைமையோர் இயல்பே”[12]

என்கின்றது. இன்பமும், பொருளும், அறணுமென்று கூறப்பட்ட மூவகைப் பொருள்களுள், முதன்முதல் சந்திக்கும், திருமணம் ஆகாத இளம் ஆண், பெண் ஆகிய இருவரிடையே தோன்றும் அன்பின் விளைவாக ஏற்படும் இன்பத்தின் பகுதியாகிய புணர்தல் முதலிய ஐவகைப்பட்ட ஒழுக்கம். ‘காமக் கூட்டம்’ என்பது, ‘புணர்தலைக்’ குறிக்கும்.

வேதங்களுள் குறிப்பிடப்பட்டுள்ள எட்டுவகை மணங்களுள், ‘களவு’, ‘கந்தர்வத்’ திருமணமாகும் என்பது நச்சினார்க்கினியர் கருத்து. “கந்தருவ குமரரும், கன்னியரும் தம்முள் எதிர்ப்பட்டுக் கண்டு இயைந்தது போலத் தலைவனும் தலைவியும் எதிர்ப்பட்டுப் புணர்வது, என்கிறார் நச்சினார்க்கினியர். ‘கந்தருவர்க்குக் கற்பின்றி அமையவும் பெறும்’ ஈண்டுக் கற்பின்றிக் களவே அமையாதென்றற்குத் ‘துறையமை’ என்றார் நச்சினார்க்கினியர்.

‘கற்பு’ என்றால் என்ன பொருள்? ‘கற்பு’ என்றால் திருமணம். மக்களைப் பொருத்த வரையில், களவொழுக்கம் பயிலுகின்ற தலைவனும் தலைவனும் திருமணம் செய்து கொண்டாக வேண்டும். கந்தருவர்களுக்கு இந்தச் சட்டம் கிடையாது. அதே சமயத்தில், திருமணத்துக்கு முன்பு, களவொழுக்கத்தில் தலைவனும், தலைவியும் புணர்தல் குறித்துச் சமூகத்தடை ஏதுமில்லை. இதனை,

> “கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
> கொளற்குரிய மரபிற் கிழவன் கிழத்தியைக்
> கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுமே”[13]

என, தலைவன், தலைவி ஆகிய இருவருடைய பெற்றோர்கள், இருவருக்கும் களவுக்குப் பிறகு, இருவருடைய உறவையும் உறுதிப் படுத்த நிகழ்த்தும் சடங்கே ‘கற்பு’ எனப்படும். ‘கற்பியல்’ என்று தொல்காப்பியத்தில் வரும் பகுதியில், திருமணத்துக்குப் பிறகு, தலைவன், தலைவி, தோழி, போன்றோர் எந்தெந்தச் சூழ்நிலையில் பேசுவார்கள் என்ற செய்திகள் அனைத்தையும் நாடகக் காட்சிகள் போல் சித்திரித்துக் கூறப்படுகின்றன.

**கடவுளும் கற்பும்**

கற்புடையப் பெண்ணைச் சங்ககால மக்கள் தெய்வத்திற்கு நிகராகப் போற்றினர். தலைவன் பொருளீட்டப் போகும் வழியின் அருமையை எண்ணித் தலைவி வருந்துகிறாள். தோழி அவளிடம் தலைவன் நலம் வேண்டி, மழையையும், வெம்மையையும், காற்றையும் நீ வேண்டினால் உன்கற்பின் மேன்மை காரணமாக அக்கடவுளின் உதவியைப் பெறுவாய். என்று கூறுவதைத்,

"தெய்வத்துத் திறன்நோக்கித் தெருமரல்,தேமொழி
வறன்ஓடின் வையகத்து வான்தரும் கற்பினாள்
திறன் ஓடிப் பசப்பூர்தல் உண்டுஎன
அறன்ஓடி விலங்கின்று அவர் ஆள்வினைத் திறத்தே"[14]

என்னும் கலித்தொகை பாடல் அடிகள் சுட்டுகின்றன. கற்பு என்பது தெய்வத்தன்மை பொருந்தியது என்பதை,

"கடவுட் கற்பொடு குடிக்கு விளக்கு"[15]

எனவும்,

"கடவுட் கற்பின் மடவோள் கூற"[16]

என்னும் பாடல்கள் கற்புக்குத் தெய்வத்தன்மை அடையாகக் கொடுக்கப்பட்டுள்ளது. செயற்கரிய செயல் என்பதனாலேயே கற்பிற்கும் புனிதத்தன்மை ஏற்றப்பட்டது. கற்புநெறியில் தன்னையும் காத்துக் கொண்டு தன் கணவனையும் காப்பாற்றி தகுதியமைந்த புகழையும் காத்து உறுதி கொண்டவளாய் வாழ்கின்றவளே பெண், என்பதை,

"தற்காத்துத் தத்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்"[17]

என்னும் குறளும் கலித்தொகை வழி சுட்டிச்செல்கிறது. அருந்ததி வசிட்டன் மனைவி, கற்பில் சிறந்தவள், இவளின் கற்பினை, தலைவியின் கற்போடு ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது. அதாவது, அருந்ததி போன்ற கற்புடைய உன் மனைவியின் பருத்த மெல்லிய தோள்களைப் பிரியாதிருப்பதே பெருஞ்செல்வம். என்பதை,

''வடமீன்போல் தொழுதேத்த வயங்கிய கற்பினாள்
தடமென்தோள் பிரியாமை பொருளாயின் அல்லதை''[18]

என்னும் கலித்தொகை பாடல்வரிகள் சுட்டிக் செல்கின்றன. ''கற்பு என்ற சொல்லைக் கற்பு என்று பிரித்துக் கல் என்ற பகுதிக்குக் கற்றல், தோண்டுதல், கல் என்று மூன்று பொருள்கள் இருப்பதைக் கூறுகிறார். கற்றலாவது வாழ்வுக் கலையைக் கற்றல் என்றும் தோண்டுதலாவது உள்ளத்து உணர்வுகளைப் பண்பட்ட நிலையில் வெளிக்கொணர்வது என்றும் கல்லாவது ஊசலாடா உறுதிநிலை என்றும் கூறி மூன்று நிலைகட்கும் மக்களை நெறிபடுத்த வல்லதே திருமணம் என்றும் அவர் விளக்குகிறார் ஈ.கோ.பாஸ்கரதாஸ், இவர்தம் கருத்து பொதுவாகக் கூறப்பட்டதாக அமைகிறது.

இறுதியில் கூறிய ஊசலாடா உறுதிநிலையைச் சமூகவியல் நோக்கில் நுணுகிப் பார்த்தால் முதல் இரண்டு கருத்துகளும் ஆடவர், பெண்டீர் என்ற இருபாலர்க்கும் இயைந்து வருவது போல் அது பொருந்தாமல் போவதும் பெண்டீர்க்கு மட்டுமே கற்பு வற்புறுத்தப் பட்டதாக தெரிகிறது.

**கற்புத் திறம்**

இல்லற ஒழுக்கம் அன்பினால் நிகழாது விட்டால் பெரும் கேடு உண்டாகுமென பழந்தமிழர் நினைத்தனர். ஏனென்றால், ஓர் ஆண்மகனும் ஒரு

பெண் மகளும் தம்முள் ஒருவரையொருவர் உயிர்போல கருதி மிகுந்த அன்பினால் ஒழுகினாலன்றிப் பெண்களுக்குக் கற்பொழுக்கம் நிலை பெறாது. கற்பொழுக்கம் நிலை பெறாவிடில் நன்மக்களைப் பெறுதல் இயலாது. உலகில் ஒருவரோடொருவர் அமைதியாய் இருந்து வாழாபகையும் சினமும் கொண்டு அல்லலுறுவர். தலைவி தலைவனை விட்டுக் களவில் மட்டுமின்றி கற்பு வாழ்க்கை நடக்கும் போது கூடப் பிரிந்திருக்கமாட்டாள். அதனை, அவள் விரும்பாள் என்பதை தலைவன் தோழிக்கு உணர்த்துவதை,

"பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொடு"[19]

என்ற பாடல்வரி மூலம் அறியலாம். இவற்றிலிருந்து தன் பயணத்தை அப்போதைக்கு நிறுத்தியிருந்தாலும் மீண்டும் அவன் தலைவியிடம் இல்லறத்திற்கு வேண்டிய பொருளீட்டும் வினையாற்றுதலே ஆடவர்க்கு உயிர் என்று கூறிப்பிரிய முற்படுகிறான்.

**தவறாமல் நடப்பதே கற்பு**

"கற்புக்கு சொன்ன சொல் மாறா நிலையையே பொருளாகக் கொள்கிறார். முல்லை நிலவாழ்வோடு கற்பைப் பொருத்திப் பார்க்கும் அவர், வினைவயிற் பிரியும் தலைவன் கடைமையை முடித்துவிட்டுக் குறித்த காலத்திற்குள் திரும்புவதாகவும் மனையின் இருக்கும் தலைவி அவன் வரும்வரை கலங்காமல் ஆற்றியிருப்பதாகவும் உறுதி கூறுவதை எடுத்துக்காட்டி இருவரும் இருவகைச் சொற்களால் கட்டுப்பட்டுச் சொன்னசொல் தவறாமல் நடப்பதே கற்பு என்று வரையறுக்கிறார்"[20] மு. வரதராசனார்.

வினைமுற்றி மீள்பவன் கார்காலத்தில் வருவதாகச் சொல்லி வராமல் இருந்ததும் உடனே வருவதாகச் சொன்னவன் வராமல் நெடுங்காலம் தாழ்த்தியமையும் பாடல்களால் உணரப்படுகின்றன. இதனை,

"கருவிக் கார்இடி இரிஇய
பருவம் அன்று, அவர் வருதும் என்றதுவே"[21]

எனவும்,

"இன்இள வேனிலும் வாரார்
இன்னே வருதும்; எனத்தெளித் தோரே"[22]

என்ற பாடலடிகள் சொன்னசொல் காவானாய்த் தலைவன் காலம் தாழ்த்தியதைக் குறிப்பிடுகின்றன. ஆற்றியிருப்பதாகக் கூறும் தலைவியின் ஆற்றாமை மீதூர்ந்த நிலை பல பாடல்களில் காட்டப்படுகின்றது.

பொருளீட்டும் பொருட்டுத் தலைவன் தலைவியைப் பிரியக் கருதினான். அதனை தோழி தலைவிக்குக் கூற ஆற்றாமையால் தலைவன் நம்மைப் பிரிந்து செல்வாரானால், நமது பெண்மை நலத்தினை நுகர்ந்து அவரால் கைவிடப்பட்ட பாழாய்ப்போன இம்மேனியைக் காமநோய் மேலும், வருத்துவதாலே வலிமையற்றுத் தானே உடைந்து அழியும் உள்ளத்துடன் அவர் புணர்தலை விரும்பி, கடும்பனியால் வருந்தி நடுக்கம் கொள்வதை,

"அகன்றுஉறை மகளிர் அணிதுறந்து நடுங்க,
அற்சிரம் வந்தன்று: அமைந்தன்று இதுஎன,
எப்பொருள் பெறினும்; பிரியன்மினோ எனச்
..................................................................................
பாழ்படு மேனிநோக்கி நோய்பொர்"[23]

என்னும் பாடல் வரிகள் இதனை மெய்ப்பிக்கின்றன. தலைவன் வினைவயிற் பிரிந்தமையைத் தோழி தலைவியின்பாற் கூற, தலைவி கடந்து செல்வதற்கு நெடிய காட்டிலே தன் கணவனைத் தேடிச் சென்ற வெள்ளிவீதி என்பவளைப் போல யானும் என் தலைவனைச் தேடிச் செல்ல விரும்பியதை,

“நெறிபடு கவலை நிரம்பா நீளிடை,
வெள்ளி வீதியைப் போல நன்றும்
செலவுஅயர்ந் திசினால் யானே”[24]

என்னும் பாடல்வரிகள் உறுதிப் படுத்துகின்றன. கற்பு என்பதற்குச் சொன்ன சொல் காக்கும் நிலை என்று இருபாலார்க்கும் பொதுவாகப் பொருந்திக் கொண்டு பொருள்கூற முற்படுவதால் சங்கால நடைமுறைக்கு முரண்பட்ட செய்திகளால் இடர்ப்பட நேருகிறது.

**கற்பும் நாணமும்**

நாணின் சிறப்பையும் நாணத்தை விடக் கற்புச்சிறந்ததையும் விளக்குகின்றன. இதனை,

“உயிரினும் சிறந்தன்று நானே நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று”[25]

என்னும் தொல்காப்பிய நூற்பா உணர்த்துகின்றது. தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி தன் காதல் உள்ளம் வீட்டில் இருப்பவர்களுக்குப் புலப்படாமல் மறைத்துக் கொண்டு, கிளியுடன் மெல்லப் பேசிக் கொண்டிருப்பதைக் கூறும் தலைவன் அவளைச் சிறப்பிப்பதை காட்டுகின்றார். இதனை,

“செந்தார்ப் பைங்கிளி முன்கை ஏந்தி,
இன்று வரல் உரைமோ சென்றிசினோர் திறந்து, என
இல்லவர் அறிதல் அஞ்சி, மெல்லென
முழலை இன் சொல் பயிற்றும்
நாணுடை அரிவை மாண் நலம் பெறவே”[26]

என்ற மதுரை மருதன் இளநாகனாரின் பாடல் வரிகளால் அறியலாம். இவ்விடத்தில் நாணத்தால், மற்றவர் கேட்டுவிடக் கூடாதே என்று அஞ்சும் தலைவியின் நிலை பெண் இப்படியெல்லாம் இருக்கவேண்டும் என்று விதிக்கப்பட்டிருப்பதை உணர்த்துகின்றது.

**அச்சம் மடம் நாணம் பயிர்ப்பு**

பெண்ணுக்கு இலக்கணம் கூறுமிடத்து அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு ஆகியவற்றைக் கூறுவர். இதனை,

அச்சம் - புதியவரை, புதியவற்றைக் காணும் போதும் கேட்கும் போதும் அஞ்சுதல்.

மடம் - அதிகம் தெரிந்திருந்தும் தெரியாதது போலிருத்தல்,

நாணம் - ஆடவரைக் கண்டால் இயற்கையாக ஏற்படும் வெட்கம்.

பயிர்ப்பு - அன்னிய ஆடவரின் உடலோ உடையோ தன்மீது பட்டவுடன் அருவருத்தல்,

என்னும் நாற்குணங்களும் நாற்படையாக விளங்கும் ஓர் பெண் தன்னை மணந்து கொண்ட கணவனுக்கு இல்லாளாகி அவன் இல்லை ஆட்சி செய்பவளாகப் புகுகிறாள். அவள் ஆட்சியின் கீழ் அம்மனை விளங்கப் பெறுகையில் அவளுக்கு மனைவி என்ற பதவியுயர்வு கிடைக்கிறது. விளங்கிய மனையின் நாயகனாக வீற்றிருக்கும் கணவனின் இன்ப துன்பங்களில் துணைநின்று காக்குங்கால் அவள் துணைவியாகிறாள்.

நல்மனைவியாய், நற்றாயாய், மாமியார் மெச்சும் மருமகளாய் விளங்கும் பெண்ணைக் கற்புடையாள் எனலாம். ஓர் பெண் இல்லாளாகி மனைவி நிலைக்கு உயர்ந்து துணைவி என்னும் உச்ச நிலையை அடைய கற்பை உயிரினும் ஓம்ப வேண்டியிருக்கிறது.

**பெண்களின் கட்டுப்பாடு**

பெண்களின் அதிகாரம் சிறிது சிறிதாக ஆடவர்க்கு மாறியபோது பெண்களைக் கட்டுப்படுத்துவனவும் அவர்களைக் கட்டியாள்வனுமாகிய சமூகக் கட்டுபாடுகளை ஆடவர் உண்டு பண்ணுவர்."[27] என்று குறிப்பிடுவர். ந.சி.கந்தையா.

ஆகவே, மனைவி கணவனுக்கு அடங்கி நடத்தலோடு, "கணவனையொழித்த பிற ஆடவரோடு சேர்க்கை வைத்திருத்தல் கூடாது என்னும் கட்டுப்பாட்டைக் கடைப்பிடித்தொழுகுதலே கற்பு என்று வரையறுக்கிறார்."[28]

**நெறிகள் நின்று வழுவாமை**

ஒரு பெண் தான் கடைபிடிக்க வேண்டிய ஒழுக்க நெறிகள் நின்று வழுவாமை கற்பாகும். ஆக கற்பு எனபதன் பொருள் ஒழுக்கமாகும். பிறகேன் நாம் கற்பொழுக்கம் (கற்பு ஒழுக்கம் என வழங்கி வருகின்றது. காரணம் யாதெனில் கற்பு என்பதற்கு நாம் தவறான பொருள் கொண்டதனால் தான் பிற்காலத்தில் கற்பு என்ற ஒழுக்கத்தின் பின் மீண்டும் ஓர் ஒழுக்கம் ஒட்டிக்கொண்டு விட்டது எனக் கருதலாம்.

மேலும், கற்பிக்கப்படுவது கற்பாகும். தாய், தந்தையால் ஆசானால் மாமன் மாமியால் கணவனால் ஓர் பெண் இப்படி இருக்கவேண்டும் நடக்கவேண்டும் எனக் கற்றுக்கொடுத்தல் கற்பாகும். ஒருவனுக்கு எத்துணை செல்வங்கள் அமையப்பெறினும் நற்குணம் நல்லடக்கம் இல்லாள் இல்லாக அமையப் பெறாவிடின் அவ்வியல் இல்லாயிராது. இதனை,

"மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்!"[29]

ஆகவே, ஒழுக்கம் என்பது இன்றியமையாததாகிறது. கொண்டானின் துன்னிய கேளிர் பிறரில்லை என விளங்கும் கொழுநன் உண்டபின் தானுண்ணுதல் அவன் துயின்றபின் தான்துயிலுதல் அவன் எழுமுன் எழுதல் போன்றவை ஒழுக்கத்திற் சிறந்த நங்கையரின் செய்கைகள் என்கிறது. இதனை,

> ''கொழுந னுண்டபின் தானுகர் கொள்கையும்
> விழிதுயின்றபின் துஞ்சலு மென்றுயி
> லெழுதன் முன்ன மெழுதலு மேயன்றோ
> பழுதிற் சுற்புடைப் பாவையர் செய்கையே!''[30]

என்கின்றது.

ஒழுக்கத்திற் சிறந்த மங்கை என்பவள் கொண்டவனுக்குத் தாயாயும் ஆண்டானுக்கு அடிமையாயும் புவியின் பொறுமையோடும் இரவில் கணவன் இன்புற்று மகிழ வேசையர் போலும் நாட்டை வழிநடத்தும் மன்னனுக்கு மதியுரை நல்கும் மந்திரிபோலும் இருத்தல் வேண்டும். இதனை,

> ''அன்னை தயையும் அடியாள் பணியுமலர்ப்
> பொன்னின் அழகும் புவிப்பொறையும் - வன்னமுலை
> வேசி துயிலும் விறன்மத் திரிமதியும்
> பேசி லிவையுடையாள் பெண்!''[31]

என, கற்புடைய மாதரார் பற்றிக் கூறுகையில் என்னாசான் பாத்தென்றலார் கற்புடையவள் என்பவள் மாற்றானை மனதாலும் தீண்டாதவள் அல்ல. மாற்றான் ஒருவன் மோகிக்கும் வண்ணம் தன்னை அழகுபடுத்திக் கொள்ளாமலும் பேச்சில் செயலில் அவ்வண்ணம் நடவாதிருத்தலுமே ஆகும் என்பார்.

**கற்பு ஒழுக்கம்**

கற்பு என்ற சொல்லின் மதிப்பு காலத்திற்குக் காலம் மாறிக்கொண்டே வத்துள்ளது. ஆதிமனிதன் கற்பை மாந்திரிக மதிப்புடையதாகக் கருதினான். நாகரிகமடைந்த மக்கள் கற்பை உயர்ந்த அறமாகப் போற்றுகின்றனர். ஆதிமனிதன் வளமையாய்ப் போற்றிய கற்பினின்றும் மாறுபட்ட இயற்கைக்கு முரணான திணிப்பே பிற்கால கற்பு என்று கூறலாம். உள்ளம் ஒத்த தலைவனும் தலைவியும் திருமணம் செய்துகொண்டு, கணவனும் மனைவியுமாய் இல்லறம் நடத்துவதே கற்பு ஒழுக்கம். இது அகஇலக்கிய மரபைச் சார்ந்தது.

**அடிமைப்படுத்தல்**

‘‘பெண்களின் விருப்பு வெறுப்புகளை எண்ணிப் பார்க்காமல், அவர்களின் மீது திணிக்கப்பட்ட கட்டுப்பாடே கற்பாகிறது. உடைமைச் சமூகம் பெண்களை அடிமைகள் போல், பரிவர்த்தனைப் பொருள்கள் போல் நடத்தியதை’’[32] சோ.இலக்குமிரதன் பாரதியும் எடுத்துக் கூறுகிறார்.

பெண்கள் தம் உரிமையிழந்து ஆண்களுடைய சொத்துக்களாவது போலவே அவர்களுடைய காம இன்பத்திற்கும் இனப் பெருக்கத்திற்கும் பணிகள் புரிவதற்கும் உரிய பொருட்களாகும். காலத்தில் குலத் தொகுதியினர் பெண்களைக் கைப்பற்றும் அல்லது கைம்மாறும் பொருளாகக் கொண்டமையை அவர் விளக்குகிறார்.

**முல்லையும் கற்பும்**

முல்லைத்திணையில் கால்நடை வளர்ப்பைத் தொழிலாகக் கொண்ட ஆயர் வாழ்ந்ததால், கற்பு இத்திணையில் கால் கொண்டிருக்க வாய்ப்பிருக்கிறது. இதனை,

‘‘முல்லைச் சான்ற கற்பு’’[33]

என்னும் பாடல்வரி இங்கு கூறிப்பிடத்தக்கது. இருத்தல் என்ற முல்லைநில உரிப்பொருளுக்கும் ஆழ்ந்த பொருளுண்டு. கணவனைப் பிரிந்திருக்கும் காலத்தில் பெண் தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு இருத்தல், பிற ஆடவர்பால் நாட்டம் செலுத்தாது இருத்தல், இல்வரை இய்வாது இருத்தல், என்ற பல்வேறு பொருட்களை உள்ளடக்கியதே முல்லைத்திணையின் இருத்தல் ஆகும்.

பகைவருக்கு அச்சம் தரும் காவல் மிகுந்த முதுமையான ஊரிலுள்ள செல்வம் மிக்க மாளிகையில் நம்மை வெறுத்து வாழ்ந்து கொண்டிருக்கும் அடங்கிய குற்றமற்ற கற்பினையும், குளிர்ச்சிப் பொருந்திய கண்ணினையும் மூங்கிலை ஒத்த பருத்த தோளினையும் உடைய தலைவியைக் காண எண்ணியதை,

‘‘அருங்கடிக் காப்பின், அஞ்சு வரு, மூதூர்த்
திருநகர் அடங்கிய மாசுஇல் கற்பின்,
அரிமதர் மழைக்கண் அமைபுரை பணைத்தோள்,
அணங்குசால், அரிவையைக் காண்குவம்
பொலம்படைக் கலிமாப் பூண்ட தேரே,’’[34]

என்னும் பாடல்வரிகள் இல்வரை கடவாத கற்பு திட்பத்தைக் குறிப்பிடுகிறது. குளிர்ச்சிப் பொருந்திய மணங்கமழும் காட்டின் கண் நறுமணம் உடைய முல்லை மலர்களைச் சூடுவதற்கு அமைந்த கற்பினை உடைய தலைவி வாழும் ஊர் அமைந்திருப்பதை,

‘‘தண்நறும் புறவி னதுவே - நறுமலர்
முல்லை சான்ற கற்பின்
மேல்இயற் குறுமகள் உறைவுஇன் ஊரே’’[35]

என்னும் பாடல்வரிகள் கற்புக்கும் முல்லைத்திணைகும் உள்ள தொடர்பை உணர்த்துகின்றது.

**தோழி ஆற்றுவித்தல்**

தோழியானவள் தலைவியை நோக்கி ஆறலைக் கள்வர்கள் நுனியில் இரும்பு புனைந்த தமது அம்பைத் தீட்டிச் செப்பம் செய்வதற்காக நுனியை நகத்தால் நெருடுவர் அப்போது ஒருவகை ஓசை உண்டாகும். அந்த ஓசையைப் போல சிவந்த கால்களை உடைய ஆண் பல்லியானது ஓசையெழுப்பித் தன் துணையாகிய பெண் பல்லியை அழைக்கும். கள்ளிக் காட்டைக் கடந்து சென்றதும் தலைவர் அங்கு அப்பல்லியின் ஓசையைக்கேட்டு அதன் காதலை உணர்ந்து உன்னை நினைக்க மாட்டாரோ, உன்னை நினைத்து விரைவில் மீண்டும் வருவார். கவலை கொள்ளாதே என்று கூறி தலைவியை ஆற்றுவிப்பதை,

''கள்ளி முள் அரைப் பொருத்தி செல்லுநர்க்கு
உறுவது கூறும் சிறுநெந் நாவின்
மணிஓர்த் தன்ன தெண்குரல்
கணிவாய், பல்லிய காகுறந் தோரே!''[36]

என்னும் பாடல்வரிகள் உறுதிப்படுத்துகின்றன. தோழியின் துணை களவுக் காலத்திற்கும் மட்டுமின்றி கற்புக்காலத்திற்கும் உறுதுணையாக நின்றதை அறியமுடிகிறது.

பொருள் மேல் வெறுப்பு ஆடவன் பல இடங்களுக்கும் சென்று ஈட்டி வந்த பொருளே கற்பு என்னும் கட்டுப்பாட்டைக் கொண்டு வந்ததால் பெண்டிர்க்குப் பொருளின் மேல் வெறுப்பு ஏற்படுகிறது. செல்வச்செழிப்பு, பரத்தையரை நாடிச் சென்றபோது அவ்வெறுப்பு மேலும் வளர்ந்தது. இல்லற இன்பத்தை நுகரத்துடிக்கும் பெண்ணும் பொருளில் மயங்கிப் போலி

மதிப்புக்காகப் புறம்போகும் ஆணும் முரணிக் கொள்ளும் நிலை அகநானூற்றுப் பாலைப் பாடல்களில் இடம்பெறுகிறது. இதனை,

"பொருளே காதலர் காதல்:
அருளே காதலர் என்றி நீயே"[37]

என்னும் பாடல்வரிகளால் அறியலாம்.

**திருந்துக மாதோ நும் செலவு**

தலைவி, தன்னைவிடப் பொருளைப் பெரிதாய் எண்ணிய தலைவனின் செயலை வெறுத்துக் கூறுவதும் தலைவன் தன் செலவைக் குறித்துச் சொன்னதுமே மிகவும் கலங்கிப் பேசமுடியாமல் தடுமாறி இறுதியில், திருந்துக மாதோ நும் செலவு என்று கூறுவதும் அவ்வாறு தடுத்தும் கேளாத தலைவன் அவளின் நிலையை எண்ணி வருந்தினாலும் பொருளின் தேவையால் ஈர்க்கப்பட்டுச் சென்று விடுவதை,

"எல்லையும் இரவும், வினைவயின் பிரிந்த
முன்னம், முன்உறுபு அடைய உள்ளிய
புதிமறந்து உறைதல் அரிது ஆகின்றே"[38]

என்னும் பாடல்வரிகள் உறுதிப்படுத்துகின்றன.

**குறிப்பு வழி வரைவு தூண்டல்**

தலைவனிடம் வரைவு மேற்கொள் என்று நேரடியாகக் கூறமுடியாத நிலையில், குறிப்புப் பொருள் வழி வரைவு தூண்டப்படுகிறது. இதுவரைவு கடாதலில்தான் அதிகம் ஆளப்படுகிறது. தலைமகன் இரவுக்குறி வருவதை அறிந்ததோழி அதன் ஏதம்கூறி வரவுமறுக்கிறாள். அதனைத் தலைவிக்கு

நேரடியாகக் கூறாமல் புலிக்கு அஞ்சி விரைந்து செல்லாத நடையையுடையதன் கன்றைப் பிடியானை துணை நின்று பாதுகாக்கும். தலைவன் வரும்வழி அத்தகைய கொடியவழி என்று கூறியதோடு, அதுபோல, தாங்களும் தலைவனின் பிரிவால் ஏற்படும் துன்பத்திற்கு அஞ்சினாலும், அவன் இருளில் வரும்போது ஏற்பட இருக்கும் துன்பத்தை எண்ணி, அவன் நன்மைக்காக அவனை வாராது பாதுகாக்க வேண்டும் என்கிறாள்.

தலைவனின் வரவினைத் தடுப்பது தலைவிக்கு வருத்தமும் மனவேறுபாட்டினையும் உருவாக்கும் என்பதை அறிந்ததோழி, அவள் மனநுட்பம்தனை அறிந்தவளாய் பிறிதோர் எடுத்துக் காட்டைக் குறிப்பால் உணர்த்தி, தன் கருத்தினைக்கூறி நிற்கும் திறத்தினை உணரமுடிகிறது.

தலைவன் வரைவு நீட்டிக்கிறான். அதனால் தலைவி அடையும் வேதனையை தநேராகக்கூறாமல் குறிப்புப் பொருள் மூலம் அறிவிப்பது, அதிக பயனைத்தரும் என்ற மனவியலை நன்குணர்ந்தவள் தோழி. நற்றிணைப்பாடல் ஒன்றில்,

“வாரற்க தில்ல தோழி கடுவன்
முறி ஆர் பெருங் கிளை அறிதல் அஞ்சி
கறி வளர் அடுக்கத்து களவினில் புணர்ந்த
செம் முக மந்தி செய்குறி கருங் கால்
பொன் இணர் வேங்கைப் பூஞ் சினைச் செலீஇயர்
குண்டு நீர் நெடுஞ் சுனை நோக்கிக் கவிழ்ந்து தன்
புன் தலைப் பாறு மயிர் திருத்தும்
குன்ற நாடன் இரவினானே”[39]

என, தோழி தலைவியை நோக்கி உன்நெற்றியில் பசலைபடந்தாலும் பருத்ததோள் நெகிழ்ந்தாலும் இரவுப்பொழுதில் அவ்வழியில் குன்றநாடன்

இனிவாராது இருப்பானாக என்றுகூற வந்த இடத்துத் தோழி, தலைவியின் அச்சத்தை உணர்த்தவளாய், அவ்வுச்சம் தீருவதற்கான வழியினை நேராகக் கூறினாள். தலைவி நாணமடைவாள் என்றதால், களவில் புணர்ந்த மந்தி தன் சுற்றம் அறியுமே என்று அஞ்சி புணர்ச்சியால் குலைந்த மயிர்த் திருத்துதலைக் கூறி உள்ளுறையாகத் தலைவியின் அச்சம் தீரத்தலைவனை வரைக என்று கூறுகிறாள்.

மேலும், நற்றிணைப்பாடல் ஒன்றில் (318:5-9) அன்பையும், துன்பத்தையும் களிறு காணாப் பிடியின் புலம்பலுக்கு உள்ளுறுத்திக் கூறுகின்ற தோழியின் இல்லறவியலை அறியமுடிகிறது. சங்க இலக்கியங்களில் தோழி கூற்றிற்குரிய பல இடங்களில் குறிப்பாக காதலை மறைக்கும் தலைவியிடம், தான் அதனை அறிந்ததாக நேராகக்கூறின் நாணுடைய அவள் தாங்குவளோ? என்ற அச்சத்திலும்,

“நல்ல பெருந் தோளோயே! கொல்லன்
எறி பொன் பிதிரின் சிறு பல தாஅய்
வேங்கை வீ உகும் ஓங்கு மலைக் கட்சி
மயில் அறிபு அறியா மன்னோ;
பயில் குரல் சுவரும் பைம் புறக் கிளியே”[40]

என, நேராகப் பொருளீட்டி வந்து வரைக எனத் தலைவனிடம் கூறாமல் வரையவேண்டிய முறையினையும்,

“துஞ்சு பதம் பெற்ற துய்த் தலை மந்தி
கல்லென் சுற்றம் கை கவியாக் குறுகி,
வீங்கு சுரை ஜெழுங்க வாங்கி, தீம் பால்
கல்லா வன் பறழ்க் கைந் நிறை பிழியும்
மா மலை நாட! மருட்கை உடைத்தே...”[41]

என்னும் குறிப்பால் உணர்த்தும் பாடல்களின் வழிதோழியின் ஆளுமைத் திறனையும், உளவியல் துறையில் அவரின் மேம்பட்ட நிலையினையும் அறியமுடிகிறது.

தகுதியைப் பார்த்து மணமகனைத் தேர்தெடுத்த கற்பு சமூகத்தில் அதன் எதிர்விளைவாய் உடன்போக்கு நிகழ்ந்தது. உடன்போக்கு களவொழுக்கத்தின் முடிநிலையாயினும் கட்டுப்பாட்டின் மறுவினையாதலால் இங்கு கூறப்படுகிறது. பெண்ணின் காதலை ஏற்றுக்கொள்ளாத பெற்றோர் வேற்றவர் வரைவுக்கு ஏற்பாடு செய்யும் நிலையில், தோழி தலைவியைத் தலைவனுடன் அனுப்பிவிடும் செய்தியும் அகநானூற்றில் இடம்பெறுகிறது. இதனை,

‘‘நனைவினை நறவின் தேறல் மாந்தி,
பனைவினை நல்இல் தருமணல் குவைஇ,
பொல்மல் ஓதி எம்மகள் மணன் என
வதுவை அயர்ந்தனர் நமரே’’[42]

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

**திருமணம்**

‘‘கற்பு என்ற கட்டுப்பாடு விதிக்கப்பட்ட காலத்தில் தோற்றம் பெற்ற ஒருதார மணமுறை, இயற்கையான நிலைமைகளை அடிப்படையாகக் கொள்ளாமல், பொருளாதார நிலைமைகளை அதாவது, ஆதிகால இயற்கையாக வளர்ந்த பொதுச் சொத்தின் மீது தனியுடைமை வெற்றி பெற்றிருந்த நிலைமைகளை அடிப்படையாகக் கொண்டு எழுந்த முதல் குடும்ப வடிவம் என்று எங்கெல்ஸ் விளக்குகிறார்.’’[43]

“திருமணம் பொருளாதார வசதிக்காகச் செய்து கொள்ளப்படுவது என்பதை க. கிருட்டிணசாமியும் குறிப்பிடுகிறார்.”[44]

“ஒருத்திக்கு ஒருவன் என்ற கற்பு வாழ்க்கை நிலத்தைச் சொத்தாக மதிக்கும் சாதிகளில் காணப்படுவதை எடுத்துக் கூறும் அவர், ஒரு கணவர் மணம் என்பதே தவறாக ஒருதாரமணம் என்று குறிப்பிடுவதாகவும் கூறுகிறார்.”[45] களவு வழியிலும் திருமணம் நடைபெறும். களவின்றியும் நிகழும். களவு வழியில் நிகழும் திருமணம், களவு வெளிப்படா முன்னும் நிகழும் வெளிப்பட்ட பின்னும் நிகழும்.

**களவு வெளிப்படா முன்**

களவின் வழி வந்த திருமணத்தை, அதிலும் களவு வெளிப்படா முன் நிகழ்ந்த திருமணத்தைக் குறித்துக் கூறுகிறது. இதனை,

“கரு விரல் மந்தி கல்லா வன் பார்ப்பு
இரு வெதிர் ஈர்ம் கழை ஏறி சிறு கோல்
மதி புடைப்பது போல தோன்றும் நாட
வரைந்தனை நீ என கேட்டு யான்
உரைத்தனென் அல்லனோ அஸ்து என் யாய்க்கே”[46]

என, வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்து பின் மணங்கொள்வதெல்லாம் களவு வெளிப்படா முன் நிகழும் திருமணங்களாகும்.

திருமணம் தலைவி இல்லத்தில் நடைபெறுகிறது. தலைவனின் தாயிடத்தில் யாரேனும் சென்று சொல்ல வேண்டும் என்று நற்றாய் விரும்புகிறாள். இதனை,

“நல்லோர் ஆங்கண் பரந்து கைதொழுது
பல் ஊழ் மறுகி வினவுவோயே
திண் தோள் வல் வில் காளையொடு
கண்டனெம் மன்ற சுரத்து இடை யாமே”[47]

என, தலைவனின் தாய், தலைவியின் தாய் எல்லாருக்கும் தெரிந்த பின் இம்மணம் நடப்பதால் இது களவு வெளிப்பட்டபின் நிகழும் மணமாயிற்று.

**களவு வழி வாராத் திருமணம்**

களவு வாழ்க்கையில் தொடராமல் பெரியோர் பேசி முடிக்கும் திருமணங்களும் உண்டு. இத்தகைய திருமணம் நடைபெறும் வகையில் பாடல் சான்று ஐங்குறுநூற்றில் இல்லை. எனினும் குறிப்புகள் உள்ளன, நொதுமலர் வரைவு, வேற்று வரைவு முயற்சிகள் அறிந்து தோழி அறத்தொடு நிற்பது, களவு வழி வாராமல் திருமணங்கள் நடக்கின்றன என்பதற்குச் சான்று ஆகும்.

எவ்வழியில் கற்பு வாழ்க்கை (திருமண வாழ்க்கை) வரினும் சிறப்புடையதே ஆகும். திருமணத்திற்குப் பின் இல்லறத்தை இனிதாக நடத்த வேண்டும்.

**இல்லறத்தில்**

கற்பு வாழ்க்கை மேற்கொண்டிருக்கும் தலைவன் தலைவியரிடையே அன்பு மிக்கிருக்க வேண்டும். இல்லறத்திற்கு இன்றியமையாதது அன்பு. தலைவன் தலைவியரிடையே அமைந்த அன்பு பற்றி, செவிலித்தாய் நற்றாயிடம் பல பாடல்களிலும் குறிப்பிட்டுள்ளாள். இதனை,

“மாதர் உண்கண் மகன்விளை யாடக்
காதலித் தழீஇ இனிதிருந் தனனே”[48]

என, முன் விளையாடுவதைப் பார்த்த படியே தான் விரும்பிய மனைவியைத் தழுவிக் கொண்டு மகிழ்ச்சியோடு இருந்தான் எனவும், இன்னும் பலவாறும், தலைவன் தலைவி மீதும், குழந்தை மீதும் கொண்ட அன்பு செவிலியால் விளக்கப்பட்டுள்ளது.

**பெற்றோர் இசைவு**

செல்வத் தகுதியும் குலமும் ஒத்து அமைகையில், பெற்றோரே மகள் விரும்பிய மணாளனை ஏற்றுக்கொண்டதற்கும் அகநானூற்றில் சான்றுள்ளது. இதனை,

‘‘மூவேறு தாரமும் ஒருங்குடன் கொண்டு,
சாந்தம் பொறைமரம் ஆக நறைகுர்
வேங்கைக் கண்ணியன் இழிதரு நாடற்கு
இன்தீம் பலவின் ஏர்கெழு செல்வத்து
எந்தையும் எதிர்ந்தனன், கொடையே, அலர்வாய்
............................................................................
அம்பல் ஊரும் அவனொடு மொழியும்
யாயும், அவனே என்னும்’’[49]

என்னும் பாடல்வரிகள் தந்தை மகட்கொடை நேர்ந்ததும் தாய் உடன்பட்டதும் குறிப்பிடப் படுகின்றது. சாந்தம் பொறை, மறமாக, இன்தீம் பலவின் ஏர்கெழு செல்வத்து என்ற தொடர்களால் தலைவியின் தந்தை, தலைவன் ஆகிய இருவருமே குறிஞ்சி நிலத்தவராதலும் மூவேறு தாரமும் ஒருங்குடன் கொண்டு வருதல் என்பதால் தலைவனின் செல்வத்தகுதியும் பெறப்படுகின்றன.

**பரத்தைமை**

‘‘கற்பு பெண்ணை மட்டுமே அடிமைப்படுத்தியது என்பதைத் தெளிவுறுத்தும் வகையில் பரத்தைமை ஒழுக்கம் அமைகிறது. கணவனது

பரத்தைமைக்காக மனைவி அவனை வெறுத்தொதுக்கினாள் என்ற செய்திக்கே தமிழிலக்கியத்தில் இடமில்லை என்பார் ந. சுப்புரெட்டியார்''[50] பரத்தைமையை வெறுத்தாலும் வெளிக்காட்ட இயலாத கட்டுநிலையில் அடிமைநிலையில் பெண்கள் வாழ்ந்ததால் வெளிப்படுத்த வாய்பில்லாது போயினும் குறிப்பால் உணரும் நிலையில் தலைவியரின் உள்ளக் குமுறல்களைப் புலவர்கள் உள்ளுறையில் அமைத்துப் பாடியுள்ளனர்.

''தெய்வம் அஞ்சல் புரையறம் தெளிதல் என்று தொடங்கும் நூற்பாவிற்கு உரையெழுதிய இளம்பூரணர் புரையறம் என்பது பரத்தைமையைக் கண்டு புலவாது இதனைப் போற்றல் இல்லுறை மகளிர்க்கு இயல்பெனும் அறம்'' என்கிறார்.

அகநானூற்றிலும் புலக்கும் பெண்டிரை விலக்கி வைத்துவிடும் அளவிற்கு ஆடவர் செல்வர் என்பதையும் சமூகத்தில் அப்பெண்டியரின் நிலை மிகவும் தாழ்ந்துவிடும் என்பதையும் தோழி தலைவிக்கு எடுத்துக் கூறுவதை,

''பரத்தைமை தாங்கலோ, இலென் என வறிதுநீ
புலத்தல் ஒல்லுமோ? மனைகெழு மடந்தை!
அதுபுலந்து உறைதல் வல்லி யோரே,''[51]

என்ற பாடல்வரிகளால் உணரலாம்.

''பொதுமகளிர் முறையைக் கொண்டு தனது வாழ்க்கையை அணி செய்து கொண்டுள்ள கணவனுக்குப் பக்கத்திலேயே, புறக்கணிக்கப்பட்ட மனைவியும் நிற்பதை எங்கெல்ஸ் எடுத்துக் காட்டுகிறார்.''[52]

**மகப்பேறு**

கற்பு வாழ்வில் மகப்பேற்றிற்கு மதிப்பிருந்தது. ஆண்மக்கட்பேற்றையே அகப்பாடல்கள் குறிப்பிடுவதால், அக்காலச் சமூகம் ஆடவர்க்கே மதிப்பளித்தமை பெறப்படுகின்றது. அகநானூற்றில் முல்லை, பாலை, மருதப் பாடல்களில் புதல்வன் குறிக்கப்படுவதை,

> ‘‘இம்மை உலகத்துஇசையொடும் விளங்கி,
> மறுமைஉலகமும் மறு இன் எய்துப,
> செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
> சிறுவர்ப் பயந்த செம்மலோர் எனப்
> பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்
> வாயேஆகுதல் வாய்த்தனம் - தோழி?’’[53]

என்னும் பாடல்வரிகள் ஆண்மக்கள் பேற்றுக்குச் சமூகத்தில் இருந்த பெருமையைத் தெளிவாகச் சுட்டிக்காட்டுகிறது.

**பொருட்பிரிவு**

தலைவனும் தலைவியும் நடத்தும் இனிய இல்லற வாழ்க்கையின் பொழுது தலைவன் பொருளீட்டச் செல்வதுண்டு. தங்கள் இல்லற வாழ்க்கைக்கு மட்டுமல்லாமல் சுற்றத்தாருக்கு உதவுவதற்காகவும் அவன் பொருளீட்டச் செல்வான்.

**செலவு அழுங்குதல்**

தலைவன் பொருள்வயின் பிரிந்துச் செல்லுதலை தாமதித்தல்.

**சிலம்பு கழிதல்**

திருமணத்திற்கு முன் தலைவியின் சிலம்பை நீக்கும் சடங்கு, உடன்போக்கு சூழ்நிலையில் இதனைக் காணாத தாய் வருந்துவாள்.

**வரைவு மலிதல்**

மணம் செய்து கொள்ளுதற்குரிய முயற்சிகளின் மிகுதி.

**வரைவு**

தலைவன் தலைவியைக் குடும்பத்தின் ஒப்புதலோடு திருமணம் புரிதல்.

**இனிய இல்லறம்**

தலைவியும் தலைவனும் இனிய இல்லற வாழ்வை நடத்தி வருகின்றனர். அவர்களுக்கு புதல்வன் ஒருவன் பிறக்கின்றான். பாணன் அவர்கள் இல்லத்திற்கு வந்து பாடுவான். அவர்களுடைய மகிழ்வான வாழ்க்கையைக் கண்ட செவிலித்தாய் நற்றாயிடம் அதுபற்றி கூறுவாள்.

**இருத்தல்**

முல்லைத்திணையில், தலைவி தலைவனுக்காகப் பொறுமையுடன் காத்திருத்தல்.

**போர் செய்தற்பொருட்டு பிரிதல்**

தலைவன் போர் செய்வதற்காகப் பிரிவதுண்டு. அவன் குறித்த பருவத்தில் வர வேண்டும் என்று தலைவி அவனுக்காக இல்லத்தில் காத்திருப்பாள். கார்காலம் வருவதற்கு முன் வருவதாகக் கூறிச் சென்ற தலைவன் திரும்பிவரத் தாமதித்தால் தலைவி வருந்துவாள்.

**தலைவன் திரும்புதல்**

கார்காலம் துவங்கும் வேளையில் தலைவன் திரும்பி வருதல். தேரோட்டியிடம் தலைவியின் சிறப்பைக் கூறி விரையுமாறு வேண்டுவான். தேரோட்டி கூற்றாகவும் சில பாடல்கள் உள்ளன.

**பரத்தையின் கூற்று**

பரத்தை தலைவியை வெறுத்தும் புகழ்வதுமாகவும் உள்ள சில பாடல்கள் உள்ளன.

**மீண்டு வருதல்**

திரும்பி இல்லத்திற்கு வர விரும்பும் தலைவன் வாயில்களை (தூதுவர்களை: பாணன் நண்பர்கள் முதலியவர்கள்) தலைவியிடம் அனுப்புதல்.

**பரத்தையிற் பிரிவு**

தலைவன் பரத்தையுடன் கொண்ட உறவினால் தலைவியிடமிருந்து பிரிவான். தலைவி துன்பத்தில் ஆழ்வாள். தோழி தலைவனைக் கடிந்துகொள்வாள்.

**தலைவனின் வாயில்கள்**

தலைவனின் தூதுவர்களாகப் பாணனும் தலைவனின் நண்பர்களும் வருவார்கள். சில வேளைகளில் தோழி வாயில் மறுப்பாள். சில வேளைகளில் தலைவி தலைவனை ஏற்றுக் கொள்வாள்.

**பாணனுக்கு வாயில் மறுத்தல்**

தூதுவனாக வரும் பாணனை, தோழி வாயில் மறுத்து அனுப்பி விடுவாள்.

**வாயில் மறுத்தல்**

தலைவனை ஏற்றுக் கொள்ள மறுத்துத் தலைவியும் தோழியும் வாயில் மறுத்தல்.

**வாயில் நேர்தல்**

தலைவனின் தூதிற்கு தலைவி உடன்படுதல். தலைவனைத் தலைவி ஏற்றுக் கொள்ளுதல்.

"அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின் நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை"[54]

என்கிறார் வள்ளுவர்.

மற்ற உயிரின் துன்பத்தை தன் துன்பம் போல் கருதி காப்பாற்றாவிட்டால் நாம் பெற்ற அறிவினால் என்ன பயனுண்டாகும் என்ற கருத்தைக் கொண்டு தொல்காப்பியத்தின் கற்பியலில் வருகின்ற வாயில்கள் எவ்வாறு தலைவன், தலைவி பிரிவைத் தாங்காது அவர்களுக்கு உறுதுணையாக இருக்கின்றனர் என்பதனை இக்கட்டுரை விளக்கிட முயல்கிறது. கற்பு என்பது திருமண வாழ்க்கையைக் குறிக்கும் என்கிறார் தொல்காப்பியர். அன்பு, அறிவு, ஆற்றல், திரு, உரு முதலிய பண்புகளில் ஒன்றிய தலைவன், தலைவியும் இணையும் வாழ்க்கையே கற்பியல் என்று கூறப்படுகிறது.

**தலைவியின் அன்பு**

கட்டித் தயிரைப் பிசைந்த காந்தள்மலர் போன்ற மெல்லியவிரலை உடைய தலைவி துடைத்துக்கொண்டு குவளை போன்ற மைப்பூசிய கண்களில் தாளிப்பின் சுவையுடன் புளிக்குழம்பைத் தன் தலைவனுக்கு

பரிமாறியதைக் கண்டு உள்ளம் மகிழ்ந்ததைச் சொல்வதாக நமக்கு உணர்த்துகிறார். இதனை,

> “முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
> ……………………………………………………………
> இனிதெனக கணவ னுண்டலின்
> நுண்ணிதின் மகிழ்ந்தன றொண்ணுதல்-முகனே”[55]

என்று கூடலூர் கிழார் தலைவியின் அன்பினை இப்பாடலில் சுட்டுகின்றார்.

**வாயில்கள்**

தலைவன்-தலைவியிடத்தும், தலைவி-தலைவனிடத்தும் தூதுவிடும் வழக்கம் மிகவும் தொன்மையான வழக்கம். இதனைத் தொல்காப்பியர் வாயில்கள் என்று குறிப்பிடுகின்றார். சங்க இலக்கியத்தில் வரும் ஊடல்தீர்க்கும் வாயில்களாக பன்னிருவர் ஆவர், தொல்காப்பியர் இந்தவாயில்கள் யார் யார் எனப் பட்டியலிட்டிக் காட்டுகிறார். பன்னிருவாயில்களை, இதனை,

> “தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
> பாணன் பாடினி இளைஞர் விருந்தினர்
> கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்
> யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப”[56]

என்ற நூற்பாவில் தொல்காப்பியர், தொகுத்துக் கூறுகிறார். கற்புக்காலத்தில் தோழி, தாய், பார்ப்பான், பாங்கன், பாணன், பாடினி, இளையர், விருந்தினர், கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர் இவர்களை வாயில்கள் என தொல்காப்பியர் கூறுகின்றார்.

**வாயில்கள் பற்றிய விளக்கம்**

தலைவன் தலைவி இருவரும் இணைந்து இல்லறம் நடத்தும் போது இடையில் பிற பெண்களால் குறுக்கீடு ஏற்படுவதுண்டு. தலைவனிடம் காதல் பாராட்டுகிற அல்லது காமம் பூண்டு பழகும் பரத்தையர் தலைமக்களது இல்லறத்தில் குறுக்கிடுவர். அதனால் தலைமக்களிடையே சிக்கல் எழும். தலைவன் மீது தலைவி ஊடல் கொள்வதும் பின்பு ஊடல் தீர்க்கும் வாயில்கள் மூலம் அந்தப் பிணக்குத் தீர்வதும் சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

களவிலும், கற்பிலும் தலைவன் தலைவியர்க்குத் துணை நிற்பவர்கள் வாயில்கள் ஆவர். ஐம்பொறி, கடை, கதவு, காரணம், திறம், தூது வாய்தல், தூவரம், என்று பல பொருள்களை வெள்ளிவிழா அகராதி குறிப்பிடுகின்றது.

**நம்பியகப் பொருளில் பிரிவுகள்**

தொல்காப்பியம், அகத்திணையியலில் களவு, கற்பு ஆகிய இருவகைக் கைகோளுக்குரிய பிரிவு வகைகளைப் பொதுவகையாகச் சுட்டுகின்றது. பிற்காலத்தில் நாற்கவிராச நம்பி இப்பிரிவை களவுக்கும் கற்புக்கும் உரியனவாகத் தனித்தனியே கூறுகின்றார். இதனை,

> ‘‘ஒருவழித் தணத்தல் வரைவிடை வைத்துப்
> பொருள்வயிற் பிரிதலென் றிருவகைத்தாகும்’’[57]

எனக் களவுக்குரியதாகவும்,

> ‘‘பரத்தையிற் பிரித லோதற்குப் படர்தல்
> அட்டகு காவலொடு தூதிற் ககறல்
> உதவிக் கேகல் நிதியிற் றிகழ்தலென்
> றுரைபெறு கற்பிற் பிரிவறு வகைத்தே’’[58]

எனக் கற்புக்குரியதாகவும் குறிப்பிடுகின்றார். இங்குத் தூதிற்பிரிவு கற்புக்காலத்தில் நிகழும் என்று நம்பியகப்பொருள் கூறுகின்றது, இறையனார் அகப்பொருளில் கற்புக்குரிய பிரிவு வகைகள் ஆறுவகை ஆகும். என்பதை,

> ‘‘ஓதல் காவல் பகைதணி வினையே
> வேந்தர்க் குற்றுழி பொருட்பிணி பரத்தையென்
> றாங்கவ் வாறே யவ்வயிற் பிரிவே’’[59]

என்று கூறுகின்றது. தொல்காப்பியர் களவு, கற்பு எனும் இருவகைக் கைகோளுக்கும் உரிய பிரிவு வகைகளைப் பொதுநிலையில் சுட்டியிருந்தாலும், பிற்காலத்தில் இவை களவுக்கும், கற்புக்கும் எனத் தனித்தனியே வரையறுத்துக் கூறப்பட்ட வளர்ச்சி நிலையையும், தூதிற் பிரிவு கற்புக் காலத்துக்கேயுரியது என்ற கருத்தை பிற்கால இலக்கண நூல்கள் கூறுகின்றது.

**அக மரபின் வாயில்கள்**

கற்புக் காலத்தில், ஊடல் தீர்க்கும் வாயில்கள் பன்னிருவரில் சிலர் சில வேளைகளில் இல்லத்தில் உட்புகுந்து தம் கருத்துக்களை ஏற்று உரைக்கும் உரிமையைப் பெற்றோர் அகம்புகல் மரபின் வாயில்கள் ஆவார்கள். தொல்காப்பியர் அகம் புகும் உரிமையுடைய வாயில்கள் யார் யார் என்பது தெரிவுறுத்தப் படவில்லை. எனினும், சூழ்நிலைக்குத் தக்க வாயில்கள் யார் வேண்டுமானாலும் இத்தகைய உரிமையைப் பெறுவார்கள் என்று கூறுகிறார். மனம் வேறுபட்டிருக்கும் இருவரிடையில் அவர்கள் மனக் குறைகளை நீக்கி இணைக்கும் பணியைச் செய்வோரே வாயில் என்ற பெயரால் சுட்டுகின்றார். இதனை,

‘‘குற்றம் காட்டிய வாயில் பெட்பிவம்

பெட்ட வாயில் பெற்றிரவு வலியுறுப்பினும்’’[60]

எனத் தொல்காப்பியம் சுட்டுகின்றது.

**ஊடலும் வாயில்களும்**

களவு வாழ்க்கையில் தலைவியோடு மட்டுமே கூடி, அவளை என்றும் பிரியாமல் இருந்த தலைவன் - கற்பு வாழ்க்கை வாழும்காலத்தே பரத்தையர் முதலான பிறவகைப் பெண்களோடு தொடர்பும் மறைமுக உறவும் கொள்வான். இது பற்றி அந்நியவரும் போது தலைவி கோபம் கொள்வாள். அதுவே ஊடல்’’ எனப்படும்.

தலைவியின் ஊடலைப் போக்கி மீண்டும் கூடநினைப்பது தலைவனது இயல்பு, அதற்கு உறுதுணை புரிவோர் பலர். அவர்கள் ஊடல் தணிக்கும் வாயில்கள் எனப்படுகின்றனர். பாணன், பாடினி, கூத்தர், இளையர் (வேலையாட்கள்), மற்றவர்கள், பாங்கன், பாங்கி, செவிலி, மூத்தோர் அல்லது சான்றோர், புதல்வன் முதலியவர்களோடு, விருந்து வருதல், பிரிவைப் பொறுத்திருக்க இயலாமை முதலான காரணங்களும் தலைவியின் ஊடலைப் போக்கவல்ல வாயில்களாகும்.

**வாயில்கள் கூற்று**

கற்பின் வாயில்களின் கூற்றாக தொல்காப்பியம். இதனை,

‘‘கற்பும் காமமும் நாற்பால் ஒழுக்கமும்

..................................................................

அகும் புகல்மரபின் வாயில்கட்கு உரிய’’[61]

எனக் குறிப்பிடுகின்று.

இல்லத்தினுள் இருக்கும் தலைவன், தலைவியிடம் பழகும் உரிமையுடையவர் வாயில்கள். தலைவனிடம் தலைவியின் கற்பு நல்வழி ஒழுகுதல், பொறுமை, மனக்கட்டுப்பாடு, விருந்து தருதல், உறவினை காக்கும் முறை போன்றவற்றை வாயில்கள் கூறுவர்.

> ‘‘இடித்து வரை நிறுத்தலும் அவரதாகும்
> கிழவனும் கிழத்தியும் அவர்வரை நிற்றலின்’’[62]

தலைவனையும், தலைவிக்கும் தன் எல்லை தாண்டாது இருவருக்கும் அறிவுரை கூறும் உரிமை அறிவர்க்கு உண்டு. இதனை,

> ‘‘புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்தும்
> ........................................................................
> அன்பிலை கொடியை என்றலும் உரியள்’’[63]

என, தலைவனும் தலைவியும் கூடுதலும், ஊடலையும் அவரிடையே உண்டான வேறுபாடுகளைக் களைய சொல்வதற்குத் தகுந்த சொற்களைக் கூறுதலும், பரத்தமை தொடர்பை துண்டித்தலும், தலைவியின் அறியாத நாட்களைச் சுட்டிக்காட்டும் முறையும் தலைவி அன்புடையவள் என்று கூறுதலும் தோழிக்கு உரியதாகும். இந்தத் தலைவியானவள் தலைவனுக்கு ஏற்றவள் என்றும் கூறுகிறார் ஔவையார். இதனை,

> ‘‘பத்தாவுக் கேற்ற பதிவிரதை’’[64]

என்கிறார். அ.்.தாவது பரத்தமை தொடர்பு கொண்ட பொழுது கூட தலைவியானவள் தனிமைத் துன்பத்திலும் பதிவிரதையாகவே வாழ்ந்தாள் என்று வாயில்கள் காட்டுகின்றனர். தொல்காப்பியம் இதனை,

"மனைவி தலைத்தாள் கிழவோன் கொடுமை
தம் உளவாதல் வாயில்கட்கு இல்லை
..................................................................
நடக்கை எல்லாம் அவர்கட் படுமே"[65]

எனச் சுட்டுகின்றது, மனையாளிடம் இருந்து விலகி தலைவன் மேற்கொண்ட பரத்தமை ஒழுக்கத்தின் காரணமாக செய்யும் கொடுமைகளை, அவனிடம் வாயில்கள் வருந்திக் கூறுவதில்லை. கொடுமைகளுக்கு ஆளான தலைவியிடம் வாயில்கள் பேசும் பொழுது கையறு நிலையில் உள்ள மனையாளுக்கு நல்ல வாழ்வு அமையும் முறையிலேயே பேசுவர்,

கிழவோனும், கிழத்தியும் தங்கள் ஊடலைத்தீர்க்க வேண்டும் பொழுது அவர்களிடம் நேரே கூறாது படர்க்கையிடத்துப் பேசுவது போல பேசுவர் என்கிறார் தொல்காப்பியர். வாயில்களாக வருவோர் தலைவன், தலைவியிடம் எம்முறையில் எந்த வகையான செய்திகளைக் கூற வேண்டும் என்பதனையும் உரைக்கின்றார்.

**தலைவியின் ஊடலைத் தீர்த்தல்**

களவுக்கால நிகழ்வுகளும், இன்ப வாழ்க்கையைப் புகழ்தலும், பல வழியில் தலைவியின் ஊடலைத் தீர்த்தல், வாழ்க்கைக்கான உறுதியும், அறிவும் உண்மையும் உணர்த்தலும், காரணம் காட்டி வாழ்க்கையை வாழ வைத்தலும், துணிவாக வாழ்தலும், தலைவியின் அழகு கெடும் வண்ணமாக பேசுதல் கூடாதென உரைப்பது கூத்தர்களின் செயலாகும்.

தலைவன் இருக்கும் நிலத்திற்கே சென்று தலைவியின் நிலையை உரைப்பதும், தலைவன் திரும்ப வரும் காலத்தை தலைவியிடத்துக் கூறுவதும் கூத்தர், பாணர். இருவருக்கும் உரியது. செல்கின்ற வழி

எப்படிப்பட்டது என்றும் செய்கின்ற செயல் எவ்வாறு முடியும் என்பதும் அதனால் விளைகின்ற பயனும், இட்ட கட்டளையைச் செய்து முடிப்பதும், தலைமக்களிடம் விளைகின்ற வினாவும், அதற்கேற்ற விடை கூறுதலும், வழியினிடையே கண்ட பொருளும், இறைச்சிப் பொருளான கருப்பொருளும், உயிர்கள் தோன்றுவதற்கான நிகழ்வுகளும், பிற செய்திகளும் கூறுவது ஏவலர்களின் பணியாகும். உடல் உழைப்பால் செய்யும் தொழிலும், உயர்ந்த குடிகளைக காக்கின்ற செயலும் என எல்லாமும் ஏவலர்களின் பணியாகும். இதனை,

''காமநிலை உரைத்தலும், தேர்நிலை உரைத்தலும்
அன்பு தலைப் பிரிந்த கிளவி தோன்றின்
சிறைப்புறம் குறித்தன்று என்மனார் புலவர்''[66]

என, தலைவியைப் பிரியும் நிலையில் காமநிலையைத் தலைவனுக்கு உரைப்பர். தலைவனின் தேர்நிலையை உரைப்பதும் உண்டு. தலைவனுடன் பழகியதால் அவனின் மனக்குறிப்பை அறிந்து கூறுவது முண்டு.

கிழவோன் நெடுந்தூரப் பயணம் மேற்கொண்டதற்காக அப்பொழுது நிகழும் பிரிவினை உரைத்தலும், அவ்வாறு செல்லாமல் தடுப்பதற்கான கூற்றுகளும் பிற கூற்றுகளும் பார்ப்பார் இடத்துத் தோன்றும். வாயில்கள் எல்லோரும் தலைவன், தலைவியிடம் பேசும் பொழுது அவர்கள் விரும்பும் மகிழ்ச்சிப் பொருளையே பேசுவர் என்பர். அன்பு இல்லாத சொற்களை தலைவன் பேசினால் அவன் முன்னிலைப் புறமாக பேசுவர் என்பர். இதனை,

''மொழி எதிர் மொழிதல் பாங்கற்கு உரித்தே''[67]

தலைவனை எதிர்த்துப் பேசும் உரிமை பாங்கனுக்கு உணடு.

**வாயிலான விருந்தினர்**

அக இலக்கியத்தில் தலைவன்-தலைவி ஊடல் தீர்க்கும் வாயிலாக விருந்தினர் இடம் பெறுவது தொல்காப்பியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதனை,

> "தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
> பாணன் பாட்டி இளையர் விருந்தினர்
> கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்
> யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப"[68]

என, இல்லற வாழ்வின் இணைப்புப்பாலமாக விருந்தினர் அமைந்துள்ளனர். மருதநிலத் தலைவியின் ஊடல் தீர்க்கும் வாயிலாக விருந்தினர் வருகை நிகழ்ந்தமையை நற்றிணைப் பாடல் வழி காணலாம். இதனை,

> "தடமருப்பு எருமை மடநடைக் குழவி
> ..................................................................
> அட்டிலோளேளு அம்ம அரிவை
> எமக்கே வருகதில் விருந்தே! சிவப்பு ஆன்று,
> சிறியமுள் எபிறு தோன்ற
> முறுவல் கொண்ட முகம்காண்கும்மே."[69]

என, உணவு தயாரிக்கும் தலைவியின் கண்கள் புகையுண்டு சோர்வோடு விளங்கின. அழகுடைய நெற்றியில் வியர்வைத்துளிகள் அரும்பின. இவ்வாறு சமைக்கும் தலைவி தலைவனோடு ஊடல் கொண்டுள்ளாள். ஆதலால், பரத்தமைக் கொண்ட தலைவன் தனது ஊடல் தீர்க்கும் வாயிலாக விருந்தினர் வருகையை வேண்டுகிறான். தலைவன் மேல் ஊடல் இருக்கும்

சமயத்தில் கூட விருந்தினர்களை உபசரிக்கத் தயங்கமாட்டாள் தலைவி என்பதே அகஇலக்கியங்கள் காட்டும் உண்மையாகும். இதனை,

‘‘...........................குன்றூர் அன்ன என்
நல்மனை நனிவிருந்து அயரும்
கைதூ வின்மையின் எய்தாமாறே’’[70]

என, விருந்தினரிடம் முழுமையாக கவனம் செலுத்துவதால் தலைவனிடம் ஊடல் நீங்காது இருக்கும் தலைவி குறித்து அகஇலக்கியம் குறிப்பிட்டுள்ளது.

**விருந்தோம்பலின் தனித்துவம்**

‘‘தலைவனின் பரத்தமை ஒழுக்கம் கண்டு வாடிய தலைவி விருந்தின் வழி ஊடல் தீர முயலும் தலைவனிடம் ஊடல் நீங்காது இருக்கக் காரணம் அவள் கவனம் முழுவதும் விருந்தினர் பக்கம் இருப்பதால்’’ என்று நற்றிணை பதிவு செய்துள்ளது. இதன்மூலம் நாம் அறிவது அகவாழ்வில் விருந்தோம்பலின் தனித்துவமே ஆகும்.

ஊடல் பற்றியும், கணவன் பொருள் தேடவோ அல்லது உயர்கல்வி படிப்பதற்கோ அல்லது அரசு காரியமாகவோ மனைவியிடமிருந்து பிரிந்தால் அப்பிரிவு பற்றியும், பிரிந்திருக்கும் காலத்தில் மனைவியின் பொறுமைக் காத்து பற்றியும் பேசப்படுகின்றது.

புணர்ச்சியைப் பற்றிய செய்தி ‘‘கற்பியலில்; நினைவுக் கூறுதலாகக் கூறப்படுமேயன்றி, நிகழும் செயலாக அவைச் சித்திரிக்கப்படவில்லை. அதாவது, திருமணத்துக்கு கற்புக்கு அடிப்படையான, தலைவன்-தலைவிக்கிடையே நிகழும் புணர்ச்சி திருமணத்துக்கு (கற்பு) முந்திய

ஒழுக்கமாகிய ‘களவிலேயே’ கூறப்பட்டுவிடுகிறது என்பது இதன் பொருள். இதனை,

“மெய்தொட்டுப் பயிறல் பொய் பாராட்டல்
இடம்பெற்றுத் தழாஅல் இடையூறு கிளத்தல்
நீடுநினைந்திரங்கல் கூடுதலுறுதல்”[71]

என்று கூறுகிறார் தொல்காப்பியர். இதற்குச் சான்றாகக் குறுந்தொகைப் பாடலை எடுத்துக் காட்டுகிறார் நச்சினார்க்கினியர். இதனை,

“ஒடுங்கீரோதி ஒண்ணுதற் குறுமகள்
நறுந்தண் ணீர ளாரணங் கினளே
இனையள் என்றவள் புனையளவு அறியேன்
சிலமெல் லியவே கிளவி
அணைமெல் லியள்யான் முயங்குங் காலே”[72]

எனும், இப்பாடல் புணர்ந்து நீங்கும் தலைவன் தன் நெஞ்சுக்குச் சொல்லியது. தலைவியைத் தழுவும் போது, கூந்தலாலும், நெற்றியாலும், மெய்யெங்கும் பரவியுள்ள இனிமையாலும் கண்ணிற்கும், நல்ல நறுமணத்தால் மூக்கிற்கும், தண்ணிய நீரின் தன்மையால் வாய்க்கும் மெல்லிய சொற்கள் பேசுதலால் செவிக்கும், மெல்லிய இயல்பால் உடம்பிற்கும் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் ஐம்புலன் இன்பங்களையும் ஒருங்கே தந்தாள். அவளைத் தழுவத் தழுவ, மேலும், தழுவ வேண்டுமென்ற வேட்கை உண்டாகின்றது.

தமிழில், ‘அணங்கு’ என்ற சொல், ‘பேயை’யும், ‘பெண்ணையும்’ குறிக்கின்றது என்பது சிந்தித்தற்குரியது. ஆகவே, பெண்ணைக் கண்டு அஞ்சும் ஆண், அவளுக்குக் ‘கற்பு’ என்ற பொன் விலங்கைப்

பூட்டியிருக்கிறான் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. அவளை ‘பத்தினி’ ஆக்கி அடக்குவதாகும். அநியாயத்தைப் பொறுக்கமுடியாத சீற்றத்தில், மதுரையை எரித்த கண்ணகி, தன் நாட்டு எல்லைப்புறத்துக்கு வந்து சொர்க்கம் எய்தினாள் என்று கேட்டு, அவள் சீற்றம் இன்னும் எஞ்சியிருக்குமோ என்று அஞ்சி, அவளை பத்தினிக் கடவுளாக்கிய அவள் சினத்தைத் தணிக்க முயல்கிறான் சேரன் செங்குட்டுவன்.

பெண்களுடைய ‘கற்புப்’ பற்றிய விவாதத்தை முதலில் தொடங்கி வைத்தவன், சேரன் செங்குட்டுவன். சாத்தனாரிடமிருந்து கண்ணகி வரலாற்றைக் கேட்டபின், தன் கணவன் உயிர் நீத்தவுடன் அவனைத் தொடர்ந்து உயிர்நீத்த பாண்டிய மாதேவி, கோவலன் கொல்லப்பட்டவுடன் அவனைத் தொடராமல், வழக்காடி வென்ற பிறகு அவனோடு சொர்க்கம் புகுந்த கண்ணகி ஆகிய இருவர்களில் யார் சிறந்தவர் என்று தன் மனைவியை வினவி, இக்காலப் பட்டிமன்ற வீரர்களுக்கு முன்னோடியாக விளங்குகிறான்.

‘அறக்கற்பு’, ‘மறக்கற்பு’ போன்ற சொற்களை வீசிச் சொற்சிலம்பம் ஆடி வருகின்றனர். திருமணத்துக்கு முன் தலைவனும் தலைவியும் உள்ளப் புணர்ச்சியாகிய இயற்கைப் புணர்ச்சிப் பழகினார்களே தவிர (Platonic Love) புணர்ச்சிக் கொண்டிருக்க இயலாது என்று தமிழ்ப் பெண்களுடைய கற்புப் பற்றி கூறுகிறார்கள். இதனை,

> “பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
> ஐயர் யாத்தனர் கரணம் என்ப”[73]

என்கிறார் தொல்காப்பியர்.

களவொழுக்கத்தில், பொய்யும், குற்றமும் ஏற்படத் தொடங்கிய பிறகு, குடும்ப மூத்தவர்கள் திருமணச் சடங்குக்குத்தான் முன்னுரிமை தந்தார்கள் என்பது இதன் கருத்து. ‘பொய்’, ‘வழு’ என்று குறிப்பிடப்படுபவை யாவை? ‘பொய்யாவது செய்த ஒன்றனைச் செய்திலேன் என்றல்; வழுவாவது சொல்லுதலே அன்றி ஒழுக்கத்து இழுக்கி ஒழுகல்’ என்று உரை எழுதுகிறார் நச்சினார்க்கினியர்.

திருமணச் சடங்குக்குச் சான்றாக, அகநானூற்றுப் பாடலொன்றை எடுத்துக் காட்டுகிறாரே யன்றி, ‘பொய்’, ‘வழு’ ஆகியவற்றுக்கு அவர் எடுத்துக்காட்டு ஏதும் தரவில்லை. காரணம், அத்தகையப் பாடல்கள் இருந்திருந்தாலும், தொகைநூல்களில் இடம் பெறாமல் தணிக்கைச் செய்யப் பட்டிருக்கக்கூடும். அல்லது, உரையாசிரியராலே இதற்கு உதாரணம் காட்ட விரும்பாமலும் இருந்திருக்கலாம்.

திருமணச் சடங்குக்கு நச்சினார்க்கினியர் மேற்கோளாகக் காட்டியிருக்கும் அகச்செய்யுள், வாயில் மறுத்த தோழிக்குத் தலைவன் கூறுவதாக மருதத்திணையில் வருகின்றது.

பரத்தையரிடமிருந்து வருகின்ற தலைவனை வீட்டுக்குள் அனுமதிக்கத் தோழி மறுப்பதுதுதான் ‘வாயில்’ மறுத்தலாகும், தலைவி ஊடலைச் சொல்வதுதான் மருதத்திணை. வாயில் மறுக்கப்பட்ட தலைவன், தனக்கும் தலைவிக்கும் நடந்த திருமணச் சடங்கை நினைவு கூர்ந்து தோழியிடம் சொல்லுகிறான். ஆகவே, இதுவும் திருமணச் சடங்கை விளக்குவதற்காக அமைந்த பாடல் என்றும் கூறமுடியாது. ‘களவொ’ழுக்கத்துக்குப் பிறகு, தலைவனும் தலைவியும் பெற்றோர்கள் சம்மதத்துடன் ஒன்று கூடி வாழும்

தோழமையைத்தான் ‘கற்பு’ என்று கருதினார்களோ என்று நினைக்க இடமிருக்கிறது.

**கற்பு நெறி**

தமிழ்ச்சமுதாயத்தில் வரையறுக்கப்பெற்றுள்ள, அகஇலக்கண மரபுகள் என்பன தனித்தன்மை வாய்ந்தன. தமிழர்கள் தங்களுக்கு அமைத்துக்கொண்ட இல்வாழ்க்கை முறையின் செறிவுகள் அகஇலக்கண மரபுகளாக உறுதிப்படுத்தப்பெற்றன. தமிழ் இலக்கண நூல்களில் அகத்திணை பற்றிய பொதுவான செய்திகள் தரப்பெற்று அதன் பின்னர் களவு, கற்பு என்று இரண்டு வாழ்க்கை முறைகள் அமைத்துக் கொள்ளப்பெற்றுள்ளன.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை போன்ற திணைப் பகுப்புகள் ஆகும். இவற்றிக்கென தனித்த இடம், பொருள், ஒழுக்கம் உண்டு.அவை, காலந்தோறும் மாற்றமடையாமல் ஏற்கப்பட்டு வருகின்றன. தற்போது இவ்வொழுக்க நடைமுறை தளர்ந்து அனைத்து நிலமும் ஒன்று கலந்து நின்றாலும் படிக்கவும் பண்பாட்டை அறிந்து கொள்ளவும் இவை அடையாளங்களாக நிற்கின்றன.

இந்நிலையில் கைகோள் எனப்படும் இரு வாழ்க்கை நிலைகளை அகஇலக்கண நூல்கள் காட்டுகின்றன. கைக்கொள்ளப் பெறும் வாழ்க்கை முறை கைகோள் ஆகின்றது, காதல் சார்ந்த வாழ்க்கை முறை களவு எனவும், திருமணம் முடிந்து இல்லறத்தை நல்லறமாக வாழும் கணவன் மனைவி வாழ்க்கை முறை கற்பு எனவும் கொள்ளப்பெறுகின்றது.

அகத்திணையின் பொதுநிலையில் சுட்டப்பெற்ற குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை போன்றன களவு

வாழ்க்கை சார்ந்தனவா அல்லது கற்பு வாழ்க்கை சார்ந்தனவா அல்லது இரண்டிற்கும் பொதுவானவையா என்ற நிலையில் பார்த்தால் சில புரிதல்கள் கிடைக்கும்.

குறிஞ்சியில் நடைபெறும் புணர்தல் என்ற ஒன்று களவிலும், கற்பிலும் நிகழ வாய்ப்புண்டு. முல்லையின் ஒழுக்கமான பிரிந்து சென்ற தலைவன் வரும் வரை ஆற்றியிருத்தல் என்பது இரு கைகோளிலும் நிகழ வாய்ப்புண்டு. இருந்தாலும் கற்பு என்ற கைகோளில் அதற்கு பெருத்த வாய்ப்பு உண்டு. மருதத்திற்கு உரிய ஊடல் என்பதும், நெய்தலுக்குரிய இரங்கல் என்பதும் தலைவன் தலைவிக்கு உரிமையான பின்னர் மட்டுமே அதாவது திருமணம் ஆன பின்னரே நிகழத்தக்கன என்பது குறிக்கத்தக்கது.

ஒருதலைவி, தலைவன் மீது ஊடல் கொள்ளுதல் என்பது இலக்கணங்களைப் பொறுத்த வரையில் பரத்தை மாட்டுத் தலைவன் சென்றுவந்தமை அறிந்து தலைவி ஊடல்கொள்ளுதல் என்பதாகவே கொள்ளப்பெற்றுள்ளது. தலைவன் கடலில் மீன் பிடிக்க சென்ற காலத்தில் தலைவி, அவனுக்காக இரங்கி, அவன் வரவிற்காக, வெளிப்பட இரங்கி நிற்பது என்பது கற்பு காலத்தில் மட்டுமே நிகழத்தக்க வாய்ப்புள்ளது.

பாலையில் தலைவியைத் தலைவன் களவு காலத்தில் பிரிகின்ற பிரிவிற்கு ஓரளவிற்கு வாய்ப்பு உண்டு. அதே நேரத்தில் தலைவனும், தலைவியும் உடன்போக்கு செல்லும் நிலையில் அது கற்பு சார்ந்ததாகி விடுகிறது. தலைவனும் தலைவியும் கணவன் மனைவி ஆன பின்பு இல்லற காலத்தில் ஏற்படும் பிரிவே பெரும்பாலும் ஏற்கத்தக்கதாக உள்ளது. கைக்கிளை என்பது ஒரு தலைக்காமம் சார்ந்தது. கைக்கிளையை இலக்கண நூல்கள் களவின் ஆரம்ப நிலை என்று கொள்கின்றன. இதன் காரணமாக கைக்கிளை என்பதை களவு சார்ந்தமைவது என்று கொள்ளலாம்.

பெருந்திணை என்பது பொருந்தாக்காமம், வயது பொருத்தமில்லாத நிலையில் அமைவது என்பதால் இதுவும் களவின் பாற்பட்டது. இவ்வளவில் களவுக்கும், கற்பிற்கும் பொதுநிலையில் காட்டப்படும் குறிஞ்சி முதலான திணைகளில் பெரும்பாலானவை கற்புவாழ்க்கை சார்ந்த நிலைப்பட்டனவாகவே அமைந்திருக்கின்றன என்ற முடிவினுக்கு வரமுடிகின்றது. அதாவது முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகியன கற்பு என்ற கைகோள் வழிச் சார்புடையன என்பது அறியத்தக்கது. எனவே, கற்பு வாழ்க்கை என்பது மகிழ்தல், ஆற்றியிருந்தல், ஊடல், இரங்கல், பிரிவு என்ற பிரிவுகளை உள்ளடக்கியது என்று கொள்வதில் மாறுபாடு தோன்றப் போவதில்லை.

இதனையே நம்பியகப்பொருள்,

‘‘பொற்புஅமை சிறப்பின் கற்பு எனப்படுவது,
மகிழ்வும், ஊடலும், ஊடல் உணர்தலும்,
பிரிவும், பிறவும் மருவியது ஆகும்’’[74]

(நம்பியகப்பொருள். நூற்பா.எண். 200)

என்று வகைப்படுத்திக் காட்டுகின்றது. இவ்வகைப்படுத்தல்களில் குறிஞ்சி, முல்லை, மருதம் போன்ற நிலங்களின் உரிப்பொருள் அமைந்திருப்பதை காட்டுகின்றது.

**இலக்கண நெறி**

குறிஞ்சி-மகிழ்வு (புணர்ச்சி), மருதம்-ஊடல், பாலை-பிரிவு பிற (முல்லை, நெய்தல்) இருத்தல், இரங்கல் என்ற நிலையில் ஐந்து திணைகளையும் கற்பியல் சார்ந்தன என்று கொள்வது தகுந்ததாகின்றது. இந்நூற்பாவை இலக்கணவிளக்கம் அப்படியே வழி மொழிகின்றது. மிகச் சிறிதாய் வேறுபடுத்தி அமைக்கிறது முத்துவீரியம், இதனை,

"பொற்பமை சிறப்பின் கற்பெனப்படுவ
மகிழ்வும், ஊடலும், ஊடல் உணர்தலும்
பிரிவும் பிறவும் மருவியதாகும்"[75]

என, இதன் காரணமாக கற்பு என்பது ஒரு வாழ்க்கை முறை என்பதாக இலக்கண நூல்கள் கொண்டுள்ளன என்ற முடிவிற்கு வரமுடிகின்றது. தலைவனும் தலைவியும், கணவனும் மனைவியுமாக ஆகிறார்கள், தங்கள் இன்பவாழ்வில் (புணர்வில் மகிழ்கின்றனர். இவ்வின்பம் தவிர்த்து மற்றவள் இன்பம் கருதித் தலைவன் பிரிவதால் இவர்களுக்குள் ஊடல் வருகிறது. இந்த ஊடலை உணர்த்த, தோழியின் உதவி தேவைப்படுகிறது என்பது இலக்கண நெறியாகும்.

சுற்பு நிலையில் ஒருவனுக்கு ஒருத்தி என்று வாழும் வாழ்வில் மாற்றாளாகிய பரத்தையை நாடித் தலைவன் செல்லும் நிலையில் ஊடல் தோன்றுகிறது. இந்த இடத்தில்தான் கற்பு பெண் வயப்பட்டதாக மட்டும் உரு மாறுகின்றது. தலைவன் இன்னொருத்தியை நாடிச் சென்றாலும் தலைவி ஏற்கிறாள். ஆனால், தலைவி இன்னொருவனை நாடிச் செல்வதில்லை. தலைவனுக்குத் தரப்படும் புணர்வு விடுதலை தலைவிக்கு இல்லை, ஏன் இல்லை என்ற கேள்விக்கு அடிப்படை உண்டு.

தமிழ்ச்சமுதாயத்தில் பெண்களின் உடல் இயற்கை கருதி சில நாள்கள் தலைவனின் மகிழ்விற்கு உரியவளாக அமையாத நிலையில் தலைவன் வெளியேறுகிறான். அவனின் உடல் தேவையை நிறைவேற்ற முடியாத தன் உடல் இயற்கையை எண்ணி அமைதி காக்க வேண்டிய நிலைக்கு அன்றைய தமிழ் உலகம் அவளைக் கட்டுப்படுத்தியுள்ளது.

தலைவனின் நாள்தோறுமான வேட்கைக்கு மற்றொரு பெண் இடம் தருவது என்பது அவளின் பொருள் தேவை கருதியதாகி விடுகின்றது.

இந்நிலையில் தலைவன் அனைத்துப் பொருளையும் அவளிடத்தில் இழந்துவிடாது இருக்கத் தலைவி ஊடல் கொள்கிறாள், ஊடலைக் கைவிட மறுக்கிறாள்.

பின்னர் ஏதோ ஒரு வகையில் தன் கணவனைத் தன்னுடன் இருத்திக்கொள்ளும் முயற்சிகளில் ஈடுபடுகிறாள். இந்நிலையில் தான் கற்பு வாழ்க்கை என்பது தலைவிக்கு நெறி பிறழாத் தன்மையை அளித்துவிடுகிறது. தலைவனுக்கு அதில் இருந்து விலக்கு அளித்துவிடுகிறது.

இதனை,

"கற்பெனப்படுவது கற்பினை வழுவாது
தற்கொண்டானையும் தன்னையும் பேணி
இல்லறத்து ஒழுகும் இல்லறக் கிழத்தி
நல்லறத்தவர் மதிநன்மாண்பதனோடு
மகிழ்ச்சியும் ஊடலும் ஊடல் உணர்தலும்
மகிழ்ச்சியில் பிரிவுடன் பிறவும் இயன்ற
மகிழ்ச்சியின் எய்தி இல் பொருந்துவதாகும்"[76]

என்று மாறனகப்பொருள் கற்பிற்கு இலக்கணம் வகுக்கிறது.

இந்நூற்பாவைக் கூர்ந்து நோக்கினால் இது தலைவியை முன்னிலைப்படுத்திச் சொல்லியது என்பது தெரியவரும். இருவருக்கும் பொதுவான கற்பு வாழ்க்கை முறை, தலைவிக்கு மட்டுமே உரியதாக மாறிய மாற்றத்தின் அடையாளம் இந்நூற்பாவாகும். கற்பினை வழுவாது, தற்கொண்டானையும் தன்னையும் பேணி இல்லறத்து ஒழுகும் இல்லறக்கிழத்தி என்ற நிலையில் இந்நூற்பா கற்புநெறி என்பதைப் பெண்ணுக்கு மட்டும் ஆக்கி நிற்கிறது.

**பரத்தை வாயில்**

பரத்தமை காரணமாகத் தத்தம் தலைவிக்கு ஏற்பட்ட ஊடலைத்தீர்க்க வாயிலை விடுக்கும் உரிமை நான்குவகை வருணத்தார்க்கும் உரியது ஆகும். பரத்தமை காரணமாக ஏற்பட்ட ஊடலைத் தீர்க்கப்பயன்படும் வாயில் என்ற பெயரால் சுட்டப்படுகின்றது. திருமணச் சடங்கை வேதநெறிக்குள் பார்க்கிறார் நச்சினார்க்கினியர்.

''நிகழுங்கால் இவளை இன்னவாறு பாதுகாப்பாயெனவும், இவனுக்கு நீ குற்றேவல் செய்து ஒழுகுவாயாக எனவும், அங்கியங்கடவுள் அறிகரியாக (அக்னிச் சாட்சியாக) மந்திரவகையாள் கற்பிக்கப்படுதலின் அத்தொழிலைக் 'கற்பு' என்றார் என்பது நச்சினார்க்கினியரின் வாக்கு. வேதநெறியைப் பற்றியோ அல்லது அக்னிக் கடவுள் சாட்சியாக இருப்பது பற்றியோ தொல்காப்பியர் எதுவும் கூறவில்லை.

**தோழி வாயில் மறுத்தபோது**

அந்நாள், தீய கோள்கள் நீங்கப்பெற்ற வளைந்த வெண்மையான திங்களைத் தீமையற்ற, புகழையுடைய உரோகிணி நட்சத்திரம் வந்து கூடும் நன்னாள். அதுவே எங்கள் திருமண நாள். உழுத்தம் பருப்புடன் கூட்டிச் சமைத்த குழைவாக வெந்த பொங்கலோடு பெரும் சோற்றுத் திரளை உண்பது இடைவிடாமல் நடந்து கொண்டிருந்தது. வரிசையாகக் கால்களை நட்டுக் குளிர்ந்த பெரிய பந்தலை அமைத்தனர். அப்பந்தலில், கொண்டு வந்த மணலைப் பரப்பினர்.

மனையின்கண் விளக்கினை ஏற்றி மாலைகளைத் தொங்கவிட்டனர். பொழுது புலர்ந்ததும், முதியமகளிர், தலையில் நீர்க்குடத்தினைச் சுமந்தவராய்க் கைகளில் புதிய மண்டை எனும் கலத்தினை ஏந்தியவராய்

ஒருங்கு கூடினர். முன்னே தருவனவற்றையும் பின்னே தருவனவற்றையும் முறை முறையாகக் எடுத்துத் தந்த வண்ணமிருந்தனர்.

தேமல் படர்ந்த அழகிய வயிற்றினையுடைய தூய அணிகலன்களை அணிந்த மகனைப் பெற்றெடுத்த மகளிர் நால்வர், 'தோழமையினின்றும் வழுவாது நீங்கள் இருவரும் ஒருவரையொருவர் பேணுவதில் பெரும் விருப்பத்துடன் இருப்பீர்களாக' என்று வாழ்த்தி, மலருடன் கூடிய நெல்லை அவளுக்குரிய கூந்தலின் மீது தூவினர். சுற்றத்தினர் கல்லென்ற ஒலியினராய் விரைந்து வந்து, 'பெருமனைக் கிழத்தி ஆவாய்' என்று வாழ்த்தினார்.

அவளோ அச்சத்துடன் பெருமூச்சு விட்டாள். அவளை மகிச்சியுடன், இருக்கையில் அமர்த்தி, உன் நெஞ்சத்து நினைத்ததை மறையாது உரைப்பாயாக என்றேன். மானின் மடப்பத்தினையும், செருக்கிய பார்வையையும் கொண்ட கண்களையும், குளிர்ந்த கூந்தலையும் உடையாமை நிறமுடைய என் தலைவி, உள்ளம் நிறைந்த உவகையளாகி, முகம் தாழ்த்தி என்னை வணங்கினாள்.

தோழி வாயில் மறுத்தபோது, தலைவன் அவளிடத்து இவ்வாறு கூறியதாகப் பாட்டில் ஒரு குறிப்பும் இல்லை. அவன் இதனை, தலைவியிடத்தும் கூறியிருக்கக்கூடும். இல்லறக் காட்சி என்பதாலும், நெல், உழுத்தம் பருப்பு முதலியவற்றால் மருதத்திணையாகி, அந்நிலத்து ஒழுக்கமாகிய ஊடலுக்கேற்ப, வாயில் மறுக்கப்பட்ட நிலையில் தலைவன் கூறுகின்றான் என்ற நாடகக் காட்சி, தொகுத்தவர்களின் கற்பனையாகக் கூட இருக்கலாம்.

**பிரிவு தரும் துன்பம்**

இல்லறத்தார்க்கு உரிய கடமைகளில் தவறாது வாழ்ந்து வரும்பொழுது, தலைவன் தன் மனைவியை விட்டுப் பிரிந்து வாழும்

நிலைமையும் சிற்சில சமயங்களில் நிகழ்கின்றது. ஓதல், நாடுகாவல், பொருள் ஈட்டல், முதலியவற்றில் ஏதாவது ஒன்றிற்காகத் தலைவன் தலைவியைப் பிரிந்து செல்லுவான். அப்பொழுது, தலைவனைப் பிரிந்து தனித்து இருக்கும் தலைவி, பிரிவைப் பொறுத்துக் கொள்ள முடியாமல், மிகவும் துன்பப்படுவாள்.

பிரிவு பற்றியே அகஇலக்கியங்களில் மிகுதியான பாடல்கள் உள்ளன. திருக்குறளிலும் கற்பு இயலில், முதலில் 'பிரிவு' பற்றிய செய்திகளே இடம்பெற்றுள்ளன. தலைவன், தலைவியை விட்டுப் பிரிந்து செல்வது கற்பு நெறி வாழ்க்கையில் தவிர்க்க முடியாத ஒன்று. இருப்பினும் தலைவியால் அந்தத் துன்பத்தைப் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. அவன் இல்லாத இடத்தில் இருப்பது மிகவும் துன்பம் தரக்கூடியது என்று கருதுகிறாள். களவுநெறியில் வாழ்ந்த காலத்தில் பெற்றோரிடம் வாழ்ந்தாள். தோழியும் உடன் இருப்பாள்.

மேலும், களவுநெறியில் ஏற்படும் பிரிவும் குறுகிய கால இடைவெளியே உடையது. எனவே, அந்தப் பிரிவை அவளால் பொறுத்துக் கொள்ளமுடிந்தது. ஆனால், இப்பொழுது தலைவனோடு தனியாக வாழ்கிறாள் . அவனைப் பிரியும் பொழுது, தனிமை அவளை மிகவும் துன்புறுத்துகிறது. இதனை, அவள் வெளிப்படுத்துகிறாள். இதனை,

''இன்னாது இனன்இல் ஊர் வாழ்தல், அதனினும்
இன்னாது இனியார்ப் பிரிவு''[77]

என, தன்னைச் சார்ந்த -தன்னோடு உறவு கொண்டோர் இல்லாத ஊரில் வாழ்வது துன்பமானது, தனது உயிரினும் மேலாகக் கருதி வாழும் தலைவனைப் பிரிந்து தனிமையாக இருப்பதாகும். மேலும், துன்பம் தரக்கூடியது என நினைக்கிறாள் தலைவி.

உறவினர்களும் தோழியும் இல்லாத தனிமையில், துணையாய் நின்றவன் தலைவன். இப்பொழுது அவனும் அவளை விட்டுப் பிரிந்து செல்கிறான். அவளால் அந்தப் பிரிவைப் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. எனவே, தனக்கு மிகவும் இனியவராய் இருக்கின்ற தலைவனின் பிரிவு எல்லாவற்றையும் விடவும் மிகவும் இன்னாதது என்று உணருகிறாள்.

**இரவு தரும் துன்பம்**

தலைவனைப் பிரிந்து வாழும் பொழுது தனிமை மிகவும் துன்பம் தரும். மேலும், பொழுதைக் கழிப்பது மிகவும் சிரமமாக அமையும். தலைவனோடு இனிமையாக வாழ்ந்த இரவு நேரம் பிரிவின் பொழுது மிகவும் துன்பமாகத் தோன்றும். இந்த அனுபவத்தை வெளிப்படுத்துகிறாள் தலைவி. இதனை,

“கொடியார் கொடுமையின் தாம் கொடிய-இந் நாள்
நெடிய கழியும் இரா”[78]

என, கொடியவர்களைப் பற்றி நினைப்பதே துன்பமானது. ஆனால், அவர்கள் செய்யும் கொடுமையோ, மிகவும் துன்பம் தரக் கூடியது. அதனால் நம் உடலும் உயிரும் கூட, பாதிப்பை அடையும். அதனை விடவும் கொடுமையானது, தலைவனைப் பிரிந்து தனிமையாக இருக்கும் இரவு நேரம் என்கிறாள் தலைவி.

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு இரவில்தான் தலைவனின் நினைவு அதிகம் வரும். அது துன்பமானது. அந்தத் துன்பமும் நெடுநேரமாக இருக்கிறது. தலைவன் இல்லாத தனிமையில் இரவு கொஞ்சம் கொஞ்சமாக நகர்வது போன்ற ஓர் உணர்வு தலைவிக்கு வருகிறது. அந்தத் துன்ப உணர்வை வெளிப்படுத்தும் பொழுது, ‘நெடிய கழியும் இரா’ என்று இரவின்

மீது பழிபோடுகிறாள் தலைவி. ஏன் இந்த இரவு நீண்ட நெடுந்நேரம் இருந்து என்னை வதைக்கிறது என்று வினவுகிறாள் தலைவி, பிரிவுக்கால இரவின் துன்பத்தில் தலைவியின் மனநிலையைப் பற்றிய அக மரபைச் சார்ந்த பாடல்கள் பல உள்ளன.

பிரிவினால் தலைவிக்கு உள்ளம் பாதிக்கப்பட்டதுபோல் உடலும் பாதிக்கப்பட்டாள். எப்பொழுதும் தலைவனை நினைத்துத் தூங்காமல் கண் விழித்து இருந்தமையாலும், அழுதமையாலும் இப்பொழுது அவளது கண்கள் ஒளி இழந்து காணப்படுகின்றன. மணம் பரப்பும் மலர்களை விடவும் முன்பு அழகாகக் காட்சியளித்தவை இந்தக் கண்கள். எனவே, தாமே அழகு பொருந்தியவை என்று இறுமாந்திருந்த மலர்கள், இவளது கண்களைப் பார்த்ததும், நாணம் கொண்டன. இப்பொழுது ஒளியிழந்து காட்சியளிக்கும், இவளது கண்கள்தாம், நாணம் அடைகின்றன. இதனை,

> “சிறுமை நமக்கு ஒழியச் சேண் சென்றார் உள்ளி,
> நறு மலர் நாணின கண்”[79]

இந்தப் பிரிவுத் துன்பத்தை எனக்குக் கொடுத்துவிட்டு, தொலை தூரத்திற்குச் சென்றான் தலைவன். அவனை நினைத்து நினைத்து வருந்திய கண்கள், நறுமணம் பொருத்திய மலர்கள் முன்னால் செல்வதற்குக் கூட நாணுகின்றன. இதற்குக் காரணம் என்ன? அவை எப்பொழுதும் தலைவனை நினைந்து அழுதமையாலும், இரவில் கூட தூங்காமல் கண் விழித்து இருந்தமையாலும் ஒளி இழந்து விட்டன. எனவே, முன்பு ஒருகாலத்தில் இவள் கண்களின் அழகைக்கண்டு மலர்கள் நாணின. இன்று மலர்களைக் கண்டு இவள் கண்கள் நாணுகின்றன.

எந்த அளவுக்குத் தலைவனின் பிரிவால் அவளது உடல் உறுப்புகள் பாதிப்பு அடைந்தன என்பதனை மிகச் சிறப்பாக வெளிப்படுத்துகிறார் வள்ளுவர். பிரிவுக் காலத்தில், உடல் மெலிதல், உடலில் பசலை படருதல் போன்றவற்றை அக இலக்கியங்கள் பல எடுத்துக்காட்டுகின்றன.

**விரல் தேயுதல்**

தலைவன் பிரிவால்- அவன் நினைவால் கண்கள் மட்டுமா ஒளியிழந்தன? விரல் கூட, தேய்ந்து விட்டது. விரல் எப்படித் தேயும்? காதலன் எப்பொழுது வருவான், அவனைக் கண்டு எப்பொழுது மகிழலாம் என்று துடித்துக் கொண்டிருக்கிறாள் தலைவி, அவன் தன்னோடு இல்லாத சூழலில், ஒவ்வொரு நாளும் ஒரு யுகமாகக் கழிகிறது.

அவன் வருவதற்கு இன்னும் எத்தனை நாட்கள் இருக்கின்றன என்று அவளுக்கு அறிய வேண்டும். தலைவி வாழ்ந்த காலம், ஆண்டுக் குறிப்பேடு வேகம் நடைமுறையில் இல்லாத காலம், விரல்களால், சுவரில் கோடிட்டு நாள் சுணக்கிட்ட காலம், எனவே, தலைவன் எந்த நாள் வருவான் என்பதனைக் கணக்கிட தலைவி சுவரில் கோடிட்டு, அக்கோடுகளை ஒவ்வொரு நாளும் தொட்டுத் தொட்டு எண்ணியதால் அவள் விரல் தேய்ந்து விட்டது. மேலும் தலைவன் வரும் வழியைப் பார்த்துப் பார்த்துக் கண்களும் ஒளியிழந்து விட்டன. இதனை,

> ‘‘வாள் அற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
> நாள் ஒற்றித் தேய்ந்த விரல்’’[80]

என, தலைவனின் பிரிவு தலைவியைப் பெரும் அளவில் பாதித்துள்ளது. எனவே, அவனது வருகையை மிகவும் ஆவலுடன் எதிர்பார்க்கிறாள். அந்த ஆர்வத்தினால், தன் விரல் தேய்வதையும் பொருட்படுத்தாமல் செயல்படுகிறாள்.

**பரத்தை வாயில்**

பரத்தமை காரணமாகத் தத்தம் தலைவியர்களுக்கு ஏற்பட்ட ஊடலைத் தீர்க்க வாயிலைவிடுக்கும் உரிமை நான்கு வகை வருணத்தார்க்கும் உரியது ஆகும். பரத்தமைக் காரணமாக ஏற்பட்ட ஊடலைத் தீர்க்கப்பயன்படும் வாயில் என்ற பெயரால் சுட்டப்படுகின்றது.

**ஊடல் தீர்க்கும் வாயில்கள்**

ஊடல்-ஊடுதல்-கோபம் கொள்ளுதல் களவு வாழ்க்கையில் தலைவியோடு மட்டுமே கூடி, அவளை என்றும் பிரியாமல் இருந்த தலைவன் - கற்பு வாழ்க்கை வாழும் காலத்தே 'பரத்தையர்' முதலான பிறவகைப் பெண்களோடு தொடர்பும் - மறைமுக உறவும் கொள்வான். இது பற்றி அறிய வரும்போது தலைவி கோபம் கொள்வாள். அதுவே 'ஊடல்' எனப்படும். தலைவி, தலைவன் மீது கொள்ளும் பிணக்கு ஊடல் எனப்படும்.

கற்பு வாழ்வின் போது, பரத்தையிற் பிரிவு நிகழ்த்தும் தலைவன் அயல்மனை, அயற்சேரி, புறநகர் என்ற மூன்று இடங்களுக்கும் சென்று தங்கிவிடுவான். அப்போது தலைவிக்கு ஊடல் ஏற்படும். தலைவிக்கு ஏற்படும் ஊடலைத் தீர்த்து மீண்டும் தலைவன், தலைவியின் கற்பு வாழ்வை (இல்லற வாழ்வை இணைத்து வைக்கும் இனிய பணியை ஆற்றுபவர்கள் ஊடல் தீர்க்கும் வாயில்கள் எனப்படுவர். இதனை,

''கொளைவல் பாணன் பாடினி கூத்தர்
இளையர் கண்டோர் இருவகைப் பாங்கர்
பாகன் பாங்கி செவிலி அறிவர்
காமக் கிழத்தி காதற் புதல்வன்
விருந்து ஆற்றாமை என்றுஇவை ஊடல்
மருந்தாயத் தீர்க்கும் வாயில்கள் ஆகும்''[81]

என்ற நம்பியகப்பொருள் நூற்பா (68) ஊடல் தீர்க்கும் வாயில்களைப் பட்டியலிட்டுக் காட்டுகிறது. பாணன், விறலி, கூத்தர், ஏவலர், (தலைவி ஊடியுள்ள நிலையைக்) காண்பவர்கள் (இவர்கள் அக்கம் பக்கத்தில் உள்ளவர்களாக இருப்பர் பாங்கன், பாங்கி, தேர்ப்பாகன், செவிலி, சான்றோர், காமக்கிழத்தி, புதல்வர், விருந்தினர், தலைவியின் ஆற்றாமை (பொறுத்துக் கொள்ள முடியாத தனிமையும் வருத்தமும், ஆகியவை ஊடல் தீர்க்கும் வாயில்களாகக் கூறப்பட்டிருக்கின்றனர்.

தலைவியின் ஊடலைப் போக்கி மீண்டும் கூட நினைப்பது தலைவனது இயல்பு, அதற்கு உறுதுணை புரிவோர் பலர். தலைமக்களின் “ஊடல் தணிக்கும் வாயில்கள்“ எனப்படுகின்றனர். பாணன், பாடினி, கூத்தர், இளையர் (வேலையாட்கள்), மற்றவர்கள், பாங்கன், பாங்கி, செவிலி, மூத்தோர் அல்லது சான்றோர், புதல்வன் முதலியவர்களோடு, விருந்து வருதல், பிரிவைப் பொறுத்திருக்க இயலாமை முதலான காரணங்களும் தலைவியின் ஊடலைப் போக்கவல்ல வாயில்களாகும்.

தலைவன் தலைவிமாட்டு நல்லுறவு அமையத் தூது செல்வோரை வாயில்கள் என்பர். அகவொழுக்கம் உள்ளத்தில் பதிந்து கிடக்கும் ஒழுக்கம். பிறருக்குப் புலப்படுத்த முடியாத புணர்தல் பற்றியது. இது தலைவன்-தலைவி உறவாக அமையின் போற்றப்படும். அதுவும், திருமணத்துக்கு முன் அமையின் தூற்றப்படும். தூற்றுதலை அலர் என்பர். தலைவன்-பரத்தை உறவு பழிக்கப்படும்.

இந்த வாயில்கள் யார் யார் எனத் தொல்காப்பியர் பட்டியலிட்டுக் காட்டுகிறார். இதனை,

1. தோழி
2. தாய்

3. பார்ப்பான்
4. பாங்கன்
5. பாணன்
6. பாடினி
7. இளையர்
8. விருந்தினர்
9. கூத்தர்
10. விறலியர்
11. அறிவர்
12. கண்டோர்

என்னும் 12 மாந்தர்களும் வாயில்கள் ஆவார்கள். இவர்களை வீட்டுக்குள் நுழைய இடம் தரும் வாயிலோடு ஒப்பிடலாம்.

**வாயில்கள்**

தலைவனுடைய இல்வாழ்க்கையில் நிகழும் ஊடல் முதலியவற்றைப் போக்கும் வழிகளாக இருந்து பின்னர்த் துறவுக்கும் உரியவராவார் பன்னிருவர்: 1. அன்பாற் சிறந்த தோழி, 2. அவளே போலும் செவிலி, 3. அவ் விருவரினும் ஆற்றலுடைய பார்ப்பான், 4. அவரே போலும் பாங்கன், 5. தலைவனுக்குத் துணையாக ஒழுகும் பாணன, 6. தலைவிமாட்டுத் துணையாக ஒழுகும் பாடினி, 7. என்றும் பிரியா இளையர், 8. தலைவனும் தலைவியும் அன்பு செய்யும் விருந்தினர், 9. தலைவனுக்கு இன்றியமையாத கூத்தர், 10. தாமே ஆடலும் பாடலும் நிகழ்த்தும் விறலியர், 11. முன்னே துறவுள்ளத்தராகிய அறிவர், 12. அவர்துறவு கண்டு கருணை செய்யும் கண்டோர் என இவர்.

எனவே, இவர்கள் தலைவன் தலைவியொடு நிகழ்த்தும் இல்லறம் கண்டு மகிழ்ந்து, பின் தலைவன தலைவியர் பெற்ற துறவின்கண் மனம் பிணிப்புண்டு, அவர் பிரிவாற்றாமையால், தாம் அவர் துறவிற்கு இடையூறாகாது முன் செல்வர்.

**வாயில்கள் (ஊடலைத் தணிக்கத் துணையாவன)**

1. பாணன், 2. பாடினி, 3. கூத்தர், 4. இளையர், 5. கண்டோர், 6. இருவகைப் பாங்கர், 7. பாகன், 8. பாங்கி, 9, செவிலி, 10. அறிவர், 11, காமக் கிழத்தி, 12. காதற் புதல்வன், 13. விருந்தினர் என்பாரும், 14. ஆற்றாமையும் ஆம்.

**வாயில் பெற்று உய்தல்**

தோழியர் கூட்டத்தில் சென்றியையும் தலைவி அவர்களுள் ஒருத்தியுடன் நெருங்கி அளவளாவும் குறிப்பால், அவளே தலைவிக்கு உற்ற தோழி எனவும், அவளை வாயிலாக்கித் தான் செயற்படலாகும் எனவும் தலைவன் ஆறுதலுறுதல். இது களவியலில் ‘பிரிவுழிக் கலங்கல்’ எனும் கூற்றாகும்.

**வாயில் பெறாது மகன்திறம் நினைதல்**

கற்புக்காலத்தில் பரத்தையிற் பிரிந்து மீண்டு வந்த தலைவன், தலைவியின் நினைவொடு வாயிலின்கண் நின்று, ‘என் மகன் இன்னும் என்பக்கம் வரவில்லையே! வரின், அவனைத் தூக்கிக்கொண்டு மனையகத்துச் சென்றால் தலைவியின் ஊடலைத் தீர்த்து அவளை இன்பம் நுகரலாமே’ என்று, வாயிலைப் பெறாமல் மகனைப் பற்றி நினைவது. இது “பரத்தையிற் பிரிவு எனும் கூற்றாகும்.

**வாயில் மறுத்த தலைவி**

''மகப் பேற்றிற்குரிய காலங் கழிய ஒழுகுகின்றாய்'' என்று நெருக்கிய தோழிக்குத் தலைவி கூறல் ''வெள்ளாங்குருகின் பிள்ளை இறக்க அதனைக் காணச் சென்ற நாரை அசைய நெருங்கிய நெய்தல் கடல்நீரொடு கரையை அடையும் துறைவனுக்கு, நான் களவுக்காலத்திலேயே அவன் பறித்துக் கொடுத்த பைஞ்சாய்க் கோரையால் அமைக்கப்பட்ட பாவையை யான் பெற்ற மகவாகக் கொடுத்துவிட்டேன்'' என்பதனை,

> ''வெள்ளாங்குருகின் பிள்ளை செத்து என
> காணிய சென்ற மட நடை நாரை
> பதைப்ப ததைந்த நெய்தல் குழிய
> ஓதமொடு பெயரும் துறைவற்கு
> பைஞ்சாய் பாவை ஈன்றனென் யானே''[82]

எனத் தலைவன் பண்டையன்பு எட்டிக்காய்ந்து, தலைவி தோழியிடம் கூறுதல். 'காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும்' என்புழித் தலைவி தோழியிடத்துத் தலைவனைக் காய்தற்பொருளதாய் வருவதொரு கூற்றாகும்.

**வாயில் மறுத்தல்**

தூது வந்த பாணன் முதலியவர்க்குத் தலைவி முகங்கொடுக்க மறுத்தலைக் கூறும் அகச்செய்தி.

**வாயில் மறுத்துரைத்தல்**

பரத்தையிற் பிரிந்த தலைவன் மீண்டுவந்து தலைவியை அடைய வாயில்வேண்டத் தலைவி, ''சிறுதேர் உருட்டி விளையாடும் இப்புதல்வனை

எனக்குத்தந்த பின் எம்பெருமான் இன்றே இம்மனைக்கு வரவேண்டும் என்ற நினைப்புக் கொண்டுள்ளார்! அவர் என்னிடம் கொண்டுள்ள அருளுள்ளம் இத்தகையது!'' என்று கூறி வாயில்மறுத்துக் கூறுதல், இது பரத்தையிற் பிரிவு எனும் கூற்றாகும்.

**வாயில் வேண்டத் தோழி**

கற்புக்காலத்தில் பரத்தையிற் பிரிந்து மனை வந்து வாயில் வேண்டிய தலைவனிடம் தோழி, ''முன்பு நீர் வரும் வழியிடை இருந்த இடையூறுகளையும் பொருட்படுத்தாமல் கன்றினை ஈன்ற புற்றாவினை ஒத்து எம்மைக் காணவந்தீர். முன்பு எம்மைக்காண வந்த தேரினை ஊர்ந்து இன்று தெருவழியே பரத்தையர் தெருவினை நோக்கிச் செல்கின்றீர் எம்மிடம் நுமதருள் இத்தன்மைத் தாயிற்று!'' என்று அவனது அன் பின்மை கூறியது.

**வாயிலவர் வாழ்த்தல்**

பரத்தையர் சேரியிலிருந்த தலைவனுக்குத் தலைவி செவ்வணி அணிந்த சேடியொருத்தி வாயிலாகத் தான் பூப்பெய்திய செய்தியைக் குறிப்பாகத் தெரிவிக்கவே, ''தலைவியின் பூப்புச்செவ்வி கெடாமல் செவ்வியறிந்து வந்த தலைவன் உண்மையில் தக்கவனே!'' என்று அவனை வாயிலவ ராகிய பாணர் பாடினி கூத்தர் முதலியோர் வாழ்த்துதல். இதனை உணர்த்த உணரும் ஊடற்கண், தலைவன் வரவு கண்டு உவந்து வாயில்கள் மொழிதல் என்றும் கூறுபர். (.அ.நூ.205)

**வாயிலிற் கூட்டம்**

தலைவனுடைய பொருந்தாச் செயல் காரணமாகத் தலைவிக்கு ஏற்பட்ட ஊடலைப் பாணன் பாடினி முதலிய வாயிலோர் தீர்த்துவைத்த பின் தலைவன் தலைவி இருவரும் கூடும் கூட்டம். அ. 562

கற்புக்காலத்தில் பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் வாயில் பெறாது மகனது திறத்தை நினைந்து, தோழியிடம், ‘‘நாட்டில் விளங்குகின்ற மகளிர் தங்கள் கண்களால் வந்த பயத்தால் உண்டாகிய மயக்கம் தரும் வாட்டத்தை நீக்காத இவ்விரதம் யாதாம்?’’ என வாயில் வேண்டித் தோழிக்குக் கூறியது.

**வாயிற் கிளாவி**

கற்புக்காலத்தில் தலைவன் புறத்தொழுக்கத்தால் தலைவிக்கு ஊடல் நிகழ்ந்தவழி அவ்வூடலைத் தீர்ப்பதற்குத் தலைவனால் வாயிலாக அனுப்பப்பட்டவர்களின் வழியே அவனது விருப்பினைப் கேட்டு அதனை மறுத்து அவனுடைய பழிகளைத் தோழியும், தலைவியும் கூறும் கூற்று வாயிற்கிளவியாகும்.

**வாயிற்கிளவி வெளிப்படக் கிளத்தல்**

பாணர் முதலிய வாயில்கள் தத்தமக்குரிய நெறியானே வாயிலாகக் கூறும் கூற்றுகள் வெளிப்படையாகக் கூறுதற்கு வருத்தமின்றி உரியன. அ.்.தாவது வாயிலோர் கூற்று கேட்போர்க்கு வருத்தம்தரும் இயல்பினவாயினும் குற்றேவல் மரபினர் ஆதலின், குறிப்பாற் கூறுதல் சாலாமையின், வெளிப்படையாகவே கூறுவர். அக்கூற்று வருந்துதற்குரிய தன்று.

**வாரம் பகர்தல்**

தலைவி, தலைவனைப் பரத்தையர்க்கு உரிமையாக வழங்கி விட்டதனைத் தோழியிடம் கூறல். ‘‘யான் தலைவனைப் பரத்தையருக்கு மானியமாக வழங்கிவிட்டேன். அவனுடைய மாலைகளையும் தோள்களையும்

யார் வேண்டினும் வளைத்துக் கொள்வராக.'' என்று தலைவி வருந்திக் கூறுதல். இதனைத் திருக்கோவையார் 'வாரம் பகர்ந்து வாயில் மறுத்து உரைத்தலை' கூறுகின்றது. (357) இது 'பரத்தையிற் பிரிவு எனும் தொகுதிக்கண், 'உணர்த்த உணரும் ஊடல்' என்பதன் கூற்றுகளுள் ஒன்றாகும்.

**வாரம் பகர்ந்து வாயில் மறுத்துரைத்தல்**

பரத்தையிற் பிரிந்த தலைவன் வாயில் வேண்டி நிற்பத் தலைவி தன்னை வாயில் நேருமாறு பலவாறு கூறி வேண்டிய தோழியிடம், ''நான் தலைவனைப் பரத்தையருக்கு மானியமாக வழங்கிவிட்டேன். இனி, அவனைத் திரும்பப் பெறுதல் கூடாது!'' என்று அவள் வேண்டுகோளை மறுத்துக் கூறுதல்.

**வாராமைக்கு அழிதல்**

பெருந்திணைத் தலைவி தன் மனையகத்தே தலைவன் வருவான் என்று காத்திருந்து, அவன் வாராமையால் அது பற்றித் துயருற்றுப் புலம்பல். ''எனது வலக்கண் துடிக்கின்றது, இது தீமைக்கு அறிகுறி. மாலை நேரம் வேறு என்னைக் கொல்கிறது. அவனும் வாராமலிருந்து என்னைக் கொல்லத்தான் நினைத்தானோ?'' என்பது போன்ற கூற்று. இது பெருந்திணையில் பெண்பாற் கூற்றாக வரும் கிளவிகளுள் ஒன்றாகும்.

**வாழ்க்கை நலம் கூறல்**

தலைவி தலைவனோடு இல்லறம் நடத்தும் இல்லத்திற்குச் சென்று மீண்ட செவிலி அவள் நற்றாயிடம், ''நின் மகள் தன் கணவனோடு இல்லறம்

நடத்தும் சிறப்பிற்கு ஒப்புமை கூறின், நீ நின் கணவனொடு கூடி நிகழ்த்தும் இல்லறத்தின் சிறப்பினையன்றி வேறெதனையும் உவமை கூறுதல் இயலா'' என்று தலைவியின் மனையறச் சிறப்பினை எடுத்துக்கூறுதல். இதனை 'இல்வாழ்க்கை' எனும் தொகுதிக்கண் 'செவிலி நற்றாய்க்கு நன்மனை வாழ்க்கைத் தன்மை யுணர்த்தல்' என்றும் கூறுவர்.

**வாழ்க்கையுள் இரக்கம்**

தலைவனும் தலைவியும் நிகழ்த்தும் இல்லற வாழ்க்கைக் கண்ணே தமக்கு வருத்தம் தோன்றிற்றாகத் தோழியும் அறிவரும் கூறுதல்.

''தலைவன் பரத்தையிற் பிரிந்தவழியும், அடிக்கடித் தலைவியைத் தனித்து வருந்த விடுத்துப் பொருள் பகை முதலிய நிமித்தமாகப் பிரிந்தவழியும், தலைவன் தலைவியர் இல்லறம் சிறப்பாக நிகழாமையின் அவர்களது இல்வாழ்க்கை வருத்தம் தருவதாகும்'' என்று அவர்களிடம் உரையாடுதற்கு உரிமையுடைய தோழியும் அறிவரும் கூறுவர்.

உயிரொடு வாழும் வாழ்க்கையின்கண் துன்பமுற்றுக் கூறும் கூற்று தலைமக்கட்கு உரித்தென்பர் நூலோர். அ∴து எப்பொழுது எனின், களவின்கண் கூட்டத்திற்கு இடையூறாக அமையும் இற்செறிப்பு, தலைவன் வருந்தொழிற்கு அருமை, அல்லகுறிப்படுதல் முதலியவற்றாலும், கற்பின்கண் பரத்தையிற்பிரிவு, உணர்த்த உணரா ஊடல் முதலியவற்றாலும் எய்தும் வருத்தம் எல்லைக் கடந்து போகுமிடத்தைக் குறிக்கும்.

**வாளாண் எதிரும் பிரிவு**

வாளாண்மை புரியும்பொருட்டுத் தலைவற்கு நேரும் பிரிவு. இவ்விடத்துத் தலைவியது கூற்று நிகழும், தலைவன் வரைந்தல்லது

பகைவயிற் பிரிதல் மரபன்மையின், இது பகைவர் மண் நசையுற்று நைந்து பொருளாக வலிந்து போரொடு வந்தவிடத்து அவரை அடர்த்து ஒடுக்குதலைக் கருதிப் பிரியும் பிரிவாகும்.

**வாளாண் எதிரும் பிரிவு**

கற்புக்காலத்தில் வேந்தற்கு உற்றுழிப் பிரிவில் தலைவன். “குஞ்சுகளோடு பெடைக் குருகைச்சேவல் தன்சிறகால் ஒடுக்கிப் பனியால் வருந்தாமல் காக்கின்ற இவ்விரவிலே எனது பிரிவு என்தலைவிக்கு எத்தகைய துன்பம் தருமோ?” எனத் தலைவியை நினைத்து, ஆகாயத்தை நோக்கி வருந்துதல். இது “வேந்தற்குற்றுழிப் பிரிதல்” எனும் கூற்று. கோவை.318) தலைமகள் தலைமகனுக்குத் தன் காதலைச் சொல்லுதற்கு நாணுதல்.

**விட்டுயிர்த்து அழுங்கல்**

தலைவியது கூற்று நிகழும் ஒழுகலாறுகள் பலவற்றுள் இஃது ஒன்று. அங்ஙனம் எண்ணிய தலைவி, தலைவனைப் போகவிட்டமையான் வேட்கை நலிய நெட்டுயிர்த்து வருந்துதல்.

**விடை தழாஅல்**

வெல்லும் திறல் படைத்த தலைவன் தான் விரும்பிய தலைவியை மணம் செய்துகொள்ள வேண்டித் தலைவி தமர் குறிப்பிட்ட கொல்லும் திறலுடைய ஓர் எருதினைப் பிடித்துத் தழுவி அடக்குதல். இது நம்பியகப்பொருள் கூறும் அகப்புறப் பெருந்திணை. தலைவியை மணக்க, தன் உயிருக்கே ஊறுசெய்யும் கடியசெயலில் ஈடுபடுதலின் பரத்தையிற்பிரிவு நீங்கி வந்த தலைவனிடம் ஊடல்கொண்டு தணியாத தலைவியைத் தோழி அறிவுறுத்தி ஊடல் தணிவித்தல்.

‘‘தலைவி! ஊடல் உணவுக்கு உப்புப் போன்றது. அது மிகுந்தால் நலம் கெடும்; அளவோடமைவதே சுவை தருவது. நீ ஊடலை நீட்டித்தல் தக்கதன்று; பொறுத்துப் போதலே நலம் பயப்பது’’ (கு.1302) என்பது போன்ற தோழி கூற்று. இது கற்பியலுள் ‘‘பரத்தையிற் பிரிவு’’ எனும் தொகுதிக் கண்ணதொரு கூற்று; உணர்த்த உணரா ஊடல் எனலாம்.

தலைவன் தன் மனைவியைப் பிரிந்து பரத்தையர் வீட்டிற்குச் சென்றுவிடுகிறான். இதனை அறிந்த தோழி, தலைவனை ஆற்றுப்படுத்த நினைக்கிறாள். அவள், தலைவன் தன் மனைவியோடு இல்லறம் நடத்த வேண்டும்; அவளோடு சேர்ந்து வாழ வேண்டும் என நினைக்கிறாள், பரத்தை வீடுபோய் வந்த தலைவன், தலைவியைச் சமாதானப்படுத்த தோழியை அணுகும் போது அவள் அதனை மறுத்து விடுகிறாள்.

இதன் மூலமாகத் தோழி, தலைவியின் அருமையைத் தலைவனுக்கு உணர்த்துகிறாள். அவனைக் கடிந்து பேசுகிறாள்; அவனைத் திருத்த நினைக்கிறாள்; அவனுக்கு இல்லறத்தின் மேன்மைகளை உணர்த்துகிறாள். அவனுடைய குழந்தைகள், மனைவி, சுற்றத்தார், குடும்பச் சூழ்நிலைகள் ஆகியவற்றைத் தோழி தலைவனுக்கு வெளிப்படுத்திக் காட்டுகிறாள்.

தோழி, தலைவன் தன் மனைவியையும் குழந்தைகளையும் நினைத்தாவது, அவன் பரத்தையர் வாழ்வை விலக்கிவிட வேண்டும் என எண்ணுகிறாள். தோழி மனிதநேய மாண்போடு நினைக்கின்ற காரணத்தினால்தான், தலைமக்களின் இல்லற வாழ்க்கையைப் பற்றி எண்ணுகிறாள். தோழி பரத்தமை வாழ்க்கையை ஒழிக்கப் பெரிதும் முயன்றிருக்கிறாள். அவள் அதற்கான செயல்களைச் செய்திருக்கிறாள்; அதற்காகத் திட்டத்தை வகுத்திருக்கிறாள்.

எனவேதான், தலைவன் பரத்தையர் வீட்டிற்குச் சென்றுவந்தாலும் தோழி அவனுடைய கருத்திற்கு உடன்படாமல் மறுத்து விடுகிறாள் தலைவன் தோழியிடத்தில் பலமுறை தன் தலைவியோடு சேர்த்து வைக்குமாறு வேண்டிக்கேட்டுக் கொண்டதன் பின்னர்தான் தோழி அதற்கு உடன்படுகிறாள் என்பதை இதில் உணர முடிகிறது.

**வாலில் வேண்டிப் புக்க கிழவற்குத் தோழி கூறியது**

வாயில் வேண்டிச் சென்ற கிழவற்குத் தோழி உரைத்தது; வாயில் தேர்ந்தது முதலான துறைப்பாடல்களில் தோழியின் மனிதநேய மாண்புகள் மிகுந்து காணப்படுகின்றன. தலைவன் மேற்கொண்ட பரத்தமை வாழ்க்கையை ஒழிப்பதற்காகத்தான் தோழி, அவனுடைய சமாதான கருத்திற்கு உடன்படாமல் பலமுறை மறுத்து விடுவதாகவும் பலமுறை வேண்ட விடுவதாகவும் செய்கிறாள். ஒருபுறம் தோழியின் மனிதநேய மாண்புகள், தலைமக்களின் இல்லறவாழ்க்கை சிறப்பாக மேற்கொள்வதற்கு வழிசெய்கின்றது; மற்றொருபுறம் பரத்தையர் வாழ்க்கையை ஒழிப்பதற்குப் பெரிதும் துணைபுரிந்திருக்கிறது.

பரத்தை வீடு போய் வந்த தலைவன், தலைவியைச் சமாதானப்படுத்த, தோழியிடத்தில் வேண்டிக் கொண்டிருக்கிறான். தோழி தலைவனின் வேண்டுகோளுக்கு உடன்படவில்லை. அவள், அவன் தன் மனைவிக்குச் செய்த கொடுமைகளைச் சுட்டிக்காட்டுகிறாள். தோழி, தலைவனுக்குக் களவுக்காலத்தில் நிகழ்ந்த இனிமையான நிகழ்வுகளை எடுத்துக் கூறினாள். அவள், தலைவனுக்கு நீ இளமைக் காலத்தில் தலைவியின் மீது பற்றோடு இருந்தாய்; அவள் மீது நீ முழுமையான அன்பைச் செலுத்தினாய்! இப்பொழுது நீ அவள் மீது முழுமையான அன்பைச் செலுத்தவில்லை என்று கூறுகிறாள்.

முன்பு, என்தோழி வேம்பினது பச்சைக்காயைத் தரினும், இனிய மணமுள்ள வெல்லக்கட்டி என்று சுவைத்து உண்டீர்; இப்பொழுது பாரியின் பறம்புமலையில் குளிர்ந்த சுனையில் கிடைக்கும் தெளிந்த நீரை, அதுவும் தைமாதத்தில் மிகக்குளிர்ச்சியுடையதாய் தந்தாலும் வெப்பமாய் இருக்கிறது; உவர்ப்பாய் இருக்கிறது என்று வெறுத்துக் கூறுகின்றீர்.

**கொடுமைகளைப் புலப்படுத்தல்**

உலகில் அன்பின் தன்மை அத்தகையதாக இருக்கிறது என்று தோழி தலைவனின் வேண்டுகோளைப் புறக்கணித்து விடுகிறாள். தோழி, தலைவனின் சமாதான சொற்களை ஏற்றுக்கொள்ளாமல், அவன் தன் மனைவிக்குச் செய்த கொடுமைகளைப் புலப்படுத்திக் காட்டுகிறாள். இப்பாடலில், புலவர் எந்தக் கருத்தை வலியுறுத்த வேண்டுமோ, அக்கருத்தை மிக அழகாக வலியுறுத்தி இருக்கிறார். ஓர் இலக்கியத்தில்தான், சமூகத்திற்கு நன்மை தரக்கூடிய எந்தவகையான கருத்துக்களையும் வலியுறுத்த முடியும்; எடுத்துக் கூறமுடியும் . சமூகத்தைக் கட்டுப்படுத்த முடியும் என்பதை,

“வேம்பின் பைங்காய்என் தோழி தரினே
தேம்பூங் கட்டி என்றனிர் இனியே
பாரி பறம்பில் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கள் தண்ணிய தரினும்
‘வெய்ய உவர்க்கும்’ என்றனீர்
ஐய அற்றால் அன்பின் பாலே”[83]

என்ற பாடல் உணர்த்துகிறது. இப்பாடல், தலைவன் மனிததேயமில்லாமல் தன் மனைவியைப் பிரிந்து, பரத்தையர் வீட்டிற்குச் சென்று விட்டான் என்று உணர்த்துகிறது. தோழி, தலைவனை மனிதநேய மில்லாதவன் என்று

சுட்டிக்காட்டுகிறாள். தோழி, தலைவனுக்கு மனிதநேயம் இருந்திருந்தால், அவன் பரத்தையர் இல்லத்திற்குச் சென்றிருப்பானா? என்று வன்மையாகக் கண்டிக்கிறாள்.

இதனைத் தொல்காப்பியம், ஏனது சுவைப்பினும் நீகை தொட்டது... வானோர் அமுதம் புரையுமால் எமக்குனன... அடிசிலும் பூவும் தொடுத்தற் கண்ணும் (தொல். கற்பு. 5) என்றும், அருமைக் காலத்துப் பெரும காட்டிய... எளிமைக் காலத்து இரக்கத்தானும் (தொல். கற்பு, 9) என்றும் குறிப்பிடுகிறது. இதனை,

"அறனில் வேந்தன் ஆளும்
வறன் உறு குன்றம்"[84]

என்றும்,

"கடும்பரிப் புரவிக் கைவண் பாரி
தீம் பெரும் பைஞ்சுனை"[85]

என்று குறிப்பிடுகிறது.

தோழி, தலைவனிடத்தில் இவ் ஊர் மக்கள் முன்பு ஒரே ஒருபசுவை வைத்துக்கொண்டு, அப்பசுவினால் வரும் செல்வத்தை வைத்துக்கொண்டு உணவை உண்டு வாழ்ந்து வந்தனர். உன் வாழ்வும் இவ்வாறுதான் இருந்தது. மிகுந்த நன்மையையுடைய இளம்தலைமகள் நின்இல்லம் புகுந்த காலந்தொட்டே, நின்வாழ்வு விழாவால் மேம்பட்டசிறப்பினை உடையதாயிற்று என்று கூறுகின்றனர்.

இதனை, அறிவாயாக? அத்தகைய செல்வத் திருமகளாகிய தலைவியை விடுத்து, பரத்தை ஊருடன் நீர் விளையாட்டு விழா ஆடுவதைக் கண்டு ஊரார் பழிக்கின்றனர்; ஊர்முழுக்க உன்னுடைய பரத்தமை

வாழ்வைப் பற்றிக்குறை கூறிக்கொண்டிருக்கின்றனர். அவர்கள் தலைவியின் வாழ்க்கையை நினைத்து மனவேதனை கொண்டிருக்கின்றனர். இப்பாடல், ஒரு சிறந்த கருவை உள்ளடக்கி இயற்றப்பட்டுள்ளது. இதில், சமூகத்தின் உட்கூறுகளை உள்ளடக்கிப் பாடப்பட்டுள்ளது. இப்பாடல் தலைவனுக்கும் அவன் போன்ற பிறருக்கும், நல்ல எண்ணம் வளர வேண்டும் என்பதை,

“உடுத்தும் தொடுத்தும் பூண்டும் செரிஇயும்
தழைஅணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி
விழவொடு வருதி நீயேஞு இ‘தோ
ஓர்ஆன், வல்சிச் சீர்இல் வாழ்க்கை
பெருநலக் குறுமகள் வந்தென,
இனிவிழவு ஆயிற்று என்னும் இவ்ஊரே”[86]

என்ற பாடல் உணர்த்துகிறது.

தோழி தலைவனை நோக்கி, நீ முன்பு செல்வம் இல்லாமல் இருந்தாய். நீ வறுமையில் வாழ்ந்தாய். நீ தலைவியைத் திருமணம் செய்து கொண்ட பின்னர்தான் செல்வ வளத்தோடு திகழ்ந்தாய். நீ தலைவியைத் திருமணம் செய்த பின்னர் எல்லா வகையான செல்வங்களும் உன்னிடம் வந்தன. நீ அவ்வூரில் செல்வந்தனாய் நிகழ்ந்தாய். அதனை நீ மறந்து விட்டுத் தலைவியைப் பிரிந்து பரத்தையரோடு வாழ்ந்து கொண்டிருக்கிறாய், அது உன் வாழ்வுக்குத் தகுதியா? தியாயமா? என்று இடித்துரைக்கிறாள். தோழி, அவன் செய்த குற்றத்தை அவனுக்கே வெளிப்படுத்திக் காட்டுகிறாள்; அவனைச் சிந்திக்க வைக்கிறாள்; அவன் செய்த குற்றத்தை உணர வைக்கிறாள்.

தலைவன் தோழியிடத்தில் பலமுறை சமாதானப்படுத்துமாறு வேண்டியும், அவள் அதற்கு மறுத்து விடுகிறாள். அவள், அவன் செய்த

குற்றத்தையே மீண்டும் மீண்டும் உணர்த்திக் காட்டுகிறாள் என்பது இங்கு உணர்த்தப்பட்டுள்ளது. இதனைத் தொல்காப்பியம், இடித்து வரை நிறுத்தலும் அவரது ஆகும்... கிழவனும் கிழத்தியும் அவர்வரை நிற்றலின் இடித்து வரை நிறுத்தலும் அவரது ஆகும். இதனை,

"கிழவனும் கிழத்தியும் அவர் வரை நிற்றலின்"[87]

என்று உரைக்கிறது.

இளம்பூரணர், கழறித் தலைவனை எல்லையின் கண்ணே நிறுத்தல் அறிவர்க்குரியது. அங்ஙனம் கழறியது இது (தொல். கற்பு.14), நல்குரவு சிறப்பித்தல், காரணமாக வந்தது; இதனுள் ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கை யெனத் தலை மகன் செல்வக்குறைபாடு கூறி, பெருநலக் குறுமகள் வந்தென விழவாயிற்று என்னும் இவ்வூரென்ற மையான் நல்குரவு பற்றித் தலைமகளைச் சிறப்பிக்க வந்தது (தொல். பொருள். 49) என உரைக்கிறார்.

நச்சினார்கினியர், உணர்ப்புவயின் வாராது ஊடிய தலைவி மாட்டு ஊடின தலைவனை அறிவர் கழறியது (தொல்.கற்பு. 14), தோழியும் அறிவரும் பரத்தையிற் பிரிவால் தலைவர்க்கும் தலைவியர்க்கும் தோன்றிய வருத்தமிகுதியைத் தீர்க்கக் கருதி, அவரது இல் வாழ்க்கை நிகழ்ச்சிக் கண்ணே தமக்கு வருத்தந் தோன்றிற்றாகக் கூறியது.

இதனுள் முன்னர் நிகழ்த்திய வாழ்க்கை இவள் வந்தாளாகப் புறத்து விளையாடும் விழவுளதாயிற்றென்று இவ்வூர் கூறாநிற்கும் செல்வம், இவளை நெகிழ்ந்தாற் பழைய தன்மையாமென்று அறிவர் இறங்கிக் கூறியவாறு காண்க (தொல்.பொருள்.32) என்று உரைக்கிறார். தொல்காப்பியம் இதனை,

"சினனே பேதைமை நிம்பிரி, நல்குரவு
அனைநால் வகையும் சிறப்பொடு வருமே"[88]

என்று குறிப்பிடுகிறது.

அகநானூறு, சீரும் சிறப்பும் இல்லாத சிற்றூரில் வறுமையால் வாழும் பெண்களின் ஒற்றைப் பசு கட்டப்பட்ட தூண் கொண்ட முகப்பினையுடைய புல்வேய்ந்த குடிசையான வறிய இல்லத்தில் சிலம்பினைக் கழித்து அவனை மணஞ்செய்து கொண்டாளோ? என்பதனை, (அகம். 369), என, அதனை எண்ணித்தான் யான் பெரிதும் வருந்துகின்றேன். செவிலித் தாயின் கையகத்திருந்த மெல்லிய நடையினை யுடைய என் புதல்வனை நோக்கி நீவிர் நம் அழகியரான பரத்தையர்க்குப் பொருந்தியவர் ஆவீர்; இதோ இந்தச் செல்வனாகிய பிள்ளைக்குத் தாயாவதற்கே நாங்கள் பொருந்தியவர்கள் ஆவோம் என்று கூறி என்மகனிடத்து மெதுவாகச் சென்றேன் (அகம். 26) என்று கூறுகின்றது.

சிறந்த இலக்கியப்படைப்பில் கரு, கதைமாந்தர்கள் உரு, அழகு, அமைதி, அளவு போன்றவை காணக்கிடக்கின்றன. இவற்றுள் கரு மிகமுக்கியமானது என்றும், அதுவே உயிர்போன்றது என்றும் கூறுவார். அவருடைய ஆய்வும் எண்ணங்களும் கிரேக்க யாப்பிலக்கண, அலங்காரத்துறைக்கு அழகும் மெருகும் ஊட்டின எனக் கருதலாம்.

தோழி, தலைவனை நோக்கி, நீ உன் மனைவி மக்களைப் பிரிந்து பரத்தையர் வீட்டிலேயே வாழ்ந்து கொண்டிருந்தாய். நீ உன் மனைவி மக்களைப் பற்றிக் கவலைப்படாமல் இருந்தாய். அதனைப்பற்றி நாங்கள் கவலைப்படவில்லை. ஊரார் உன் பரத்தமை வாழ்க்கையைப் பற்றி ஊர் முழுவதும் அலர் மொழிகளைப் பேசுகின்றனர். உன்பண்பு நலன்களைப் பற்றி இழிவாகப் பேசுகின்றனர். அத்துன்பத்தை எங்களால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. எனவே, எமக்குத் துன்பம் தருமாறு ஊரார் பேசும் பழிமொழிகளோடு, எமது தெருவிற்கு இனி வராதீர். நீ பரத்தையர் வீட்டிலேயே இன்பமாக வாழ்வீராக எனக் கூறுகிறாள்.

ஒரு செவ்வியல் தன்மை கொண்ட இலக்கியத்தில் தான், செவ்வியல் பண்புகள் கொண்ட பாடல்களைப் படைக்கமுடியும். அவற்றுள் எல்லாக்கருத்துக்களையும் நேரடியாகவும் மறைமுகமாகவும் கூறமுடியும். அக்கருத்துக்கள் யாவும், எத்தலைமுறைக்கும் நிலை பேறு கொண்ட கருத்துக்களாகவும் நிலைபேறு கொண்ட இலக்கியங்களாகவும் திகழும். என்பதை,

''மனைஉறை கோழிக் குறுங்காற் பேடை
வேலி வெருகினம் மாலை உற்றெனப்
புகும்இடன் அறியாது தொகுபுஉடன் குழிஇய
பைதற் பிள்ளைக் கிளைபயிர்ந் தாஅங்கு
இன்னாது இசைக்கும் அம்பலொடு
வாரல், வாழியர்! ஐயஎம் தெருவே''[89]

என்ற பாடல் உணர்த்துகிறது. காட்டுப் பூனைக் கூட்டத்திற்கு அஞ்சிய தன் குஞ்சுகளைக் காப்பாற்ற, கோழி கத்துகிறது. பரத்தையரால் கைக்கொள்ளப் பட்ட தலைவனைத் தங்கள் தெருவில் பார்த்ததும், ஊரார் பழிமொழிகளைப் பேசுகின்றனர். எனவே, எம் தெருவுக்கு முற்றிலும் வாராது பரத்தையர் வீட்டிலேயே இரும் எனத் தோழி தலைவனை நோக்கிக் கூறுகிறாள். தோழி, தலைவி படும் துன்பத்தைத் தான் படும் துன்பமாகக் கருதுகிறாள்.

தலைவி தன் தலைவனிடம் பேசவேண்டிய அனைத்துப் பேச்சுக்களையும், தோழியே தலைவியின் பொருட்டுத் தலைவனிடம் பேசிவிடுகிறாள். தோழி, தலைவியின் கணவனை உரிமையோடு கண்டிக்கிறாள். தோழி, தலைவனுக்கு அவன் மனைவியின் துன்பத்தையும், குழந்தைகளின் வேதனைகளையும் சுட்டிக்காட்டுகிறாள்.

இதில், தோழி தலைவியின் குடும்பத்தை ஒன்று சேர்க்க நினைக்கிறாள் என்பதை உணரமுடிகிறது. அவள், தலைவனுக்குத் தன் மனைவி குழந்தைகள் மீது பற்றுவரத் திட்டம் தீட்டுகிறாள் என்பதை அறியமுடிகிறது. இதனைத் தொல்காப்பியம்,

“நீத்த கிழவனை நிகழுமாறு படீஇக்...

காத்த தன்மையின் கண்ணின்று பெயர்த்தல்”[90]

என்று உணர்த்துகிறது.

சங்க இலக்கியம், மனைஉறை தோழியொடு (பெரும்பாண், 299), குவியடி வெருகின் பைங்கண் ஏற்றை... நெற்றிச் சேவல் அற்றம் பார்க்கும்... புல்லென் மாலையும் (அகம். 367), ஊர் முதுவேலிப் பார்நடை வெருகின்... இருட்பகை வெரிஇய நாகிளம் பேடை... உயிர் நடுக்குற்றுப் புலாவிட்டு அரற்ற ஊர் முது வேலிப் பார்நடை வெருகின்... இருட்பகை வெரீஇய நாகிளம் பேடை... உயிர் நடுக்குற்றுப் புலாவிட்டு அரற்ற (புறம். 326), நின்வெங் காதலி தழீஇ நெருநை... ஆடினை என்ப புனலே அலரே... மறைத்தல், ஒல்லுமோ மகிழ்ந... புதைத்தல் ஒல்லுமோ ஞாயிற்றது ஒளியே (ஐங். 71) என்று உரைக்கிறது.

குறுந்தொகையில், ஒளி மிக்க வளையணிந்த மகளிர் “வண்டல்“ என்னும் விளையாட்டைக் கொண்டாடும் நொண்டி போன்ற என் பெண்மை நலத்தைத் தந்துவிட்டு, நின் சத்தியம் செய்த சூளைத் திரும்பக் கொண்டு செல்வாயாக, உன் சூளுரைகளுக்கு நாங்கள் மயங்கோம் (குறு. 238), பகைவருக்கு நரகம் போன்ற வாளை பெற்றுள்ளவனும் இளம் மறவர்களுக்குத் தலைவனுமாகிய அழிசி என்பானது ஆர்க்காடு எனும் நகரைப் போன்ற இவளது குற்றமற்ற மாட்சிமிக்க பேரழகு அழிதலைக் கண்டு எம் ஊரில் அலர் மிகுகின்றது.

அதனால், இனி என் சேரிப் பக்கம் வராதீர். உம் மாலையை எமக்குத் தராதீர் (குறு. 258), பரத்தையரின் நலனை உண்டு, அவர்களைத் துறந்து வரும் நீ அவர்களிடம் கூறிய நின் சூளுறவைப் போல எம்மிடம் கூறுகிற உனது சூளுறவு மிக நன்றாக இருந்தது. ஆனால் நம்பத் தான் முடியவில்லை (குறு. 384) எனக் கூறுவதை இங்கு உணரமுடிகின்றது.

தோழி, தலைவனிடத்தில் தலைவியால் இனி உன் பரத்தமை பிரிவைத் தாங்கிக் கொள்ள முடியாது. அவள் மிகுந்த வேதனையோடு இருக்கிறாள். நீரில் நீண்ட நேரம் ஆடினால் கண் சிவந்து போகும். திரும்பத் திரும்பத் தேனை உண்டால், அங்ஙனம் உண்டவர் தம் வாயில் அத்தேனும் புளிக்கும்.

நீ எம்மை முற்றும் பிரிந்தாயாயின் அழகிய தண்ணிய பொய்கையையுடைய என் தந்தையினதாகிய எமது ஊரில், கடிய பாம்புகள் திரியும் தெருவில் முன்பு களவில் வந்து எமது நடுங்கும்படியான கடும் துன்பத்தைக் களைந்த நீ, இப்போது அதே தெருவில் எமது வீட்டில் கொண்டு போய் எம்மை விட்டு விடுவாயாக, நீ செய்கின்ற கொடுமையைத் தலைவியால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை என்று தோழி தலைவனுக்குக் கூறுகிறாள். என்பதை,

“நீர்நீடு ஆடின் கண்ணும் சிவக்கும்
ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும்
தணந்தனை யாயின்எம் இல்உய்த்துக் கொடுமோ
அந்தண் பொய்கை எந்தை எம்மூர்க்
கடும்பாம்பு வழங்கும் தெருவில்
நடுங்கு அஞர் எவ்வம் களைந்த எம்மே”[91]

என்ற பாடல் வழி அறியமுடிகிறது.

தோழி, தலைவனுக்கு எம் தலைவியை அவள் வீட்டிற்குக் கொண்டுபோய் விட்டு விடு என்று இடித்துரைக்கிறாள். நீ பரத்தையர் வீட்டில் சென்று வாழ்வதை எங்களால் பொறுத்துக் கொள்ள முடிய வில்லை. எங்களுடைய சுற்றத்தாரும் மனவேதனையில் ஆழ்ந்துள்ளனர். அவர்கள் அமைதியின்றி வாழ்கின்றனர். நீ பரத்தையர் வீட்டை உன்னுடைய வீடாகக் கருதி அங்கேயே இருந்து விடு. தலைவியை அவள் தந்தை வீட்டிற்கு அனுப்பி வைத்துவிடு என்று தோழி தலைவனை நோக்கிக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இதனை இளம்பூரணர், கிழவனை மசுடூஉப் புலம்பு பெரிதாகலின்... அலமரல் பெருகிய காமத்து மிகுதியும் தொல். கற்பு, என்று சுட்டிக் காட்டுகிறார்.

நச்சினார்க்கினியர், தேன் உண்டு இன்சுவை நிகழ்ந்த காலத்தே... புளிச்சுவை நிகழுமாறு போல் (சீவகசிந்தா. 2382) என்று சான்று காட்டுகிறார். சங்க இலக்கியம்,

> ‘‘நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும்...
> தை இத் தண்கயம் போலப்...
> பலர் படிந்துண்ணும் நின்பரத்தை மார்பே’’[92]

எனவும்,

> ‘‘நள்ளென் கங்குல் நடுங்கும்
> துணையாயவர் நின்மறந்து உறைதல்யாவது’’[93]

எனவும்,

> ‘‘ஆசாகு எந்தை யாண்டுளன் கொல்லோ’’[94]

எனவும்,

> ‘‘நீத்தம் அரிமதர் மழைக்கண்
> சிவப்ப ஆடுகம் வம்மோ’’[95]

என்றும் குறிப்பிடுகின்றது.

**குற்றத்தை உணரவைத்தல்**

தலைவன், தோழியைப் பல நாட்களாக வேண்டிக் கேட்டுக் கொண்டதன் பொருட்டு, உள் வேண்டுகோளுக்குத் தலைவி உடன்பட்டு விட்டாள். இனியும் நீ பரத்தையர் வீட்டிற்குச் செல்லக் கூடாது. நீ பரத்தையரை மறந்து விட வேண்டும். நீ பரத்தையரோடு தொடர்பு வைத்துக் கொள்ளக்கூடாது எனத் தோழி தலைவனைக் கேட்டுக் கொள்கிறாள்.

மகரந்தத் தூள்கள், தங்கள் உடம்பெல்லாம் படும்படி, உழவர்கள் வளைத்த கமழும் பூக்கள் நிறைந்த மெல்லிய கிளைகளைக் கொண்ட காஞ்சி மரங்கள் நிற்கும் மருத நிலத் தலைவன் பரத்தையொழுக்கமுடையவன். அங்ஙனமாகவும் நம் தலைவி அவனது கொடிய அவ்ஒழுக்கத்தை மறைத்து வாழ்ந்து வருபளாதலின், இப்போது அப்பரத்தை வீட்டிலிருந்து வரும் அவன் வெட்சுப்படும்படி அவனை ஏற்றுக் கொள்ள முன் வருகின்றாள். உண்மையில் இவள் தாய் போலும் பெருமையுடையவளே என்று தோழி தலைவனுக்குக் கூறுகிறாள். என்பதை,

> ‘‘யாய்ஆ கியளே விழவுமுத லாட்டி
> பயறுபோல் இணர பைந்தாது படீஇயர்
> உழவர் வாங்கிய சுமழ்பூ மென்சினைக்
> காஞ்சி ஊரன் கொடுமை
> கரந்தன ளாகலின் நாணிய வருமே’’[96]

என்ற பாடல் உணர்த்துகிறது. இப்பாடல், பரத்தை வீடு போய் வந்த தலைவனைத் தலைவி ஏற்றுக்கொள்கிறாள் என்று உணர்த்துகிறது. தலைவன், தோழியிடத்தில் தனக்கும் தலைவிக்கும் உள்ள ஊடலைத் தீர்த்து வைக்குமாறு பலமுறை வேண்டிக் கொண்டாலும், அவள் அதனை அப்பொழுதே தீர்த்து வைக்கவில்லை.

தோழி, தலைவனைப் பலவாறு சிந்திக்க வைக்கிறாள். அவனைப் பலமுறை அலையவிடுகிறாள். அவனைப் பலமுறை வேண்ட வைக்கிறாள். அவன் செய்த குற்றத்தை உணர வைக்கிறாள். அவன் மீண்டும் பரத்தையர் வீட்டிற்குச் செல்லாதவாறு வாக்குறுதியை வாங்கிக் கொள்கிறாள் என்பதை இங்கு உணரமுடிகிறது.

தோழி மனிதநேயச் சிந்தனையோடு இருக்கின்ற காரணத்தினால், மனிதநேயமில்லாத தலைவனைத் திருத்துகிறாள்; அவனை நல்வழிப்பாதைக்கு அழைத்து வருகிறாள்; தலைவனுக்கும் அவன் மனைவிக்கும் உள்ள ஊடலைத் தீர்த்து வைக்கிறாள்; அவர்களுக்குச் சமாதானத்தை ஏற்படுத்துகிறாள். தோழி, தலைவன் மீண்டும் பரத்தையர் ஒழுக்கத்தை மேற்கொள்ளாமல், அவன்தன் மனைவி மக்களோடு சேர்ந்து வாழவழி வகுத்துள்ளான் என்பது சுட்டிக் காட்டப்படுகிறது. இதனை,

‘‘யாயாகியளே மாஅ, யோனே...
கயம்மூழ்கு மகளிர் கண்ணின் மாறும்...
தண்ணம் துறைவன் கொடுமை...
நம்முன் நாணிக் கரப்பா டும்மே’’[97]

எனவும்,

‘‘நீ எமக்கு இன்னாதன பல செய்யினும்
நின் இன்று அமைதல் வல்லா மாறே’’[98]

எனவும்,

‘‘குறுங்கால் காஞ்சிக் கோதை மெல் இணர்ப்...
பொன் தகை நுண்தாது உறைப்ப’’[99]

எனவும்,

“காஞ்சித் தாது உக்கன்ன தாது எரு மன்றத்து”[100]

எனவும்,

“பெய்யாது வைகிய கோதை போலப் பெய்சாயினள்”[101]

எனவும்,

“ஒண் நுதல் மகளிர் ஓங்கு கழிக்குற்ற
கண்நேர் ஒப்பின் கமழ் நறு செய்தல்”[102]

எனவும்,

“வகைவரிச செப்பினுள் வைகிய கோதையேம்”[103]

என்று குறிப்பிடுகின்றது. மேலும் இக்சுருத்தைத் தொல்காப்பியம்,

“தலைமகளைப் பேணாத ஒழுக்கத்தினால்...
நாணிய பொருண் மைக்கண் தோழி கூண்று”[104]

அகம் புகல்மரபில் வாயில்கள் உரைத்தல் (தொல். கற்பு. 11) என்று சுட்டிக்காட்டுகின்றது.

செவ்வியல் இலக்கியம் பற்றிக் கூறுகையில் அதன் பல்வேறு பண்புகள் பற்றி குறித்து

நிற்பர் அறிஞர் பெருமக்கள். அவற்றை அடிப்படையாக வைத்துச் சங்கஇலக்கியங்கள் எவ்வாறு உள்ளன என எண்ணிப் பார்ப்பது நலம் மிகப்பயக்கும். அவன், அது தவறு என்று மனம் தெளிந்தான்.

அவன் பரத்தையை விட்டு மீண்டு வந்து தலைவியோடு கூடி வாழ்ந்தான். அப்போது, அவன் தோழியோடு உரையாடி, தான் பரத்தையோடு வாழ்ந்தபோது நீங்கள் என்ன நினைத்தீர்கள்? என்று வினாவினான். அதற்குத் தோழி தாய்மைத் தன்மை பொருந்திய தலைவி, ஆதன்வாழ்க அவினி வாழ்க

என்று மன்னனை வாழ்த்தினாள். நெல் மிகுதியாக விளைக, பொன் மிகவும் உண்டாகுக என்று இல்லற நினைப்பையே வெளிப்படுத்தி வாழ்த்தினாள்.

தோழியாகிய நான், அரும்புகள் நிறைய உடைய காஞ்சியும், சினையை உடைய சிறுமீன்களும், நிறைந்த ஊரன் வாழ்க. அவனுக்குத் துணையாக விளங்கும் பாணனும் வாழ்க என விரும்பினேன் (ஐங்.1) என்று கூறுகிறாள். தலைவன் உயர்ந்த தலைவியையும், தாழ்ந்த பொதுமகளையும், ஒன்றாகக் கருதினான் என்று தோழி, அவனுக்கு தான் செய்த தவறைச் சுட்டிக் காட்டுகிறாள். இதன் மூலம் தோழி சமூகத்திற்கு மனிதநேயச் சிந்தனையைப் புலப்படுத்துகிறாள். அவள் சமூக மக்கள் மனிதநேயத்தோடு நடந்து கொள்ள வேண்டும் என விளக்கிக் காட்டுகிறாள்.

இதனை ஐங்குறுநூறு, விதைப்பதற்குச் சென்ற உழவர் முன்பே விளைந்த நெல்லோடு திரும்பும் பூக்கள் நிறைந்த ஊரான் தலைவன். அவன் பரத்தை ஒழுக்கம் நீங்கித் தலைவியின் மனையிலேயே வாழ்வானாக என நான் விரும்பினேன் (ஐங். 3).

நான், பூத்து பயன்படாக் கரும்பும், காய்த்துப் பயன்படும் நெல்லும் ஒருசேர விளையும் வயல்களை உடைய ஊரனுடைய மார்பு பொதுநிலம் ஆகாது ஒழியுமாக என விரும்பினேன் (ஐங். 4). நான் தன்னுடன் வாழும் பெரிய மீனை முதலைப் போத்து தின்கின்ற நீர்த்துறை உடைய தலைவனது தேர் எங்கள் வீட்டில் வாயில் முன் நிற்க என்று விரும்பினேன் (ங்.5) என்று குறிப்பிடுகின்றது.

**தலைவியின் வாழ்வு சிறத்தல்**

தோழி அறநெறிச் சிந்தனையோடு சிந்திக்கின்ற காரணத்தினால்தான், தலைவியின் வாழ்வு சிறந்து விளங்க வேண்டும்; அவளுக்கு ஏற்பட்டுள்ள

துன்பங்கள் நீங்க வேண்டும்; அவளுக்கு நிகழ்ந்துள்ள இடர்பாடுகள் விலக வேண்டும்; அவள்தன் கணவனோடு இணைந்து வாழ வேண்டும் என்று எண்ணுகிறாள். தோழி தன் வாழ்வைப் பற்றி நினைக்காமல், தலைவியின் வாழ்வைப் பற்றி நினைத்திருக்கிறாள்.

அவள், தன் தலைவியின் வாழ்வு சிறந்து விளங்க வேண்டும் என்று பெரிதும் பாடுபட்டிருக்கிறாள் என்பது குறிப்பிடப்படுகிறது. சங்க இலக்கியப் பரத்தையர் பிரிவுப் பாடல்களில் மானுடவியல் சிந்தனைகள் மிகுந்து காணப்பட்டு உள்ளன. தோழி, தலைமக்களின் வாழ்க்கை சிறப்பாக அமைய வேண்டும்; தலைவன் தன் மனைவியோடு சேர்ந்து வாழவேண்டும்; அவன் பரத்தமை ஒழுக்கத்தில் ஈடுபடக்கூடாது; அவன் தன் மனைவியோடு இல்லற வாழ்க்கையில் ஈடுபட வேண்டும் அவன் தன் மனைவி மக்களைப் பேணிக்காக்க வேண்டும் என்று நினைத்திருக்கிறாள் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது.

தலைவன் தன் மனைவி மக்களைப் பிரிந்து, பரத்தையர் இடத்தில் செல்கின்ற போதுகூட, தோழி அவனைக் கண்டித்திருக்கிறாள். தலைவன், பரத்தையர் வாழ்க்கை விலக்கி வந்த பின்னர் கூட, தோழி அவனுக்கு அறிவுரை கூறியிருக்கிறாள். அவன், அவனுக்கு அது தகாத வாழ்க்கை எனச் சுட்டிக்காட்டியிருக்கிறாள்.

தலைவன் மனம் திருத்தி வந்தவுடன் தோழி, அவனுக்குத் தன் குடும்பச் சூழல்களையும், தன் மனைவி மக்களின் சூழ்நிலைகளையும் விளக்கியிருக்கிறாள் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. தோழி, தலைவனுக்குப் பரத்தையர் வாழ்க்கையே வாழ்க்கை அல்ல) இல்லற வாழ்க்கையே வாழ்க்கை; அதுவே சமூகம் போற்றுகின்ற வாழ்க்கை என உணர்த்தியிருக் கிறாள். இப்பாடல்கள், மேலை நாட்டுப் பாடல்களைக் காட்டிலும்,

கருத்துருவாக்கத்திலும், பொதுமைப் பண்புகளிலும் சிறந்து விளங்கி இருக்கின்றன.

**பாணர் செயல்கள்**

ஊடல் தீர்க்க வந்த வாயிலாகத் தன்னை ஏற்க வேண்டுதல், இசைவு பெறுதல், தலைவியின் ஊடல் தீர்த்தல், அவள் அழகு அழிந்தமை கண்டு கலங்குதல், தலைவனிடம் சென்று தலைவி சொல்லிய செய்தியை உரைத்தல், தலைவன் மீண்டு வருவதைத் தலைவிக்குச் சொல்லுதல், தலைவன் வரவு அறிந்த தலைவி அழகு பெற்றதை அறியார்போல வினவுதல் முதலியன பாணரின் செயல்களாகும்.

**விறலிக்குரிய செயல்கள்**

பிரிவின் போது தலைவிக்கு ஆறுதல் கூறுதல், ஊடல் தீர்த்தல், தலைவனோடு சேர்த்தல் முதலியன விறலிக்குரிய (விறலி-ஆடல் மகள்) செயல்களாகும்.

**கூத்தர் செயல்கள்**

தலைவிமின் செல்வச் செழிப்பை வாழ்த்துதல், நல்லறிவு புகட்டுதல், ஆறுதல் மொழி கூறுதல், தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே ஏற்பட்டு விட்ட இடைவெளியைச் சுட்டிக் காட்டுதல், பாசறைக்குச் சென்று தலைவனிடம் செய்தி கூறுதல், தலைவன் திரும்பி வருவதைத் தலைவிக்கு உரைத்தல் முதலானவை கூத்தர் செயல்களாகும்.

வாயில் வேண்டி உடன்படச்செய்தல், தலைவியின் ஊடல் தீர்த்தல், அதனைத் தலைவனுக்கு உணர்த்துதல், தலைவனுக்கும் தலைவிக்கும் பணிவிடை செய்தல், தலைவன் வருவதைத் தலைவிக்கு உரைத்தல்,

தலைவனின் ஆற்றலைத் தலைவிக்கு உணர்த்தல் முதலானவை இளையோர்க்குரிய செயல்களாகும்.

**கண்டோர்க்குரிய செயல்கள்**

ஊடல் தீர்த்தல், தலைவன் வரவைத் தலைவிக்கு உணர்த்துதல் முதலானவை கண்டோர்க்குரிய செயல்களாகும்.

**பாங்கர் செயல்கள்**

இளமை, செல்வம், வாழ்க்கை முதலான எதுவுமே நிலையற்றது என்ற நிலையாமைத் தத்துவத்தை உணர்த்துதல், தலைவன் பிரிவைத் தடுத்தல், பின்னர் பிரிவுக்கு உடன்படுதல் முதலானவையும் நன்மை தரும் வழியில் தலைவனை நிலைநிறுத்துதலும், தீமையிலிருந்து விலக்குதலும் பாங்கரின் செயல்களாகும்.

தலைவியிடம் வாயில் ஏற்க வேண்டுதல், ஊடல் தீர்த்தல், நெடுந்தூரம் சென்ற தலைவன் விரைவில் வருவான் எனக் கூறித் தலைவியை ஆற்றுதல் முதலானவை பாகன் செயல்களாகும்.

**பாங்கியின் செயல்கள்**

பிரிவை விலக்குதல், பிரிவைத் தாமதிக்கச் செய்தல், பிரிவை ஏற்றுக்கொள்ளுதல், நோற்றல் முதலானவை பாங்கியின் செயல்களாகும்.

**செவிலி, அறிவர் செயல்கள்**

நீதிமுறை, உலகியல் முறைகளை வெளிப்படையாகக் கூறுதல் செவிலிக்கும் அறிவர்க்கும் உரிய செயல்களாகும்.

**இல்லறத்தில் வாயில்கள்**

இல்லறத்தில் வாயில்களாக,

> "தோழி, தாய், பார்ப்பான், பாங்கன்
> பாணன், பாடினி, இளையர், விருந்தினர்
> கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர்
> யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப"[105]

என, தலைவன் தலைவியுடன் இல்லறத்தில் இருப்பதற்கு உறுதுணையாக இருப்பவர்கள் தோழி, தாய், பார்ப்பான், பாங்கன், பாணன், பாடினி, ஏவலர், விருந்தினர், கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர். என பன்னிரண்டு பேரும் இல்லறத்தில் வாயில்கள் ஆவார்கள்.

**இல்லற வாழ்வின் வாயில்கள்**

இல்லற வாழ்வின் வாயில்களாக தொல்காப்பியர் குறிப்பிடுவன,

> "கற்பும் காமமும் நாற்பால் ஒழுக்கமும்
> ........................................................................
> அகம் புகல்மரபின் வாயில்கட்கு உரிய"[106]

என, இல்லத்தினுள் இருக்கும் தலைவன், தலைவியிடம் பழகும் உரிமையுடையவர் வாயில்கள் ஆவார். தலைவனிடம் தலைவியின் கற்பு நல்வழி ஒழுகுதல், பொறுமை, மனக்கட்டுப்பாடு, விருந்து தருதல், உறவினை காக்கும் முறை போன்றவற்றை வாயில்கள் எனவும் கூறுவர். மேலும்,

> "இடித்து வரை நிறுத்தலும் அவரதாகும்
> கிழவனும் கிழத்தியும் அவர்வரை நிற்றலின்"[107]

என, தலைவனையும், தலைவிக்கும் தன் எல்லை தாண்டாது இருவருக்கும் அறிவுரை கூறும் உரிமை அறிவர்க்கு உண்டு. இதனை,

''புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்தும்
.......................................................................
அன்பிலை கொடியை என்றலும் உரியள்''[108]

என, தலைவனும் தலைவியும் கூடுதலும், ஊடலையும் அவரிடையே உண்டான வேறுபாடுகளைக் களைய சொல்வதற்குத் தகுந்த சொற்களைக் கூறுதலும், பரத்தமை தொடர்பை துணடித்தலும், தலைவியின் அறியாத நாட்களை சுட்டிக் காட்டும் முறையும் தலைவி அன்புடையவள் என்று கூறுதலும் தோழிக்கு உரியதாகும். இதனை,

''மனைவி தலைத்தாள் கிழவோன் கொடுமை
தம் உளவாதல் வாயில்கட்கு இல்லை
.....................................................................
நடக்கை எல்லாம் அவர்கட் படுமே''[109]

என, மனையாளிடம் இருந்து விலகி தலைவன் மேற்கொண்ட பரத்தமை ஒழுக்கத்தின் காரணமாக செய்யும் கொடுமைகளை, அவனிடம் வாயில்கள் வருந்திக்கூறுவதில்லை. கொடுமைகளுக்கு ஆளான தலைவியிடம் வாயில்கள் பேசும் பொழுது, கையறுநிலையில் உள்ள மனையாளுக்கு நல்ல வாழ்வு அமையும் முறையிலேயே பேசுவர்.

கிழவோனும், கிழத்தியும் தங்கள் ஊடலைத் தீர்க்க வேண்டும் பொழுது அவர்களிடம் நேரே கூறாது படர்க்கையிடத்துப் பேசுவது போல, பேசுவர் என்கிறார் தொல்காப்பியர். வாயில்களாக வருவோர் தலைவன்,

தலைவியிடம் எம்முறையில் எந்த வகையான செய்திகளைக் கூற வேண்டும் என்பதனையும் உரைக்கின்றார்.

**கூத்தர்களின் செயல்**

களவுக்கால நிகழ்வுகளும், இன்ப வாழ்க்கையைப் புகழ்தலும், பல் வழியில் தலைவியின் ஊடலைத் தீர்த்தல், வாழ்க்கைக்கான உறுதியும், அறிவும் உண்மையும் உணர்த்தலும், காரணம் காட்டி வாழ்க்கையை வாழ வைத்தலும், துணிவாக வாழ்தலும், தலைவியின் அழகு கெடும் வண்ணமாக பேசுதல் கூடாதென உரைப்பது கூத்தர்களின் செயலாகும்.

தலைவன் இருக்கும் நிலத்திற்கே சென்று தலைவியின் நிலையை உரைப்பதும், தலைவன் திரும்ப வரும் காலத்தை தலைவியிடத்துக் கூறுவதும் கூத்தர், பாணர். இருவருக்கும் உரியது. செல்கின்ற வழி எப்படிப்பட்டது என்றும், செய்கின்ற செயல் எவ்வாறு முடியும் என்பதும் அதனால் விளைகின்ற பயனும், இட்ட கட்டளையைச் செய்து முடிப்பதும், தலைமக்களிடம் விளைகின்ற வினாவும், அதற்கேற்ற விடை கூறுதலும், வழியினிடையே கண்ட பொருளும், இறைச்சிப் பொருளான கருப்பொருளும், உயிர்கள் தோன்றுவதற்கான நிகழ்வுகளும், பிற செய்திகளும் கூறுவது ஏவலர்களின் பணியாகும். ஊடல் உழைப்பால் செய்யும் தொழிலும், உயர்ந்த குடிகளைக் காக்கின்ற செயலும் என எல்லாமும் ஏவலர்களின் பணியாகும். என்பதை,

> ‘‘காமநிலை உரைத்தலும், தேர்நிலை உரைத்தலும்
> அன்பு தலைப் பிரிந்த கிளவி தோன்றின்
> சிறைப்புறம் குறித்தன்று என்மனார் புலவர்’’[110]

என, தலைவியைப் பிரியும் நிலையில் காமநிலையைத் தலைவனுக்கு உரைப்பர். தலைவனின் தேர்நிலையை உரைப்பதும் உண்டு. தலைவனுடன்

பழகியதால் அவனின் மனக்குறிப்பை அறிந்து கூறுவதுமுண்டு. கிழவோன் நெடுந்தூரப் பயணம் மேற்கொண்டதற்காக அப்பொழுது நிகழும் பிரிவினை உரைத்தலும், அவ்வாறு செல்லாமல் தடுப்பதற்கான கூற்றுகளும் பிற கூற்றுகளும், பார்ப்பார் இடத்துத் தோன்றும். வாயில்கள் எல்லோரும் தலைவன், தலைவியிடம் பேசும் பொழுது அவர்கள் விரும்பும் மகிழ்ச்சிப் பொருளையே பேசுவர் என்பர். இதனை,

‘‘மொழி எதிர் மொழிதல் பாங்கற்கு உரித்தே’’[111]

என, தலைவனை எதிர்த்துப் பேசும் உரிமை பாங்கனுக்கு உண்டு. அன்பு இல்லாத சொற்களை தலைவன் பேசினால் அவன் முன்னிலைப் புறமாக பேசுவர் என்பர். தலைவியின் ஆற்றாமை கண்ட தோழி, கூறிப்போன பருவம் வந்தும் வாராது வைகிய தலைவனிடத்தே ஒரு பாணனைத் தூது விடுப்ப, அவனும் அவன்பாற் சென்று கார்ப்பருவத்தைப் பற்றிச் சொல்லலுற்றான்.

‘‘காலைப்போதில் கடல்நீரை முகந்து மாலையில் மலையைச் சேர்ந்த மேகம் மழை பொழியவே, வையையாறு பெருகி மலர் மணமும் கனிகள் மணமும் உடன்கொண்டு தன் செலவைத் தொடர்ந்தது. ஆற்றுப்பெருக்குக் குறித்துப் பறைகள் அறையப்பட்டன, கருங்கை வழியே நீரோடும் அரவம் கேட்டு மதுரைமக்கள் வையை நீராடப் புறப்பட்டனர். புறப்படும் தடுமாற்றத்தில், தேரிலேற விரும்பினவர் பள்ளியோட வையத்தில் குதிரையைப் பூட்டி அதிலேறினர்! வங்கத்தில் ஏறக் கருதினோர் அதற்குரிய எருதுகளைத் தேரில் பூட்டினர்! குதிரைச் சேணம் யானைக் கிடப்பட்டது! மைந்தர்களும், மகளிர்கோதைகளும் இடம் மாறின! இனைய தடுமாற்றம் பற்பல.

‘‘வையைக்கரைக்கண் மகளிரும் மைந்தரும் தம் ஒப்பனைகளோடு வந்து நின்றனர்; அயலார் அணிந்த அணிகலன்களைப் பார்த்துக்கொண்டே

வந்தனர். அதுபோது ஒரு தலைவியின் ஆயத்தார், தம் தலைவன் பரத்தையொருத்தியொடு அங்கு நின்றமை கண்டனர்; அப்பரத்தையின் கையில் தலைவியின் வளைகள் காணப்பட்டதையும் நோக்கினர்; “ஆரத்தையும் வளையையும் இவளுக்குத் தந்த இக்கள்வனது முகத்தைப் பாருங்கள்!“ என்று வெகுண்டு பேசவே, பரத்தை தன் ஆயத்தாரிடை மறைந்தாள்!

‘‘ஒளித்தவள் மீண்டும் வெளிப்படவே, ஆயத்தார் அவளுடைய வரைவில் போகத்தைப் பலவாறு கடிந்து ஏசிப்பேசி, ‘எம் தலைவியினுடைய ஆரம்வளைகளைப் பூண்பதற்கு நின் மார்பும் எம்தலைவியது மார்பும் ஒத்தன ஆகுமோ? தம் எருதை அயற்புலத்தில் உழுதல் செய்யாது தம்புலத்திலேயே உழுவித்துக் கொள்ளு முறைமை வேளாளர்க்கு உரியதாதலின், இவ்வாறு செய்கின்றோம். எம்எருதினை இதுவெனக் காட்டி அவையத்திலே யாவரும் அறியச் செய்யத் தொடர்ந் துள்ளோம்’ என்றனர்.

முதிய கற்புடைய மகளிர் சிலர் பரத்தையைக் கடிந்து, தலைவியை வந்து வணங்குமாறு அவட்கு அறிவுரை கூறினர். அதற்கு அப்பரத்தை, “மாற்றாளை மாற்றாள் தொழுதல் பெருமையன்று’’ என்று எதிர் கூறவே, தலைவி, “எந்தை எனக்குச் செய்து இட்ட வளையும் ஆரமும் நின்பால் களவினால் வந்தன அல்லவாயின், நினக்கு இவற்றைத் தந்தவனைக் காட்டிவிட்டு உன் பெருமையைப் பேசிக்கொள்! என்று மனம் வேதனையுற்று மொழிந்தாள். அது கேட்ட அப்பரத்தை, என்பால் அன்பு பூண்ட உன் தலைவன் என்பால் இன்பம் பெறுதற்கு விலையாக இவற்றை எனக்குத் தந்தான்; நாளை நின் காற்சிலம்பும் தருவான்! ஆதலின் யான் அல்லேன், கள்வி; அவன்தான் கள்வன்! அவனை தீயே தொடர்க! என்று எதிர்மொழிந்தாள்.

“அங்கே மகளிர்தம் அணிகலன்களைக் கண்டு வியந்து வருவார் சிலர், பரத்தையை நோக்கிக் ‘காமுகர் அளித்த பரிசில் பரத்தையரையே சார்வன’ என்று நியாயம் பேசி, அவளைச் சினம் தணிவித்து, தலைவியை நோக்கி, பரத்தையர் பால் சென்று வைகும் கணவனைத் தடுத்தலும் நீங்கி ஒழுகுதலும் குலமகளிர்க்கு இயலுமோ? சால்புடை மகளிர் தம்மைக் கணவர் இகழ்ந்தாலும் தாம் அவரையே போற்றுவர்.

பரத்தையரைத் தழுவும் கணவரொடு தாம் அளவளாமலிருத்தலும் மகளிர்க்கு முடியுமோ? காமம் தக்க இடத்திலேயே நிற்க வல்லதோ? ஆதலின் நீ சினம் கொள்ளற்க” என்று அறிவுரை கூறினர். “இவ்வாறு வையை துனியினையும் புலவியினையும் ஏற்றுக் கொள்ளும்படி செய்தது. மயக்கமும் புணர்தலும் பிரிதலுமாகிய இக்காமத்தையும், கள்ளையும் உடன்விரவி, மகளிர் யாவரும் பாராட்ட, அவர்கள் தம் காதலரொடு புனலாடு மாறு அப்பிரிந்த தலைவர்களைக் கொண்டுவந்து கூட்டுதல் வையைக்கு இயல்பு.

பருவ வரவின்கண் பண்டு நிகழ்ந்ததொரு குறிப்புணர்ந்த தலைவன் அதனைக் கண்டு தாங்ககில்லானாய் மீள்கின்றான், பாகற்குச் சொல்லியது. வினைமுடித்து மீளும் தலைவன் தன்தேர்ப்பாகனிடம், “முன்பு யான் ஊரினின்றும் புறப்பட்டு வந்தபோது தலைவியிடம் என் கருத்தினைக் கூற, அவள் விடை கூறமுடியாமல் தன்கையில் இருந்த ஞாழல்பூங்கொத்தினையும் தளிரையும் சேரப் பிசைந்து உதிர்த்த கையொடு துன்புற்ற நிலையை நீயும் அறிவாய் ஆதலின், அவளை யான் விரைவில் சென்று காணுமாறு தேரை விரையச் செலுத்துக!” என்று கூறியது. நற். 106)

கற்புக்காலத்தில் பரத்தையிற் பிரிந்த தலைவன் மீண்டு வர, முதலில் வாயில்மறுத்த தலைவி அவன் ஆற்றாமை கண்டு வாயில் நேரப் புக்குப்

பள்ளியிடத்தானாகிய அவனிடம், ‘‘நின்னை இடைவிடாது நுகர்வதற்கு முற்பிறப்பில் நல்வினை செய்யாத நான் என்னை நோவதனைத் தவிர நின்னை நோவது பொருத்தமின்று. அது கிடக்க. நின்காதலிமார் ஆடவர் பலரிடத்தும் கற்று நினக்குப் புதிதாகச் செய்த அப்புல்லுதல் வகைகளை யான் செய்யமாட்டேன். அதனால் என்னைத் தொடாதே என் கலையினை விடுவாயாக” என அவன் பிறமகளிரொடு கொண்ட தொடர்பினை நினைத்துப் புலப்பது. கோவை. 358)

**பாகனுக்குரிய செயல்கள்**

தலைவன் பரத்தையிற் பிரிந்து மீண்டு தன் இல்லம் வந்போது ஊடல் கொண்ட தலைவியைத் தான் வாயிலாக நின்று தலைவனை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுதலும், பின் ஏற்றுக் கொள்ளச் செய்தலும், அதற்கு ஏதுவாக அவளது ஊடலைப் போக்குதலும், கற்புக்காலத்தில் தலைவியைப் பிரிந்து நாடிடையிட்டும் காடிடையிட்டும் போய்த் தன் செயலை நிறைவேற்றிய பின், ‘‘ஊர் சேய்மையிலுள்ளதே! தலைவியை விரைந்து சென்றடைதல் யாங்கனம்?’’ என்று தலைவன் வருந்துவது நோக்கி அவனைத் தேற்றுதலும் போல்வன பாகற்குரிய செயல்களாம்.

**பாங்கி தலைவனை இகழ்தல்**

பரத்தையிற் பிரிந்து மீண்ட தலைவனிடம் தலைவி கொண்ட புலவி சிறிதும் குறையாத அளவில் தானும் சிறுசினம் உற்று தலைவனிடம், தோழி, அன்பில்லாதவன் எனவும் கொடியவன் எனவும் அவனது அன்பு குறைந்த திறத்தை இகழ்ந்து கூறுதல், இது கற்பியலுள் ‘‘பரத்தையிற் பிரிவு’’ எனும் தொகுதிக் கண்ணதொரு கூற்று; உணர்த்த உணரா ஊடல் ஆகும்.

**பாங்கி ஆற்றுவித்து அகற்றல்**

பாங்கி தலைவற்கு ஆறுதல் கூறி மறுநாள் வருமாறு கூறி விடுத்தல். ‘‘தலைவ! யான் தலைவியை அணுகி அவள் உள்ளக்கருத்தை அறிந்து, அவளுக்கு நீ கொடுக்கும் கையுறையை ஏற்க வேண்டும் என்ற மனமிருந்தால், பின்னர் வந்து இக்கையுறை யைப் பெற்றுக்கொள்கிறேன்.’’ (கோவை, 93) என்று தோழி கூறி அவனை விடுத்தல்.

**பாங்கி இரவுக்குறிக்கு உடன்பல்**

தலைவன் இரவுக்குறிக்கண் வருதலைத் தோழி ஏற்றுக் கொள்ளுதல், தலைவன் அம்மலைநெறி தனக்கு இருளில் வருதற்கு ஏதம் தாராது என்று உறுதியாகக் கூறியபின் தோழி, ‘‘ஆளிகள் வரிசையாகக் கூடி யானைகளைத் தேடும் இரவில் வந்து மீளுதல் நினக்கு எளிது என்று கூறுகிறாய். நான் இதனைத் தலைவியிடம் கூறி அவளை உடன்படச் செய்தல் வேண்டும்’’ (கோவை, 151) என்றாற் போன்ற தோழி கூற்று.

**பாங்கி இரவுக்குறி ஏற்பித்தல்**

தோழி தலைவியை இரவுக்குறியினை ஏற்கச் செய்தல். ‘‘தலைவி! கடற்கரைச் சோலையிலே பெடையோடு ஆண் நண்டு மகிழ்ந்து கூடுவது சுண்டு மனம் வருந்தி நம் தலைவன் சென்றதை மாலையில் பார்த்தேன். இன்று இரவு அவன் எவ்வாறு கண்ணுறங்குவானோ? அறியேன்’’ (கோவை.155) என்றாற் போலத் தலைவியிடம் தலைவனது துயர்நிலை கூறி அவள் இரவுக்குறியை ஏற்குமாறு பாங்கி செய்தல்.

**பாங்கி செவிலி**

உடன்போக்கு நிகழ்ந்த பின், தலைவியைப் பற்றி வினவிய செவிலிக்குத் தோழி கூறுதல். ‘‘அன்னாய்! தலைவியின் மனத்தை அறிந்துகொள்ளாமல், நம்சுற்றத்தார் ஏதேதோ கூறி, வரைந்துகொள்ள வந்த தலைவனுக்கு மணம் மறுத்தனர். ஆகவே, இக்கொடுமையைப் பொறுக்காத அவள் பாலைவழியின் கொடுமையையும் பொறுக்கத் துணிந்து தலைவன் பின்னே சென்றாள்’’ (தஞ்சை. கோ.324) என்பது போன்ற தோழி கூற்று. இது வரைவியலுள், ‘கற்பொடு புணர்ந்த கவ்வை’ எனும் கூற்றாகும்.

**செவியில் உணர்த்தல்**

உடன்போக்குச் சென்று மீண்டு வந்த தலைவன் தலைவி இருவருக்கும் நற்றாய் திருமணம் நிகழ்த்தி மகிழ விரும்புகிறாள் என்று செவிலி தோழியிடம் கூறியபோது, அவள், ‘‘தலைவியை உடன்கொண்டு போன தலைவன் தன் மனையில் நல்லோரையில் பலரும் அறியத் திருமணம் செய்து கொண்டுவிட்டான்’’ என்று தூதுவர் வந்து கூறியமையைச் செவிலிக்குக் கூறுதல். (தஞ்சை. கோ. 35).

**பாங்கி, தமர் வரைவு எதிர்ந்தமை தலைவிக்கு உணர்த்தல்**

தலைவனுடைய உறவினரும் அவனைச் சார்ந்த பிறழ பெரியோரும் மணம்கேட்டு வந்தமையைத் தம் பெற்றோரும் தம்மைச் சார்ந்த மற்றோரும் ஏற்று மகிழ்ந்தனர் என்பதைத் தோழி தலைவிக்குக் கூறுதல்.

‘‘தலைவனை நானும் விரும்புகிறேன். அவனொடு நின்னை மணம் முடித்து வைத்தலைத் தாயும் விரும்புகிறாள். தந்தையும் அவனுக்கு நின்னை

மணம் புரிவிக்க விரும்புகிறான். ஊர் மக்களும் நின்னை அவனொடு சேர்த்தே பேசுகின்றனர்” (குறுந். 51) என்பது போன்ற தோழி கூற்று.

**பாங்கி, ஆற்றிய நிலைமை வினாதல்**

‘‘தலைவ! களவுக்காலத்தில் நீ தலைவியைக் கூடி இன்புற்ற நாள்கள் தவிர, களவொழுக்கத்துக்கு இடையூறு வரயான் தலைவியை உனக்கு அரியளாமாறு செய்வித்த நாள்களில் இத்தகைய பிரிதல் ஆற்றாத அன்புகொண்டு நீ எவ்வாறு ஆற்றியிருந்தாய்?’’ (அம்பிகா. 438) என்று தோழி தலைவனை வினாதல். இது கற்பியலுள், “இல்வாழ்க்கை“ எனும் கூற்று.

**பாங்கி, தலைவனை வாழ்த்தல்**

பரிசுப் பொருள் கொடுத்தும் பெரியோரை முன்னிட்டும் மணம் பேசி முடித்த பின்னர்த் தோழி தலைவனை வாழ்த்துதல். ‘‘தலைவ! களவில் ஒழுகி ஊரில் அலர் அரும்பிப் பரவ நீ முன்பு மறைவாகத் தலைவிக்கு சூட்டி மகிழ்வித்த ஆரமும் மாலையும் இன்று பலரும் காணச் சூட்டி மகிழ்ந்து, எம்மையும் மகிழ்வித்து, நீடுழி நலத்துடன் வாழ்வாயாக!’’ (தஞ்சை. கோ. 285) என்றாற் போலத் தோழி தலைவனை வாழ்த்துதல்.

**பாங்கி, தலைவனை வாழ்த்துதல்**

திருமணம் செய்து கொண்டு முறைப்படி இல்வாழ்க்கையும் தொடங்கி நலத்துடன் வாழும் தலைவனைத் தோழி வாழ்த்துதல். ‘‘தலைவ! நீ சொன்ன சொல் தவறாமல் வந்து வரைந்து எங்களை ஊரார் அலரினின்றும் கண்பொழி நீரினின்றும் காத்துள்ளாய். உங்கள் இல்லறம் இனிது வாழ்க!’’ (அம்பிகா. 434) என்பது போன்ற தோழி கூற்று. இது கற்பியலுள், ‘இல்வாழ்க்கை’ எனும் கூற்று.

### பாங்கி தலைவனை விடுத்தல்

களவொழுக்கத்தினிடையே தன் ஊருக்குச் செல்ல விரும்பிய தலைவனைத் தோழி தடுத்த, பின்னரும், அவன் வற்புறுத்தி வேண்டியமையால் அவள் விடைதந்து அனுப்புதல், ‘‘தலைவ! இத்தலைவி உன்னாலன்றி உயிர் வாழ்தல் இயலாத நிலையை அறிந்துள்ளாய். உன் ஊருக்குச் சென்று உன் செயலையும் முடித்து எம்மையும் காத்தலைக் கருதுவாயாயின், இன்றோ நாளையோ உன் செயலை முடித்து விரைவில் மீண்டு வருக!’’ (அம்பிகா, 282) என்றல் போன்ற தோழி கூற்று.

### பாங்கி தலைவி அருமை சாற்றல்

தலைவியை அடைதல் எளிதன்று எனத் தோழி தலைவனிடம் கூறுதல் , ‘‘ஐய! நீ கூறும் எம் தலைவி நாங்கள் வணங்கும் கண்கண்ட தெய்வம். அவள் எங்கள் மன்னவன்மகள். அவளை நீர் பெறுதல் மிகவும் அரிது’’ (தஞ்சை. கோ. 86) என்பது போன்ற தோழி கூற்று.

### பாங்கி, தலைவி ஒழுக்கம் பற்றி உரைத்தல்

தலைவி இல்வாழ்க்கையில் நல்லொழுக்கம் பலவற்றையும் கடைப்பிடித்துள்ள சிறப்பைத் தோழி தலைவனுக்கு உரைத்தல். ‘‘தன் கணவனையும் பெரியோரையும் காணுங்கால் எழுந்து நிற்றலும், அவர்களைத் தொழலும், அன்னார் எதிரே பலவும் பேசாமல், சொல்லுதல் இன்றியமையாவிடத்துப் பல கூறவேண்டிய அளவில் ஒன்றைச் சொல்லுதலும், அந்தணர் அறிவோர் சான்றோரைப் போற்றி வணங்கி அவர்அருள் பெறுதலும் என்னுமிவற்றைத் தன் இயல்பாகக் கொண்டு விட்ட தலைவி இத்தனையும் யாரும் தனக்குக் கற்பிக்காமலேயே சுற்று ஒழுகுவது பெரிதும் மகிழ்ச்சி தருகிறது’’ என்ற தோழி கூற்று.

**பாங்கி, தலைவிக்கு அவன் செலவு உணர்த்தல்**

தலைவன் தவிர்க்க முடியாமல் தன் ஊருக்குச் சென்ற செய்தியைத் தோழி தலைவிக்குக் கூறுதல். ‘‘தலைவி! வருந்தற்க. விரைவில் மீண்டு வருவதாகக் கூறி நம் தலைவர் இன்றியமையாக் காரணத்தால் தம் ஊருக்குச் சென்றுள்ளார்’’ (தஞ்சை.கோ. 252) என்பது போன்ற தோழி கூற்று.

**பாங்கி, தலைவிக்குத் தலைவன் வரல் சாற்றல்**

பரத்தையிற் பிரிவில் வைகிய தலைவன் தலைவியது மகப் பேற்றை யறிந்து மகிழ்ந்து அவளைக் காண வந்திருப்பதைத் தோழி தலைவிக்குக் கூறுதல், ‘‘தலைவி! நின் வருந்திய ஈன்றணிமையையுடைய உடல், கையிலேந்திய குழந்தை, கச்சினைக் கடந்து பரந்த நகில்கள், நீங்காத மனமகிழ்ச்சி இவற்றைக் காண்பதற்குத் தலைமகன் நின் இல்லத்து வாசலில் வந்து நிற்கிறான். நின் உள்ளக் கருத்தை நான் அறியேன்’’ (அம்பிகா, 466) என்பது போன்ற தோழி கூற்று. பாங்கி, தலைவியின் நன்மனை வாழ்க்கைத் தன்மை செவிலிக்கு. உணர்த்தல்.

தலைவனும் தலைவியும் இல்வாழ்க்கை நடாத்தும் மனைக்கு வந்த செவிலியிடம் தோழி, அவ்விருவர்தம் இல்லறத்தின் சிறப்பினை எடுத்துரைத்தல். ‘‘அன்னாய்! நின் அருமை மகள் காதலின்பம் பெற்றுத் திளைத்தல் மாத்திரமன்றி, அறவோர்க்கு அளித்தல் - அந்தண ரோம்பல் - துறவோர்க் கெதிர்தல் விருந்தெதிர்கோடல் என்னுமிவை போன்ற இல்லறத்துக்கு இன்றியமையாக் கடமைகளையும் விடாது செய்து விளங்குகிறாள்’’ (திருப் பதிக். 465) என்பது போன்ற தோழி கூற்று. ‘‘பாங்கி இல் வாழ்க்கைத் தன்மை செவிலிக்கு உரைத்தல்’’ என்பது இக்கோவைக்கிளவி, இது கற்பியலுள், ‘இல்வாழ்க்கை’ எனும் கூற்றாகும்.

**பாங்கி, தலைவியை அச்சுறுத்தல்**

“நின் களவினை நம்அன்னையர் அறிந்துவிட்டால் என் செய்வது?” என்று தோழி தலைவியை அச்சுறுத்தல். “தலைவி! நீ இவ்வாறு தலைவனை நினைத்து ஏங்கிப் புனம் காவலில் மனம் செலுத்தாமல், கிளிகள் வந்து கதிர்களைக் கொய்வதையும் குறிக்கொள்ளாமல், உள்ளம் சோர்ந் திருப்பதை நம் அன்னைமார் காணில், நம்மைப் புனங்காவலுக்கு அனுப்பாமல் இல்லுள் செறித்து வைத்தலும் கூடும். பேணத்தகும் நின் பெண்மையையும் நாணத்தையும் காத்தல் - பொருட்டு போன்ற தோழி கூற்று.

**பாங்கி, தலைவியைக் கழறல்**

பிரிவின் துயர் தாங்காமல் புலம்பும் தலைவியைத் தோழி கடிந்து இடித்துரைத்தல். தலைவியின் செயலால் களவு வெளிப்பட்டுவிடுமோ என்ற அச்சத்தால் தோழி, “பிரிவு இருப்பதும் இயல்பே; அதற்கு நீ இத்தனை கலங்குதல், தகாது” (தஞ்சை,கோ. 145) என்று தலைவியை இடித்துரைத்தல்.

**பாங்கி தலைவியைக் கழல்**

தலைவன் தன்னைப் பிரிந்து புறத்தொழுக்கம் ஒழுகுகிறான் என்ற செய்தியைச் சற்றே கடிந்துரைத்த தலைவியைத் தோழி இடித்துக் கூறுதல். “தலைவி! மாலையில் மலர்ந்த குமுதப்பூவில் தேனை உண்ட வண்டு காலையில் தன்னிடத்துக் தேன் நுகர வரும் போது தாமரை குவிந்து தேன் கொடுக்க மறுக்கிறதா? மங்கையர் தமது கற்பினால், காதலர் எக்கொடுமை செயினும், தம் நல்லொழுக்க இயல்பு மாறார். ஆதலின், தலைவன்செயல் குறித்து வருந்தற்க” (அம்பிகா. 453) என்றாற் போன்ற பாங்கியது இடித்துரை,

இது கற்பியலுள், 'பரத்தையிற் பிரிவு' எனும் தொகுதிக் கண்ணதொரு கூற்று; உணர்த்த உணரும் ஊடல்.

**பாணர் கூற்று**

கற்புக் காலத்துச் சேட்புலத்துப் பிரிந்த தலைவன் தலைவியின் ஆற்றாமையை நினைத்து எடுத்த வினையை விரைவில் முடித்து மீண்டு வரும் நிலையைத் தலைவிக்கு எடுத்துக் கூறுதல் பாணர்க்கு உரியது. (தொ. பொ, 169 நச்.)

**பாணற்குத் தோழி வாயில் மறுத்தல்**

தலைமகனுக்கு வாயிலாசத வந்த பாணனிடம், ''பாணனே! தலைவி புதல்வற் பயந்த ஈன்றணிமையனள். மார்பில் பால் சுரப்பப் புதல்வனைத் தழுவிக்கொள்வதால் அவள்மார்பகம் முடை நாற்றம் வீசம். ஆதலால் ஊரனைப் பரத்தையர்சேரிக் கண்ணேயே கொண்டு செல்க. எம்மைத் தொழுது பயனில கூறாதே'' என்று தோழி வாயில் மறுத்தல். (நற். 380)

**பாணன் தலைவிக்கு கூறுதல்**

தலைவியால் மறுக்கப்பட்ட பாணன் தலைவன் சொன்னதை அவளிடம் எடுத்துரைத்தல். ''அன்னையே! புருவம் வளைய, உதடுகள் துடிக்க, என்மேல் எறிதற்குக் கற்களை எடுத்தல் வேண்டா! உன் கோபத்தைப் போக்கிக் கொள். நீ தலைவனை வாயில்மறுப்பது அழகன்று. உன்னைப் பல்லாண்டு வாழுமாறு வாழ்த்தி உன்னைச் சுற்றிவந்து வணங்குகிறேன்'' கோவை. 382) என்றாற் போலப் பாணன் தலைவியிடம் கூறுதல்.

**பாணன் தனக்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது**

''கார்காலத்து மழை பொழிய, தம்பலப் பூச்சிகள் ஊர, காட்டில் மானும் பிணையும் மகிழ்ந்து தாவ, பசுக்கள் கன்றுகளை நினைத்து ஊர்மன்று நோக்கி வரும் கார்கால மாலையிலும் தலைவர் நம்மை நினைக்சுவில்லை யெனின், நம்நிலை யாதாகும்?'' என்று வருந்திக் கூறிய தலைவி கூற்றை யுட்கொண்டு தலைவன் இருப்பிடம் நோக்கிப் புறப்பட்ட யான், அவனுடைய தேரினை வழியிலேயே கண்டு மகிழ்ந்தேன் (அகநா. 14) என்ற பாணன் கூற்று. (தொ. பொ. 169 நச்.)

**பாணன் புலந்துரைத்தல்**

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுக்கு வாயிலாக வந்த பாணன் தலைவி கோபத்திற்கு ஆளாகி வெருட்டப்பட்ட போது, அவன், ''அன்னையே! நீ என்னிடம் அளவு கடந்த சினத்தைக் காட்டுதல் வேண்டா. யான் நின் அடியிணையை வணங்கி விடை பெற்று வேற்றிடம் செல்கிறேன்'' என்றாற் போலத் தன் வாயில் பயன்படாது போயினமை குறித்து மனம் வாடியுரைத்தல். இதனை உணர்த்த உணரா ஊடற்கண், "வாயில் மறுக்கப்பட்ட பாணன் கூறல்'' என்ப.

**பாணன் வரவினைப் பாங்கி பழித்தல்**

தலைவன் பரத்தையிற் பிரிந்து வந்துழித் தலைவி ஊடல் கொள்ள, அதனைத் தணித்தற்குத் தலைவன் வாயிலாக வந்த பாணனிடம் தோழி, ''முன்பு தலைவன் எம் இல்லத்தில் உறங்குவான். அவனைக் காலையில் துயிலெழுப்புதற்குக் காலைமங்கலம் பாடப் பாணர்கள் வருவது வழக்கம். இப்பொழுது தலைவன் தனக்குப் புதல்வன் பிறந்த பிறகு பரத்தை

யில்லத்திலேயே இருப்பதால், இவ்வில்லத்தில் வந்து காலைமங்கலம் பாடும் தேவை இல்லாமல் போய்விட்டது'' (திருப்பதிக். 487) என்று பாணன் வருகை பயனற்றது என்று தோழி பழித்துக் கூறுதல்.

**பாணன் வரவு உரைத்தல்**

கற்புக்காலத்துப் பரத்தையிற்பிரிவில் தலைவனது பரத்தை மைக்கு வருந்தித் தலைவி நாணத்தொடு தனித்திருக்கவும், தலைவன் இல்லத்தில் இருப்பதாகக் ''கருதிப் பாணன் துயிலெழு மங்கலம் பாட வந்ததைக் கண்ட தோழி தலைவியிடம், ''இரவில் இரை தேடிப் பல இடங்களிலும் சுற்றும் வாவல் இரையைத் தேடும் கால மல்லாதபடியால் பகற்காலத்து வந்து தங்கியிருக்கும் மரம் போலிருக்கும் நம்மை அறியாது, விறலியும் பாணனும் நம் தலைவனுக்குத் துபிலெழு மங்கலம் பாட வந்துள்ளனர். என்று பாணன் வந்துள்ளமையைச் சாற்றுதல்.

**பாணணொடு வெகுளுதல்**

பரத்தையிற் பிரிந்து மீண்டு வந்த தலைவன் வாயில் வேண்டி நிற்ப, அவனுக்கு வாயிலாகப் போந்த தோழிக்கு வாயில் மறுத்த தலைவி, பாணன் வாயிலாக வர, அவன் பொய் யுரைகளைக் குறித்து அவனை இகழ்ந்து கூறித் தலைவனுக்கு வாயில் மறுத்தது. இதனை உணர்த்த உணரா ஊடலுள், 'பாணற்கு மறுத்துரை' என்று கூறுவர்.

**பார்த்து உறவு உரைத்தல்**

பாங்கியிற் கூட்டத்தில், தோழி தலைவனிடம் அவனது வேட்கை மிகுதியை நோக்கி உலகியல் முறைப்படி தலைவியை மணந்து எய்துமாற்றை எடுத்துக் கூறல் (குறிஞ்சி நடையியல்). தலைவி நீக்கிக் கூடிய தலைவன் தன்னுள்ளே சொல்லியது, ''நற்குணங்களும் தகுதியுடைய

தலைவரக்கும் தம் காதலியர் தம்மிடம் மிகவும் கடுமையாக ஊடுவதே இன்பம் பயப்பது.'' தான் நுகர்ந்த இன்ப மிகுதி ஊடலுக்குப் பின் நேர்ந்தது என்பதனால் புலவியைப் பாராட்டுகின்றான். (குறள் 1305)

**புலவி நுணுக்கம்**

புலவிக்கு நுண்ணிதான காரணமொன்று கற்பித்துக் கூறல். கற்புக் காலத்தில் தலைவனும் தலைவியும் ஒரு சேக்கையில் கூடியிருந்தவழி, தலைவனிடம் கோபம்கொள்ள ஒரு காரணமும் இல்லாத நிலையிலும், காதல் மிகுதலான் நுண்ணிதாகியதொரு காரணத்தைத் தேடிக் கண்டுபிடித்து அதனைத் தலைவன்மேல் ஏற்றிக் கூறித் தலைவி சிறுகோபம் கொள்ளுதல். நுணுக்கமான காரணத்தால் ஏற்பட்ட சிறு கோபம் 'புலவி நுணுக்கம்' எனப்பட்டது. (குறள். அதி, 132 பரிமே.)

**புனல் தரு புணர்ச்சியால் தோழி அறத்தொடு நிற்றல்**

நீர்வெள்ளத்தைத் தொடர்புபடுத்தித் தலைவிக்குத் தலைவனொடு கூட்டம் நேர்ந்ததாகத் தோழி செவிலியிடம் கூறுதல். ''அன்னாய்! நாங்கள் ஆற்றில் குடைந்து நீராடுங்கால், தலைவியை ஒரு நீர்ச்சுழி கொண்டோடி ஒளிக்க, எதிர் பாராமல் அங்கு வந்த தலைவன் கதுமென வெள்ளத்தில் பாய்ந்து சென்று அவளைத் துன்ப மொன்றும் நேராதவாறு தழுவிக் கொணர்ந்து கரை சேர்த்தான். தலைவி அவன் நினைவாகவே உள்ளாள்'' (தஞ்சை. கோ. 301) என்பது போன்ற தோழி கூற்று.

**புனல் விளையாட்டில் தம்முள் உரைத்தல்**

கற்புக்காலத்தில், தலைமகனது புறத்தொழுக்கம் காரணமாக அவனுடன் புனலாடிய, பரத்தையர் தோழியர், அப்பரத்தையரை விளித்து,

“நம்மை விடப் பேரழகுடைய ஒருத்தி வந்து தலைவனைத் திரித்துக் கொள்ளக் கொடுத்துப் பின் வருந்தாது தலைவனை முன்னுறக் காப்போம்” எனத் தம்முள் கூறிக் கொள்வது.

**புனலாட்டுவித்தமை கூறிப் புலத்தல்**

தலைவன் பரத்தையிற் பிரிந்து வந்து தலைவியை வாயில் வேண்டிப் பெற்று அவளொடு பள்ளியிடத்தானாக, தலைவி, “நீ செய்த ஏனைய பிழைகளைப் பொறுக்கலாம். பலரும் அறியப் பரத்தை யொருத்தியைப் புதுப்புனலாட்டி வந்து ஒன்றும் அறியாதாய் போல நடிக்கும் செயல் பொறுக்க வொண்ணாதது” என்று பரத்தையைப் புனலாட்டுவித்த செய்தியைக் கூறிப் புலவியுறுதல்.

**புனைந்தது நினையல்**

தலைவியின் குலைந்த ஒப்பனைகளை அவள்தோழி புனையுமாறு புனைந்ததாகத் தலைவன் நினைத்து அவளிடம் கூறுதல், தோழியிற் கூட்டத்தினால் எய்திய பகற்குறிக்கண். தலைவன் தலைவியைக் கூடிய பின்னர் அவளுடைய குலைந்த ஆடை அணிகளைத் திருத்தி, “அழகிய மாலையை அணிந்தவளே! கலங்காதே. பிறர் சிறிதும் ஐயுறாத வகையில், நின்காதல் தோழி நினக்கு அணி செய்யுமாறு போலவே நின் இயற்கை வனப்புக்குப் பேரழகு செய்யும் வகையில் நின் ஆடை அணிகளைச் சிறந்த முறையில் திருத்தி அழகு செய்துள்ளேன்” என்று அவள் கவலை தீரக் கூறுதல்.

**புனைந்துரை**

1. மிகைப்படுத்தி அழகுறச் சொல்லும் வாசகம். 2. பாயிரம் உலகியலை ஒட்டியும் ஒட்டாதும் கற்பனை செய்து கூறுவது புனைந்துரை.

அ.்.து உள்ளோன் தலைவனாக உள்ளது புணர்த்தலும், உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தலும், இல்லோன் தலைவனாக உள்ளது புணர்த்தலும் இல்லோன் தலைவனாக இல்லது புணர்த்தலும் என நான்கு வகைப்படும்.

இப்புனைந்துரை நாடகத்துக்குப் பயன்படுவது) நாடக உறுப்புப் பதினான்கனுள் ஒன்றாகிய 'யோனி' என்னும் உறுப்பால் குறிப்பிடப்படும் செய்தியாகும். தொ. பொ. 3 நச்.) (கணேசய்யர்அடிக.) புலனெறி வழக்கமாகிய செய்யுள் வழக்கத்திற்குப் புனைந்துரை பற்றிய செய்திகளை இணைத்துக் கொள்வதும் இன்றியமையாதது.

வாயில் புதல்வனை விளையாட்டை விரும்பின உள்ளத்தொடே, புதுவது புணர்ந்த பரத்தையர் தன்மாட்டு மனம் நெகிழ்ந்த மென்மையின்பொருட்டு அவர்க்கு அருள் செய்யப் பிரிந்து வந்தோனை, தனது தனிமை மிகவும் அறிவித்து, அவன்மேற் சென்ற நெஞ்சினைச் செல்லாமல் அவனிடத்தினின்று மீட்டு அருகப் பண்ணி, பிறருள் ஒருத்தியைக் காணாள் ஆயினும் கண்டாள் போலத் தன் முன்னர்ப் பெய்துகொண்டு, வாயில் மறுத்ததனான் தோன்றிய நயனுடைமைக்கண் தலைவி கூற்று நிகழும் என்பது. எனவே, மறுப்பாள் போல நயந்தாளாயிற்று.

''ஊரனே! நீ உன்பரத்தையை விடுத்து விழாக்காலத்தில் ஆடிய மகளிரொடு தங்கியிருந்தது கேட்டு அவள் கோபம் கொண்டாள் போலும். தன் முகத்தின் செயற்கை அழகு கெட அழுது ஏங்கித் தன் விரலைப் பலகாலும் திருகிக்கொண்டு, பற்களைக் கடித்ததனால் அவை நுனி மழுங்க, ஊர் முழுதும் நின்னைத் தூற்றிக்கொண்டு அலைகிறாள். அவளைக் காணச் செல்வாயாக'' என்று தலைவி கற்பனையாகத் தலைவனிடம் கூறுதல்ளூ ''அவளுக்கு, என்னைப் போலப் புதல்வனைப் பெற்றுக் கொண்டு பெரிய

மனைக்கண் உன்னையின்றியும் வருவிருந் தோம்பி இல்லறம் நடத்தும் கடமையில்லையே!'' என்றல். (அகநா. 176)

''தோழி! தலைவரைப் புலத்தல் கூடுமோ? ஒரு காலத்தில் என்னைத் தழுவுதலில் விருப்பம் கொண்டார்; இப்பொழுது நான் அவரைத் தழுவ இருப்பினும், புதல்வர்க்குப் பால் கொடுக்கும் நிலையிலிருக்கும் நான் தழுவின், தம் மார்பில் பால்பட்டு விடும் என அஞ்சுகிறார்.

நம்மைத் தழுவுதலை நீத்துவிட்டார் என்பதனை உட்கொண்டு, வந்த தலைவரிடம், ''உமக்கு ஏற்றவர் பரத்தையரே; என்புதல்வன் என்னிடம் அன்புடையன்; நான் அவனிடம் செல்கிறேன்'' என்று மெல்ல அவனிடம் சென்றேன். "மகனிடம் எனக்குமாத்திரம் ஆசையில்லையா? என்று கூறித் தலைவர் ''என் முதுகினைத் தழுவ, பல காலம் உழப்பட்ட வயலில் மழைநீர் பெய்வதால் மண் நெகிழ்வதுபோல, என் நெஞ்சு அவரிடம் ,நெகிழ, புலத்தலை விடுத்து அவர்கூட்டத்துக்கு உடன்பட்டேன்'' என்று தோழியிடம் கூறல். (அகநா, 26)

**பாடினி பாணற்கு உரைத்தது**

''மூட்டுவாய் நன்கு அமைந்த செப்பில் இடப்பட்ட பூப்பயன்படாமல் வாடுவது போல, இல்லத்தில் தனித்திருந்து வருந்தும் தலைவி, தலைவனது கொடுமையை நம்முன் சொல்வதற்கு நாணமுற்றுத் தன் உடல் மெலிவிற்கு வேறு காரணங்கள் கூறுகிறாள். ஆதலின், அவள் கற்புக்கடம் பூண்ட பெருமையள்" (குறுந்.9) என்ற பாடினி கூற்று. "அகம்புகல் மரபின் வாயில்கள் எனப் பட்டாருள் பாடினியும் ஒருத்தி, (தொ. பொ. 150 இள.).

## தொகுப்புரை

கற்பிற்குரிய பொருள் விளக்கம், கற்பு காலத்தில் வினைமுற்றி தலைவன் வர காலம் தாழ்த்தியதை எண்ணி தலைவி வருந்தும் நிலையும், தலைவி வருந்தும் நிலையைக் கண்டு தோழி ஆற்றுவிக்கும் முறையையும் உணரமுடிகிறது.

சங்ககாலப் பெண்கள் முதல் இன்று உள்ள பெண்கள் வரை தங்கள் கணவனை ஒழுக்கமுடையவனாகவும் சுற்புடையவனாகவும் இருக்க வேண்டும் என விரும்புகிறார்கள்.

தொல்காப்பியத்திலும் உரையாசிரியர் குறிப்புகளிலும் கற்பை நிகழ்த்தும் முறையும் கற்புகால நிகழ்வுகளும் குறிப்பிடப்படுகின்றதே அன்றிக் கற்புக்கான தெளிவான வரையறை கூறப்படவில்லை.

கற்பு என்பது ஆண்களின் மேலாதிக்கத்தால் பெண்கள் மீது திணிக்கப்பட்ட கட்டுப்பாடு என்பதை அகநானூற்றுச் சான்றுகள் வழியாகவும் புறச்சான்றுகள் வழியாகவும் விளக்கப்பட்டுள்ளது.

காதலித்தோரை வஞ்சித்தலும் மணந்தோரைக் கைவிடுதலும் போன்ற அவல நிலைகள் தழைத்தோங்கியதால் கரணச சடங்குகள் தோன்றுவதற்கு அடிப்படையாய் அமைந்ததை இலக்கண, இலக்கிய சான்றுகள் விளக்கப்பட்டுள்ளது.

கற்பிற்குரிய பொருள் விளக்கம், கற்பு காலத்தில் வினைமுற்றி தலைவன் வர காலம் தாழ்த்தியதை எண்ணி தலைவி வருந்தும் நிலையும் தலைவி வருந்தும் நிலையைக் கண்டு தோழி ஆற்றுவிக்கும் முறையையும் உணரமுடிகிறது.

கணவனைப் பிரிந்திருக்கும் காலத்தில் பெண்கள் தங்கள் உணர்வுகளைக் கட்டுப்படுத்தி ஆற்றியிருத்தல் வேண்டும் என்ற கட்டுப்பாடுகளைக் கடைப்பிடித்தலே கற்பு என்பதை வலியுறுத்தியும் கற்பு என்பது தெய்வத்தன்மை பொருந்தியது, நாணம் நிறைந்தது என்று விதிக்கப்பட்டிருந்ததை உணரமுடிகிறது.

திருமணத்திற்குப் பிறகு கணவன் பரத்தைமை ஒழுக்கத்தை மேற்கொண்டாலும் தலைவி அவனை வெறுத்து ஒதுக்கியது இல்லை என்பதை அறியமுடிகிறது.

சங்க இலக்கியங்களில் தலைவியின்பால் அன்புகொண்ட தோழி தலைவனுக்கு வாயில் மறுப்பதாக அமைகிறது. இல்லற நெறிக்குப் புறம்பான புறஒழுக்கத்துக்கு எதிர்ப்புக் குரலாகவே வாயில் மறுத்தல் துறை அமைந்துள்ளது.

ஒத்த அன்புடைய தலைவன், தலைவி உறவு சிறந்ததாகும். அவர்களிடையே ஊடல் ஏற்பட்டால் அதனைத் தீர்க்க துணை செய்வோரை ‘‘வாயில்கள்““ என்கிறார் தொல்காப்பியர்.

தலைவனுக்கு தன் அன்பைப் பரிமாறுகிற தலைவியை திருமணம் வாழ்வில் பெறுகின்ற சிறப்பினையும் எடுத்துக கூறுகிறார்.

தோழி முதலான கண்டோர் வரையிலான வாயில்கள் பணியும் அவர்களின் பேச்சும் சிறப்பாக கூறப்படுகிறது.

தலைவனிடம் என்னென்ன பேச வேண்டும் என்பதனையும், அன்பும், கிழவோன் மேற்கொண்ட பரத்தமை ஒழுக்கமும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

தலைவனை எதிர்த்துப் பேசும் உரிமையும், தலைவன் தலைவியின் மீது வாயில்கள் கொண்ட அன்பும் வெளிப்படுகிறது.

ஊடல் தீர்க்க வந்த வாயிலாகத் தன்னை ஏற்க வேண்டுதல், இசைவு பெறுதல், தலைவியின் ஊடல் தீர்த்தல், அவள் அழகு அழிந்தமை கண்டு கலங்குதல், தலைவனிடம் சென்று தலைவி சொல்லிய செய்தியை உரைத்தல் தலைவன் மீண்டு வருவதைத் தலைவிக்குச் சொல்லுதல், தலைவன் வரவு அறிந்த தலைவி அழகு பெற்றதை அறியார் போல வினவுதல் முதலியன பாணரின் செயல்களாகும்.

கணவனைப் பிரிந்திருக்கும் காலத்தில் பெண்கள் தங்கள் உணர்வுகளைக் கட்டுப்படுத்தி ஆற்றியிருத்தல் வேண்டும் என்ற கட்டுப்பாடுகளைக் கடைப்பிடித்தலே கற்பு என்பதை வலியுறுத்தியும் கற்பு என்பது தெய்வத்தன்மை பொருந்தியது, நாணம் நிறைந்தது என்று விதிக்கப்பட்டிருந்ததை உணரமுடிகிறது.

திருமணத்திற்குப் பிறகு கணவன் பரத்தைமை ஒழுக்கத்தை மேற்கொண்டாலும் தலைவி அவனை வெறுத்து ஒதுக்கியது இல்லை என்பதை அறியமுடிகிறது.

## சான்றெண் விளக்கம்

1. குறள். 54.
2. கொன்றை வேந்தன், பா. 22.
3. தொல்.பொருள். நூ. 51.1.
4. கலி.பாலை. பா. 1:9-10.
5. மேலது பா. 16:20.
6. குறிஞ்சி பா. 3:15-19.
7. கலி.பாலை. பா. 1-17.
8. மேலது., பா. 1-21.
9. தொல்.பொருள்.கற். நூ. 140.
10. மேலது.,செய். நூ. 179.
11. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 108.
12. தொல்.பொருள்.களவு. நூ. 89.
13. மேலது.,கற்பு. நூ. 140
14. கலி. பாலைக்கலி. பா. 15:19-22.
15. அகம். பா. 184.
16. மேலது., பா. 314.
17. குறள். 56.
18. பாலைக்கலி, பா. 1:21-22.
19. அகம். பா. 5.

20. மு. வரதாரசனார், முல்லைத்திணை, பக். 8-9.

21. அகம். பா. 139.

22. மேலது., பா. 229.

23. மேலது., பா. 217.

24. மேலது., பா. 147.

25. தொல்.பொருள்.களவு. ப. 22.

26. அகம். பா. 34.

27. ந.சி. கந்தையாப்பிள்ளை, பெண்கள் உலகம், ப. 83.

28. மேலது., ப. 118.

29. குறள். 51.

30. காசி காண்டம், பா. 4:45.

31. நீதிவெண்பா (வேறு தகவல் இல்லை).

32. சோ. இலக்குமிரதன் பாரதி, நமது சமூகம், பக். 153-154.

33. நற். பா. 142.

34. அகம். பா. 114.

35. மேலது., பா. 274.

36. மேலது., பா. 151.

37. மேலது., பா.ா. 53.

38. மேலது., பா. 299.

39. நற்றிணை, பா. 151:5-12.

40. மேலது., பா. 13:5-9.

41. மேலது., பா. 318:5-9.

42. அகம். நூ. 221.

43. எங்கெல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப. 106.

44. க. கிருட்டினசாமி, கூட்டமும் திருமணமும், ப. 55.

45. மேலது., பா. 54.

46. ஐங்குறு. பா. 280.

47. மேலது., பா. 399.

48. மேலது., பா. 406.

49. அகம். பா. 282.

50. ந. சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப. 268.

51. அகம். பா. 316.

52. எங்கெல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப. 106.

53. அகம். பா. 66.

54. குறள். 315.

55. குறுந். பா. 167.

56. தொல். கற்பியல். நூ. 52.

57. நம்பி.அக. நூ. 39.

58. மேலது., நூ. 62.

59. இறை.அகப்.தூது. நூ. 35.

60. தொல்.பொருள். நூ. 99.

61. மேலது., நூ. 1098.

62. மேலது., நூ. 1101.

63. மேலது., நூ. 1103,1104.

64. ஔவையார் பாடல்கள், பக். 25.

65. தொல்.பொருள். நூ. 1111-1117.

66. தொல்.பொருள். நூ. 1123-1125.

67. தொல்.பொருள். நூ. 1128.

68. தொல்.கற்பு. நூ. 52.

69. நற்றிணை, பா. 120.

70. மேலது., பா. 280.

71. களவு. நூ. 99.

72. குறுந். பா. 70.

73. தொல். பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்.

74. நம்பியகப்பொருள். நூ. 200.

75. முத்துவீரியம், நூ. 853.

76. மாறன் அகப்பொருள், நூ. 225.

77. குறள். 1158.

78. மேலது., 1169.

79. மேலது., 1231.

80. மேலது., 1261.

81. நம்பியகப்பொருள், நூ. 68.

82. ஐங். பா. 155.

83. குறுந். பா. 196.

84. அகம். பா. 109.

85. மேலது., பா. 78.

86. குறுந். பா. 295.

87. தொல்.கற்பு. நூ. 14.

88. தொல்.பொருள். நூ. 49.

89. குறுந். பா. 139.

90. தொல்.கற்பு. நூ. 9.

91. குறுந். பா. 354.

92. ஐங். பா. 84.

93. அகம். பா. 129.

94. குறுந். பா. 176.

95. அகம். பா. 312.

96. குறுந். நூ. 10.

97. மேலது., பா. 9.

98. மேலது., பா. 309.

99. அகம். பா. 34.

100. கலி. பா. 8.

101. நற். பா. 11.

102. மேலது., பா. 283.

103. கலி. பா. 68.

104. தொல்.கற்பு. நூ. 7.

105. தொல்.பொருள். நூ. 1139.

106. மேலது., நூ. 1098.

107. மேலது., நூ. 1101.

108. மேலது., நூ. 1103, 1104.

109. மேலது., நூ. 1111-1117.

110. மேலது., நூ. 1123-1125.

111. தொல்.பொருள். நூ. 1128.

112. தொல்.பொருள்.நச். நூ. 169.

## இயல்-4

# வாயில்களின் போக்கும் நெறிகளும்

**முன்னுரை**

சங்க இலக்கியம் வாழ்வியல் கூறுகளை அடிப்படையாகக் கொண்டுள்ளதால் அவற்றுள் உளவியல் கூறுகளையும் நாம் மிகுதியாக காணமுடிகிறது. வாழ்வில் எதிர்க்கொண்ட சிக்கல்களில் உருவான ஒரு மனநிலையின் எதிரொலியாகவே அகத்திணையும் புறத்திணையும் அமைகின்றன.

சங்க இலக்கியத்தில் இடம்பெறும் அகமாந்தர்கள் தோழி,தலைவி, தலைவன், தாய், செவிலி, பரத்தை போன்றோர்கள் வாயில்கள் என அழைக்கப்படுகின்றனர். இவர்கள் கூற்றாலும், கூற்றை முன்னிலைப்படுத்தும் இடத்திலும் கூறவேண்டிய இடத்தில் கூறாமல் அதை மனதிற் கொள்ளும் இடத்திலும் உணர்த்தி நிற்கின்றனர்.

**வாயில்கள்**

அன்பின் ஐந்திணைக்கு உரியவராகிய அகவொழுக்கத்தை மேற்கொண்டவர்கள் முதன்மையானவர்களுள் தலைவன் தலைவி ஆகிய இருவர் ஆவர். அவ்விருவருக்கும் உதவி செய்பவரை வாயில்கள் என்றும் அழைப்பர். இவர்களை மூன்று வாயில்களாகப் பிரிப்பர். அவை,

1) உயர்ந்த வாயில் - அறிவர், செவிலித்தாய்

2) ஒத்த வாயில் - தோழி, பாங்கன்

3) தாழ்ந்த வாயில் - இளையோர், கூத்தர், விறலியர்

என்பனவாம்.

1) **உயர்ந்த வாயில்கள்**

வாயில்களுள் உயர்ந்த வாயில்களாக அறிவர் மற்றும் செவிலித்தாய் ஆகிய இருவரும் இடம் பெறுகின்றனர்.

**அறிவர்**

அறிவர் என்பவர் முக்காலத்தையும் அறியும் ஆற்றல் கொண்டவராக விளங்குகிறார். இவரைத் தொல்காப்பியர்,

''மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன்''[1]

என்று குற்பிப்பிடுகிறார். தலைவன் மற்றும் தலைவிக்கு அறிவுரை கூறுபவராக 'அறிவர்' இடம்பெறுகிறார். கற்பு முதலிய நல்லவற்றைக் கற்பித்து தீயவற்றை கடிந்தும் கூறுவர். தலைவன் தலைவியரது ஏவலைச் செய்து முடிப்பர்.

அறிவரின் உரிமையைக் குறித்து நம்பியகப்பொருள்

''அறவர் கிழவோன் கிழத்தியென் றிருவர்க்கும்
உறுதி மொழிந்த உயர்பொருள் குரவர்''[3]

என்று குறிப்பிடுகிறது.

**செவிலித்தாய்**

தலைவி பிறந்து முதல் அவளை சிறப்பாக வளர்த்து வருபவள் செவிலித்தாய் ஆவாள். இவள் நற்றாய்க்குத் தோழியாக இருப்பவள். இதனையே,

"செவிலி நற்றாய் தோழியாகி
அவல நீக்கி அறிவும் ஆசாரமும்
கொளுத்தித் தலைவியை வளர்த்த தாயே"[4]

என்று நம்பியகப்பொருள் குறிப்பிடுகிறது.

"ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளர்த்தலின்
தாய் எனப் படுவாள் செவிலியாகும்"[5]

என்றும்,

"கழிவினும் நிகழ்வினும் எதிர்வினும் வழிகொள
நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்
செவிலிக் குரிய ஆகும் என்ப"[6]

என வரும் நூற்பா செவிலித்தாயைப் பற்றிப் பேசுகிறார் தொல்காப்பியர்.

செவிலித்தாயானவள் தலைவியைப் பாதுகாப்பதில் முக்கியத்துவம் பெறுகின்றார். தலைவியின் களவு ஒழுக்கத்தைத் தோழியின் வழி அறிந்துக் கொள்கிறாள்.

**2) ஒத்த வாயில்**

தலைவன், தலைவிக்கு வாயில் செல்பவர்களுள் ஒத்த வாயில்களாக தோழி மற்றும் பாங்கன் செயல்படுகின்றனர்.

**தோழி**

தோழியானவள் தலைவன் தலைவியின் காதல் வாழ்க்கையில் பெரும் பங்கு புரிகிறாள். அகப்பாடல்களில் தோழி உயிர்நாடியாக விளங்குகிறாள். இதனை,

“யாமே

பிரிவின் றியைந்த துவரா நட்பின்

இருதலைப் புள்ளின் ஓர் உயிரம்மே”[7]

என்று குறிப்பிடுகிறது தொல்காப்பியம்.

தலைவியினுடைய செயல்கள் அனைத்தையும் நன்கு அறிந்தவளாக தோழி விளங்குகிறாள். தன்னலம் சிறிதுமின்றி தலைவன் தலைவியரது நலத்தையே பெரிதும் கருதுகிறாள். மேலும், தலைவியின் களவு நெறியில் அளவுடன் குறியிடங்களை ஏற்படுத்தித் தலைவன், தலைவியைச் சந்திக்கும் வாய்ப்புகளைத் தருகிறாள். தோழி இல்லாமல் தலைவன், தலைவி சந்திப்பு நடைபெறாது. மேலும், தொல்காப்பியர் தோழியைப் பற்றிக் குறிப்பிடும்போது, ‘தோழிதானே செவிலி மகளே’ (மேலது, களவு. நூ.35) என்று குறிப்பிடுகிறார்.

**பாங்கன்**

பாங்கன் என்பவன் தலைவனுக்குத் தோழனாக இருப்பவன் ஆவான். தலைவன் களவு ஒழுக்கத்தில் இருக்கும்போது அவனுக்கு உற்ற துணைவனாக இருந்து கொண்டு அவனுக்கு உதவி புரிபவன். இடந்தலைப்பாட்டிற்கு அடுத்ததாகத் தலைவியுடன் நிகழும் கூட்டம் இவன் துணையாலே நிகழ்கிறது. தலைவியைச் சந்தித்து அவளுடன் இருந்து ஒழுகும் ஒழுகத்தால் அவன் உடலில் காணும் சில தோற்ற வேறுபாடுகளைக் கண்டு அதற்குரிய காரணத்தை வினவுகிறான்.

தலைவனை பாங்கன் இடித்துரைக்கும் உரிமை பெற்றவனாக விளங்குகிறான். இதனை,

"குற்றறு காட்டிய வாயில் பெட்டானும்"[8]

எனவரும் தொல்காப்பிய வரியால் பாங்கன் வினவுதலும் தலைவன் உரைத்தலும் போன்ற உரிமைகள் பெறப்படுகின்றன. இடித்துரைக்கும் உரிமையை,

"மொழிஎதிர் மொழிதல் பாய்தற் குயத்தே"[9]

எனவரும் தொல்காப்பிய நூற்பாமூலம் பாங்கனின் செயல்பாட்டினை வலுசேர்க்கிறது.

**3) தாழ்ந்த வாயில்**

வாயில்களுள் தலைவன் தலைவிக்கு தாழ்ந்த வாயில்களாக இளையோர், கூத்தர் மற்றும் விறலியர் இடம்பெறுகின்றனர்.

**(i) இளையோர்:**

இளையோர் என்பவர் தலைவன் தலைவிக்கு ஏவலாக இருந்து வருபவர் ஆவர்.

"ஆற்றது பண்பும் கருமத்து வினையும்
ஏவன் முடியும் வினாவும் செப்பும்
ஆற்றிடைக் கண்ட பொருளும் இறைச்சியும்
தோற்றம் சான்ற அன்னவை பிறவும்
இளையோர்க் குரிய கிளவி என்ப"[10]

எனவரும் நூற்பாவில் இளையோருக்குரிய கூற்றுகளாகத் தொல்காப்பியர் எடுத்துரைக்கிறார். மேலும், இளையோருக்குமான செயல்களாக தொல்காப்பியர்,

"உழைக்குநற் தொழிலும் காப்பும் உயர்ந்தோர்
நுடக்கை யெல்லாம் அவர்கட் படுமே"[11]

என்று இளையோரின் செயல்பாடுகளைக் குறிப்பிடுகிறார்.

**(ii) கூத்தர்**

கூத்தர் என்போர் தலைவனுக்கு இன்றியமையாத கூற்று நடத்தும் ஆண்கள் ஆவர். இவர்கள் தலைவன் தலைவியின் கற்பு நெறியில் வாயில்களாகச் செயல்படுபவர்கள். இதனை தொல்காப்பியர்,

"தொல்லவை உணர்தலும் நுகர்ச்சி ஏத்தலும்
பல்லாற்றானும் ஊடலில் தணித்தலும்
உறுதிகாட்டலும் அறிவுமெய் நிறுத்தலும்
ஏதுவின் உரைத்தலும் துணியக் காட்டலும்
அணிநிலை உணர்தலும் கூத்தர் மேன"[12]

எனவரும் நூற்பாவில் கூத்தருக்குரிய செயல்பாடுகளைக் குறிப்பிடுகிறார்.

**(iii) விறலியர்**

விறலியர் என்பவர் ஆடல் பாடல் நிகழத்தும் பெண் ஆவர். பாடல் பாடுவோரைப் 'பாடினி' என்றும், அரங்கில் நடிப்போரை 'விறலியர்' என்றும் அழைப்பதுண்டு.

தலைவனைப் பரத்தையிடம் பாணன் சேர்ந்ததால் எவ்வாறு இகழ்ச்சிக்கு உள்ளாக்கப்பட்டானோ, அதே அளவில் விறலியும் இகழ்ச்சிக்கு உள்ளாக்கப்படுகிறாள். தலைவியின் ஊடலைத் தீர்க்க தலைவனால் வாயிலாக அனுப்பப்பட்ட விறலியைப் பார்த்து தோழி தன் சுற்றத்தாரிடம்,

அழகிய கூந்தலையும் பருத்த தோளினையும், வெண்மையான பற்களையும், கொண்ட விறலி தனக்கு நிகரானவர் யாரும் இல்லை என்று கூறுவதற்கேற்ப அழகினையுடைய விறலியைப் பாருங்கள். மலையனது வேலுக்கு பயந்து பகைவர் ஓடியதைப் போல நம் தலைவனைப் பரத்தையரிடம் சேர்க்கும் விறலியிடமிருந்து தலைவனைப் பாதுகாப்போம். இல்லையெனில் அவனது எண்ணம் ஈடேறிவிடும் என்று தோழி விறலியை இகழ்ந்து கூறி வாயில் மறுக்கிறார். இதனை,

''மடக்கண், தகரக் கூந்தல், பணைத்தோள்
வார்ந்த வால் எயிற்று, சேர்ந்து செறி குரங்கின்
பிணையல் அம்தாழ தைஇ, துணையிலன்
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
பன்மையது எவனோ இவள் நன்மை தலைப்படினே''[13]

என்ற அடிகள் மூலம் அறிய முடிகிறது.

**நற்றிணையில் வாயில்கள்**

நற்றிணை எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாக விளங்குகிறது. இது 9 அடி முதல் 12 அடிகள் வரை 400 பாடல்களைக் கொண்டுள்ளது. நற்றிணையை பாண்டியன் பன்னாடு தந்த மாறன் வழுதி என்பவன் தொகுப்பித்துள்ளான். இந்நூலில் அமைந்துள்ள பாடல்கள் அனைத்தும் அகப்பொருள் கொண்டு விளங்குகிறது. அரசர்கள், ஊர்கள், பண்டைய பழக்கவழக்கங்கள், வணிகக்குறிப்புகள், தொழில் வகைகள் போன்ற செய்திகள் இடம் பெற்றுள்ளன.

நற்றிணையில் வாயில்களுக்குரிய பாடல்கள் 23 பாடல்கள் காணப்படுகின்றன. அவற்றுள் வாயில் மறுத்தல் பாடல்களாக பாடல் எண்.

50, 74, 90, 127, 167, 170, 217, 230, 269, 289, 300, 360, 380 என பாடல்கள் அமைந்துள்ளன.

**தலைவியின் மனம்**

நற்றிணையில் 'ஓரம் போகியார்' எனும் புலவர் பாடிய பாடல் தலைமகன் பரத்தையரை பிரிந்து மீண்டும் இல்லத்திற்கு செல்கிறான். அப்போது தோழி தலைவிக்கு வாயிலாக இருந்து கூறுகிறாள். இதனை,

"ஐய குறுமகள் கண்டிரும், வைகி
மகிழ்நன் மார்பில் துஞ்சி அவிழ்கிணர்த்
தேம்பாய் மராஅம் கமழும் கூந்தல்
துளங்குஇயல் அசைவரக் கலிந்தும் துயல்வரச்
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
பழம்பிணி வைகிய தோள் இணைக்
குழைந்த கோதை கொடிமுயங் கலளே"[14]

எனவரும் பாடலில், பரத்தையின் பிரிவைப் பற்றி பேசுகிறது.

தலைவனுடைய காதல் பரத்தையானவள் அவனது மார்பில் படுத்துறங்குகிறாள். பலவகை அணிகலன்களையும் அணிந்து கொண்டு இத்தெருவில் சென்றாள். அவள் சென்ற காட்சியானது, வண்டுகள் மொய்க்கும் பூக்களை அணிந்துக் கொண்டும், இடையில் கட்டிய உடை சரியவும், கண்களால் அங்கும் இங்கும் பார்த்தபடி சென்றாள். இத்தகைய இளம் பருவம் எய்திய பரத்தையை நான் கண்டேன். அவள் உன்னோடு நீடு வாழ்வாளாக என்று தலைவி கூறுகிறாள்.

**பாணன் வாயில் மறுத்தல்**

சங்க காலத்தில் 'பாணன்' சமூகம் என்பவனவற்றுள் பல்வேறு சமூகக் குழுக்கள் இருந்து வந்துள்ளன. பாணர் தொடங்கி அகவுநர் வரை

இக்குழுக்கள் ஒரே குடிநிலையில் காணப்பட்டன. பாணன் சமூகத்திற்கான அறிவுத்திறன், அவர்களிடம் உள்ள இசைக்கருவிகள், அவருடைய சுற்றத்தாரின் எண்ணிக்கை, பாடினி, விறலி போன்ற பெண்பாற் கலைஞரின் ஆட்டத்திறன், அவருடைய புரவலர்கள் முதலிய கூறுகளை முன்வைத்து அவருடைய சமூகக் குழுவில் அவருக்கான சமூக அடுக்கமைவு வரையறை செய்யப்பட்டது.

"துடிய பாண பாடுவல் விறலி"[15]

"துத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்"[16]

எனவரும் பாடலடிகள் பாண் சமூகத்தாரின் துல்லியமான வேறுபாடுகளைச் சுட்டுகின்றன.

'இளங்கடுங்கோ' எனும் புலவர் பாடிய பாடல் தோழி பாணற்கு வாயில் மறுத்ததாக அமைந்துள்ளது. தொல்காப்பியர் குறிப்பிடும் வாயிலுக்குரியவர்களில் பாணரும் இடம் பெற்றுள்ளனர்.

"அறியாமையின் அன்னை அஞ்சிக்
குழையன் கோதையன் குறும்பைந் தொடியன்
விழவுஅயர் துணங்கை தழுஉகஞ் செல்ல
நெடுநிமிர் தெருவில் கைபுகு கொடுமிடை
கேட்போர் உளர்கொல் இல்லைகொல் போற்றுஎன
யாணது பசலை என்றனன் அதன்எதிர்
நாண்இலை எலுவ என்று வந்திசினே
… … … … … … … … … … … … … … … … … …
சிறுமை பெருமையின் காணாது துணிந்தே"[17]

பாணன் தோழியைப் பார்த்து, மணம் கமழும் நெற்றியை உடைய பெண்ணே! காதில் கடுக்கனும், கழுத்தில் மாலையும் அணிந்துக் கொண்டு 'துணங்கை'

எனும் கூத்தினை ஆடினாய். தலைவனை, எங்கள் அறியாமையால் உன்னிடத்தில் இருந்து பிரிக்க முற்பட்டோம். தலைவன் அறியாமை மிகுந்தவன் போல என்னிடத்து நெற்றியில் உண்டான பசலை அழகாக உள்ளது என்று கூறினாள். தலைவன் பகைவராலும் விரும்பப்படும் பெருமை உடையவன் என்று கூறாமல், நீ நாணமற்றவன் என்று என் சிறுமை பண்புப் பெரிதாதலால் என கூறிவந்தேன்.

**விருந்தோம்பல் வாயில்**

தமிழர்களின் பண்பாட்டில் விருந்தோம்பலுக்கு தனிச்சிறப்புண்டு எனலாம். விருந்தோம்பலின் உயர்வை 'மருந்தே ஆயினும் விருந்தோடுண்' என்று ஔவை குறிப்பிடுவார். பழந்தமிழ் நூல்களுள் அக இலக்கியங்கள் விருந்தோம்பலைப் பற்றி பேசுகின்றன. இதனை,

''விருந்தே தானும் புகுவது
புனைந்த யாப்பின் மேற்றே''[18]

என்று குறிப்பிடுகிறது தொல்காப்பியம்.

விருந்தோம்பல் என்பது இல்லம் தேடிவரும் புதியவர்களை இனிய முகத்துடன் வரவேற்று இன்பச்சொற்களைக்கூறி உபசரிக்க வேண்டும். இதனை,

''அல்லி லாயினும் விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின்
மெல்லிய குறுமகள்''[19]

என்று நற்றிணை பாடல்வழி அறியமுடிகிறது.

நற்றிணையில் (மாங்குடி கிழார்) எனும் புலவர் பாடிய,

“தடமருப்பு எருமை மடநடைக் குழவி
தூண் தொறும் யாத்த காண்தகு நல்இல்
கொடுங்குழை பெய்த செழஞ்செய் பேழை
சிறுதாழ் செறித்த மெல்விரல் சேப்ப
… … … … … … … … … … … … … … … … … …
… … … … … … … … … … … … … … … … … …
எமக்கே வருகதில் விருந்தே! சிவப்பு அன்று
சிறியமுள் எயிறு தோன்ற
முறுவல் கொண்ட முகம்காண் கம்மே”[20]

தலைவியின் வளைந்த கொம்பினையுடைய எருமையின் கன்றுகள் தூண்களில் கட்டப்பெற்று உணவு வைக்கப்பட்டுள்ளன. தலைவியானவள் மென்மையான கைகளில் மோதிரம் அணிந்துக்கொண்டு விரல் சிவக்கும்படி வாளை மீனை உண்ணும் வகையில் பொடிப் பாடியாக நறுக்கினாள். மேலும், தலைவியின் கண்கள் புகைச்சலாலும் உணவு சமைப்பதால் சோர்வாலும் காணப்படுகிறாள்.

இவ்வாறு இருக்கும் தலைவி தலைவனோடு ஊடலில் இருக்கின்றாள். அவ்வாறு இருக்கும் நேரத்தில் வீட்டிற்கு வரும் விருந்தினர்களை சினம் தணிந்து வருக! வருக! என்று வரவேற்கிறாள். அதுமட்டுமல்லாமல் முள் போன்ற பற்கள் தோன்றப் புன்னகையும் செய்கிறாள். இப்பாடலின் வழி இல்லறத்திற்கு வரும் விருந்தினர் வாயிலின் வழியாக அறியமுடிகிறது.

**தோழி வாயில் நேர்தல்**

‘நல்வேட்டனார்’ எனும் புலவர் பாடிய பாடலில் தோழி வாயிலுக்கு நேர்கிறாள்.

“அரிகால் மாறிய அம்கண் அகல்வயல்
மறுகால் உழத ஈரச் செறிவின்‘
வித்தொடு சென்ற வட்டி பற்பல
மீனொடு பெயரும் யாணர் ஊர
… … … … … … … … … … … … … … … …
… … … … … … … … … … … … … … … …
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கட் செல்வம் செல்வம் என் பதுவே”[21]

தோழி தலைவனைப் பார்த்து, தலைவனுடைய ஊரின் பெருமையைப் பேசும்போது அகன்ற நெல் வயலில் அறுவடை முடிந்து மீண்டும் விதை விதைத்து திரும்பும் போது, ஓலைப்பெட்டி நிறைய மீன்களைக் கொண்டு வரும் புதுவருவாயை உடைய ஊரினைச் சார்ந்தவனே. நீ அரசரிடம் பரிசுபெறுதலும், குதிரை, யானை இவற்றின் மீது செல்லுதலை செல்வம் என நினைக்கின்றாய் அதுவல்ல அவையாவும் முன்பு செய்த வினைபயனே ஆகும் என்று தலைவனிடம் வாயிலாகக் கூறுகிறாள்.

**(II) குறுந்தொகையில் வாயில்கள்**

குறுந்தொகை பாடல்களின் அடிவரையறை 4-8 அடிவரை அமைந்துள்ளது. இந்நூல் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாக விளங்குகிறது. உரையாசிரியர்கள் பலராலும் அதிகமாக மேற்கோள் காட்டப்பட்ட நூலாக விளங்குகிறது. குறுந்தொகையில் அமைந்துள்ள 401-பாடல்களையும் 206 புலவர்கள் பாடியுள்ளனர். இந்நூலைத் தொகுத்தவர் பூரிக்கோ ஆவார்.

குறுந்தொகையில் வாயிலுக்குரிய பாடல்கள் 22 பாடல்கள் காணப்படுகின்றன.

**தோழி வாயில் நேர்தல்**

'கயமனார்' எனும் புலவர் பாடிய பாடல் தலைமகனுக்கு தோழி வாயில் நேர்ந்ததாக அமைந்துள்ளது.

"யாய்ஆ கியளே மாஅ யோளே
மடைமான் செப்பில் தமிய வைசிய
பெய்யாப் பூவின் மெய்சா யினளே
பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
… … … … … … … … … … … … … … … …
… … … … … … … … … … … … … … … …
தண்ணம் துறைவன் கொடுமை
நம்முள் நாணிக் கரப்பா டும்மே"[22]

தலைவன் பரத்தை வீட்டிற்கு செல்லும் செயலை எண்ணி வெட்கப்பட்ட தலைவி மறைத்து பேசுகிறாள். அவளது செயலால் தலைவி உடல் மெலிந்து காணப்படுகிறாள். பரத்தையரின் மீது ஆசைகொண்டு தம்மை பிரிந்த தலைவன் மீது மிகுந்த கோபம் கொண்டிருந்த தலைவி, தோழி உள்ளிட்டோரின் வேண்டுகோளை ஏற்று தலைவனை தன்னுடன் சேர்த்துக் கொள்கிறாள். இத்தகைய பொறுமையுடைய மானமறிவும் பொருந்திய தலைவி தாய் போல் மதிக்கத் தக்கவள் என்று தோழி குறிப்பிடுகிறாள்.

'தும்பிசேர்கீரன்' எனும் புலவர் பாடிய,

"தச்சன் செய்த சிறுமா வையம்
ஊர்ந்துஇன் புறாஅர் ஆயினும் கையின்
ஈர்த்துகண் புறூஉம் இளையோர் போல
உற்றுகள் புறோம் ஆயினும் நற்றேர்ப்
பொய்கை ஊரன் கேண்மை
செய்துஇன் புற்றெனவும் செறிந்தன வளையே"[23]

என வரும் பாடல் தோழி தலைமகனுக்கு வாயில் உரைத்ததாக அமைந்துள்ளது.

தலைவியைப் பிரிந்த தலைவன் தன் இல்லத்திற்குத் திரும்பிவர விரும்புகிறான். தன் விருப்பத்தை தலைவியிடம் தெரிவிக்கத் தோழியைக் கூறி அனுப்புகிறான். அப்போது தலைவி தச்சன் செய்த சிறிய கைவண்டியை அதன் மேல் ஏறிச் சென்று மகிழ முடியவில்லை. சிறுவனைப் போல நல்ல தேரினையுடைய நீர்வளம் உள்ள மருதநிலத் தலைவனுடன் இணைந்து இருக்காவிட்டாலும் அவனுடைய நட்பு மட்டுமே தலைவிக்கு போதுமானது. அவள் தலைவனின் பிரிவால் வருந்தாமல் இருக்கிறாள் என்று தோழி கூறுகிறாள்.

**தோழி வாயில் மறுத்தல்**

'வடமவண்ணக்கன் தாமோதரன்' எனும் புலவர் பாடிய பாடலில் தோழி வாயில் மறுத்ததாக அமைந்துள்ளது.

''யாரினும் இனியன் பேர்அன்பினனே
உள்ளூர்க் குரிஇத் துள்ளுநடைச் சேவல்
சூல்முதிர் பேடைக்கு ஈனில் இழைகியர்
தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்
நாறா வெண்டித் தொழுதும்
யாணர் ஊரன் பாணன் வாமே''[24]

தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையோடு வாழ்கிறான். அவள் தன் இல்லத்திற்கு திரும்பிவர விரும்புகிறான். தலைவி கோபமாக இருப்பதை உணர்ந்த தலைவன் பாணன் ஒருவனைத் தூதுவனாக அனுப்புகிறான். அந்த பாணன் தலைவன் மிகவும் இனிமையானவன் என்று அவனது பெருமைகளை

கூறுகிறாள். இதைக் கேட்ட தோழி பாணன் சொல்வதைப் போல் தலைவனின் செயல் இல்லையே என்று தலைவி தலைவனை ஏற்க மறுக்கிறாள்.

தலைவன் வாழும் ஊரின் சிறப்பைக் கூறும்போது அவ்வூரில் இருக்கும் பெண் குருவியின் துணையாகிய ஆண் குருவி துள்ளிக்குதிக்கும் நடையை உடையது. கர்ப்பம் நிறைந்த தன் பெண் குருவிக்குக் கூடு கட்டுவதற்காக தேன் போன்ற இனிமை நிறைந்த தண்டுகளையுடைய கரும்பின் மனமில்லாத பூக்களைக் கோதியெடுக்கும். அத்தகைய ஊரினை உடைய தலைவன் புதுவருவாயை உடையவன் என்று பாணன் கூறுகிறான்.

**வினையே ஆடவருக்கு உயிர்**

இவ்வுலகில் ஆற்றல் மிகு செய்கைகள் அனைத்தும் ஆடவரின் முயற்சி. அதற்கு பின்புலமாக பெண்களே இருக்கின்றனர் என்பது குறுந்தொகை வாயிலாக அறியமுடிகிறது.

‘‘வினையே ஆடவர்க்கு உயிரே வான்நுதல்
மனைஉறை மகளிர்க்கு ஆடவர் உயிர்

நமக்கு உரைத் தோரும் தாமே
அழாஅல் - தோழி! அழுங்குவர் செலவே’’[25]

என்று குறுந்தொகையின் வழியாக காணப்பெறும் இப்பண்பு இன்றும் பொருந்துகிறது. அது உலகம் முழுவதும் உள்ள பொதுமைப் பண்பினைச் சுட்டிக் காட்டுகிறது.

குறுந்தொகையில் உள்ள பாடல்கள் மிகச் சிறந்தவை. சிறிய பாடல்களாக இருந்தாலும் அரிய செய்திகள் மிகுதியாக காணப்பெறுகின்றன.

**கடமை உணர்வு**

மனித வாழ்வு சிறப்புற்று வாழ்வதற்கு அக்கால மக்களின் கடமை தவறாமையும் ஒரு பண்பாக இருந்துள்ளது. இதனை,

> “நல்நலம் தொலைய நலம்மிகச் சாஅய்
> இன்உயிர் கழியினும் உரையல் அவர்நமக்கு
> அன்னையும் அத்தனும் அல்லரோ?
> புலவி அஃதுஎவளோ அன்பிலங் கடையோ?”[26]

என்ற பாடலில் தலைவன் பரத்தையிடம் சென்று மீண்டபொழுது அவனது தகாது ஒழுக்கத்தினைத் தலைவியால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அதே சமயம் அவளைப் புறந்தள்ளி அவனுக்குரிய சேவைகளைச் செய்யாமல் இருக்கவும் முடியவில்லை. தன் கடமையை உணர்ந்து தோழியிடம் அவர் நம்மால் உபசரித்து வழிபடற்குரியவரே அன்றி அளவளாவி மகிழ்வதற்குரியவர் அல்லர் என்று தன் மனநிலையை வெளிப்படுத்துகிறாள் தலைவி. தன் கடமை தவறாத பண்பாட்டுப் பெட்டகமாகத் தலைவி இருப்பதை மேற்கண்ட மூலம் அறிய முடிகிறது.

**தலைவியின் புலம்பல்**

தலைவனைப் பிரிந்த தலைவிக்கு இரவில் உறக்கம் வரவில்லை. ஊராரோ நன்கு உறங்குகின்றனர். இதைக்கண்ட தலைவி ‘ஊரார்க்கு என் நிலையை எப்படி அறிவிப்பேன், முட்டுவேனோ, தாக்குவேனோ ஏதேனும் ஒரு காரணம் முன்னிட்டுக் கூவுவேனோ’ என்று பலவாறு புலம்புகிறாள். இதனை,

> “முட்டுவேன்கொல்? தாக்குவேன்கொல்?
> ஒரேன் யானும் ஓர்பெற்றி மேலிட்டு

ஆஅ! ஒல் எனக் கூவுவேன் கொல்?
அலமரல் அசைவளி அலைப்ப, என்
உயவுநோய் அறியாது துஞ்சும் ஊர்க்கே''[27]

என்று எடுத்துரைக்கிறார் ஔவையார். இவ்வாறு, தலைவனைப் பிரிந்து தலைவி படுந்துன்பம் அனைத்து குடும்பத் தலைவியருக்கும் பொதுவான அனுபவமே ஆகும். இந்த உணர்ச்சி ஒரு தலைவிக்கே உரியதாக இருக்கும்படி பெயர் சுட்டிப்பாடப்படவில்லை. அதனால் தலைவனைப் பிரிந்த தலைவியர் அனைவருக்கும் இப்பாடல் உணர்த்தும் உணர்வு பொதுவானது என்று எண்ண வைக்கும் பொதுமைத் தன்மையை அடைகிறது.

**தலைவியின் இரக்கம்**

'நெடும்பல்லியத்தன்' எனும் புலவர் பாடிய பாடல் தலைவன் நாட்டுப் பெருமையினை தலைவி, தோழிக்கு எடுத்துரைக்கிறாள். இதனை,

''மலைஇடை யிட்ட நாட்டரும் அல்லர்
மரந்தலை தோன்றா ஊரரும் அல்லர்
கண்ணின் காண நண்ணுவழி இருந்தும்
கடவுள் நண்ணிய பாலோர் போல
ஒரீஇனன் ஒழுகும் என்னைக்குப்
பரியலென் மன்யான், பண்டுஒரு காலே''[28]

எனவரும் பாடலில் தலைவி தோழியிடம், தலைவன் பரத்தையோடு வாழ்கிறான். அவள் செய்த தவறை அவன் உணர்கிறான். ஆனால், அவனுக்குத் தலைவியைச் சந்தித்துத் தன்னை ஏற்றுக்கொள்ளுமாறு கேட்பதற்குத் துணிவில்லை. எனவே, அவன் தலைவி இருக்கும் இடத்திற்கு அருகிலேயே இருந்தாலும் அவளைக் காண்பதைத் தவிர்க்கிறான். நான்

முன்பெல்லாம் என் கணவன் மீது அன்புடையவளாக இருந்தேன். இப்போழுது அந்த அன்பு மறைந்துவிட்டது என்று தோழியிடம் கூறுகிறாள்.

**(III) ஐங்குறுநூற்றில் வாயில்கள்**

ஐங்குறுநூற்றில் ஒவ்வொரு திணைக்கும் நூறு பாடல்கள் என ஐந்நூறு பாடல்களைக் கொண்டது. இந்தப் பாடல்கள் அனைத்தும் குறுகிய பாடல்கள், மூன்றடி முதல் ஆறடி வரையில் அமைந்தவை. ஒவ்வொரு நூறும் பத்துப் பத்துப் பகுதிகளாக பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு பத்திலும் பத்துப்பத்துப் பாடல்கள் எட்டுத்தொகை நூல்களைச் சேர்ந்த அகப்பொருள் பற்றிய இலக்கியங்களிலே ஐங்குறுநூறு மிகவும் அழகான பாடல்களைக் கொண்டது. சிறிய பாடல்கள், அரிய இலக்கியச் சுவை, படிப்பதற்கு இனிமை, எளிதில் பொருள் விளங்கக் கூடிய வகையில் ஐங்குறுநூற்றுப் பாடல்கள் திகழ்கின்றன.

மருதத்திணையில் 'ஓரம்போகியார்' பாடிய பாடலில் தோழி வாயிலாய் இடம் பெறுகிறாள்.

தலைவன் தலைவிக்கு மட்டும் கொடுமை செய்யவில்லை. அவன் மீது காதல் கொண்ட அனைத்துப் பெண்களையும் கைவிடுவதே அவன் இயல்பாகும் என்று தோழி கூறுகிறாள். இதனை,

> ‘‘தாய்சாப் பிறக்கும் புள்ளிக் களவனொடு
> பிள்ளை தின்னும் முதலைத்து அவன்ஊர்
> எய்தினன் ஆகின்றுகொல்லோ? மகிழ்நன்
> பொலந்தொடி தெளிர்ப்ப முயங்கியவர்
> நலம்கொண்டு துறப்பது எவன்கொல்? அன்னாய்!’’[29]

என வரும் பாடலில், நண்டு தனது குஞ்சுகளை ஈன்ற உடன் இறந்துவிடும். முதலையானது தான் ஈன்ற பிள்ளையையே தின்னும் தன்மை உடையது. இத்தகைய ஊரினை உடைய நம் தலைவன், நம் வளைகள் ஒலிக்க நம்முடன் இணைந்தான். இப்போது நம் நலம் நுகர்ந்த பின்பு நம்மை விட்டுப் பிரிந்து செல்கிறான் என்றும் நண்டு மற்றும் முதலை போன்ற விலங்குப் பண்புகளை நம் தலைவன் கொண்டுள்ளானோ என்று கூறுகிறாள் தோழி.

**தலைவி தோழிக்குக் கூறியது**

வாயில்கள் தலைவனின் குணமாக கூறியதை கேட்ட தலைவி தன் மேனி பசலையுற்ற காரணத்தை தோழிக்குக் கூறுகிறாள். இதனை,

> ‘‘அம்மவாழி தோழி! நம்ஊர்ப்
> பொய்கை ஆம்பல் நார்உரி மென்கால்
> நிறத்தினும் நிழற்றுதல் மன்னே
> இனிப் பசந்தன்றுஎன் மாமைக் கவினே’’[30]

தலைவி தன் மேனியழகினை தோழியிடம், என் மேனியழகு நம் ஊர்க்குளத்தில் வளர்ந்த ஆம்பல் தண்டு நார் உரிக்கப்பட்ட தோற்றத்தினைவிட ஒளியுடையதாக இருந்தது. இப்போது தலைவன் பிரிவால் மேனி பசலையுற்று காணப்படுகிறது என்று கூறுகிறாள் தலைவி.

**அன்னையின் அன்பு**

பெண் ஒருவள் களவு மனத்தில் ஈடுபட்டிருந்தாள். அவள் தன் காதலனுடன் புறப்பட்டு உடன்போக்கில் செல்ல இச்செய்தியை அறிந்த அவள் தாய் வருந்தினாள். ஆயினும், அவள் மகளுடைய செய்கையை வெறுக்கவில்லை. அவளை பாராட்டுகிறாள். இதனை,

“மள்ளர் கொட்டின் மஞ்ஞை ஆலும்
உயர்நெடும் குன்றம் படுமதை தலைஇச்
சுரம்நனி இனிய ஆகுக தில்ல
அறாநறி இது எனத் தெளிந்த என்
பிறை நுதற் குறுமகள் போகிய சுரனே”[31]

இப்பாடலில் உழவர்கள் அடிக்கின்ற பறைக்குத் தக்கவாறு மயில்கள் ஆடுகின்றன. உயர்ந்த பெரிய மலையிலே படிந்திருக்கின்ற மேகங்கள் புறப்பட்டு மழையைப் பெய்யட்டும். அந்தப் பாலைவனம் இனிய குளிர்ந்த வழியாக மாறட்டும். இதுதான் அறநெறி என்று தேர்ந்த எனது பிறை போன்ற நெற்றியையுடைய சிறுமி சென்ற பாலைவனம் இவ்வாறு இனியதாகுக என்று அன்னை உரைக்கின்றாள். இதன்வழி, அக்காலத்தில் கருத்தொருமித்த காதலர்கள் இருவர் தாங்கள் விருப்பப்படி மணம்புரிந்து கொண்டதையும், இத்தகைய மணத்தை அக்காலத்து மக்கள் ஆதரித்து வந்தமையும் அறிய முடிகிறது. மூலமாக அன்னையின் அன்பு வெளிப்படுகிறது. இப்பாடலில் நாம் ஒரு பொதுத்தன்மையை காணமுடிகிறது.

**வாயில் வேண்டிய தோழிக்குத் தலைவி வாயில் மறுத்தல்**

நெய்தல் திணையில் ‘அம்மூவனார்’ பாடிய

“வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
மிதிப்ப நக்க கண்போல் நெய்தல்
கள்கமழ்பு ஆனாத் துறைவற்கு
நெக்க நெஞ்சம் நேர் கல்லேனே”[32]

‘வெள்ளாங்குருகுபத்து’ என்னும் பகுதியில் ‘வெள்ளாங்குருகு’ என்னும் பறவையைப் பற்றிய செய்திகள் இதில் வரும் பத்துப்பாடல்களிலும் கூறப்பட்டுள்ளன. வெள்ளாங்குருகு என்னும் பறவை நீர்ப்பறவை இனத்தைச் சார்ந்தது.

இப்பாடலில் வரும் வெள்ளாங்குருகு என்பது பரத்தையாகவும், பிள்ளை என்பது தலைவனின் ஒழுக்கமாகவும், மடநாரை என்பது தூது போகும் வாயில்களாகவும் இப்பாடலில் இடம்பெறுகின்றன.

நாரையானது வெள்ளாங்குருகின் குஞ்சினைத் தன் குஞ்ஞென நினைத்து அந்த நாரை போகும் போது தன் காலால் நெய்தல் மலரை மிதித்ததால் நெய்தல் பூ மலர்ந்ததாகக் கூறப்படுகிறது. அம்மலரிலிருந்து தேன் வந்ததாகவும் கூறப்படுகிறது. அவ்வாறு இடத்தினைத் சேர்ந்த தலைவன் என்று தலைவி வாயில் மறுக்கிறாள்.

தலைவன் அனுப்பிய தூதுக்கு தலைவி உடன்படவில்லை. நாரையின் செயல் எப்படி உள்ளதோ அதனைப்போல தலைவன் இருக்கின்றான் என்று இலைமறை காயாக குறிப்பிடுகிறாள்.

**வாயில் வேண்டும் தலைவனுக்கு தோழி கூறியது**

நெய்தல் திணையில் ‘அம்மூவனா்’ பாடிய,

“வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
ஊர ஒழிந்த தூவி குவுவுமணல்
போர்வில் பெறூஉம் துறைவன் கேண்மை
நன்னெடும் கூந்தல் நாடுமோ மற்றே”[33]

என வரும் பாடலில், உள்ளான் குருவியின் குஞ்சு இறந்ததாகச் சென்ற அதன் தாய்க்கு நாரை தன் அலகினால் கோதிய போது உதிர்ந்த இறகுகள் நிறைந்த மணல் குன்றுகளிடத்தே குவிந்து கிடக்கும். அதனை மக்கள் பெறத்தக்க துறைவனது உறவை நீண்ட கூந்தலுடைய என் தலைவி விரும்புவாளோ? என்று தோழி கேட்கிறாள்.

**பாங்கன் - தலைவன் நட்பு**

தலைவனுக்கு உதவி செய்பவன் பாங்கன் ஆவான். தலைவனின் உடல், மனம் போன்றவற்றில் வேறுபாடு கண்டு அதற்கான காரணத்தைக் கேட்க, மலர்களையுடைய மலையில் வாழும் குறவன் மகள் அரும்பிய முலையள், கணங்கு மார்பினள், செய்யவாயினள் என்பதனை,

"குன்றக் குறவன் காதல் மடமகள்
வரையர மகளிர்ப் புரையும் சாயள்
ஐயள் அரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் கணங்கே"[34]

என்ற பாடலால் நலம் பாராட்டியதைக் காணமுடிகிறது.

**தினைப்பயிர்களைக் காத்தல்**

குறிஞ்சித்திணையில் 'கபிலர்' பாடிய,

"வன்கண் கானவன் மென்சொல் மடமகள்
புன்புல மையக்கத்து உழுத ஏனலட்
னம்புறச் சிறுகிள கடியம் நாட
பெரிய கூறி நீப்பினும்
பொய்வலைப் படுஉம் பெண்டுதவப் பலவே"[35]

எனவரும் பாடலில் தோழி வாயில் மறுப்பதாக அமைந்துள்ளது.

தினைப்பயிர்களைக் காவல் செய்யும் தலைவி மிகவும் மென்மையான தன்மை உடையவள். தலைவன் கிளிகள் வாழும் நாட்டினைச் சேர்ந்தவன். அவன் தன் விருப்பத்தின் காரணமாகத் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றாள். பிரிந்து சென்ற தலைவன் மீண்டும் வந்து தலைவியோடு சேர நினைக்கின்றாள். தலைவியும் தலைவனை ஏற்றுக்கொள்கின்றாள். இதனால் பலரும் தலைவனைத் தவறாகப் பேசினர். தலைவியிடம் தலைவனோடு பேசி மகிழாதே என்று சுற்றத்தினர் தலைவிக்கு கூறுகின்றனர்.

தினைப் பயிர்கள் முற்றியமையால் அறுவடை முடிந்தது. இதனால் தலைவி காவலுக்கு வரவில்லை. தினந்தோறும் தலைவியைப் பார்க்கும் தலைவன் மீண்டும் தலைவியைப் பார்ப்பதற்காக வந்துள்ளான். தினைப்பயிர்கள் அறுவடை முடிந்தமையால் கிளிகளே இங்கு வரவேண்டாம் என்று கிளிகளுக்குக் கூறுவது போல் தலைவனுக்கு மறுத்துக் கூறுகிறாள்.

### (iv) கலித்தொகையில் வாயில்கள்

கலித்தொகையில் கடவுள் வாழ்த்து உட்பட 150-பாடல்களைக் கொண்டுள்ளது. மற்ற சங்க இலக்கியங்களைவிட மாறுபட்ட பொருண்மைக் கொண்டது. ‘கற்றறிந்தார் ஏத்தும் கலி’ என்ற அடைமொழியோடு சுட்டப்படுகிறது. இசையுடன் பாடும் இலக்கியங்களுள் கலித்தொகையும் ஒன்று. கலி என்ற யாப்பினால் கலித்தொகை எனப் பெயர் பெற்றது. தலைவன், தலைவி, தோழி இவர்களுக்கு இடையே உரையாடலாக அமைந்த கூற்றுகள் கலித்தொகையில் காணப்படுகின்றன. உலகில உள்ள மக்கள் அனைவரிடமும் காணப்படும் வழக்கு நாடக வழக்கு இந்த நாடக வழக்கிலேயே பாடப்பட்டுள்ளது. கலித்தொகையின் பாடலடிகள் 11 அடி முதல் 80 அடி வரை காணப்படுகின்றன.

| | திணை | பாடியவர் | பாடல்கள் |
|---|---|---|---|
| 1. | பாலை | பெருங்கடுங்கோ | 35 |
| 2. | குறிஞ்சி | கபிலர் | 29 |
| 3. | மருதம் | இளநாகனார் | 35 |
| 4. | முல்லை | சோழன் நல்லுருத்திரன் | 17 |
| 5. | நெய்தல் | நல்லந்துவனார் | 34 |

என முறைப்படுத்தி வைக்கப்பட்டுள்ளது.

பண்டைய மக்களின் தொன்மையான வாழ்க்கைக் கூறுகள் அனைத்தும் கலித்தொகையில் காணப்படுகின்றன.

**வாழ்க்கை நெறிமுறைகள்**

உலகில் உள்ள அனைத்து மனிதருக்கும் பொருந்தும் பொதுவான பண்புகளைக் கலித்தொலையில் காணமுடிகிறது.

> ''ஆற்றுதல் என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்
> போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை
> பண்பு எனப்படுவது தன்கிளை செறாமை
> அறாவு எனப்படுவது பேதையர் சொல் நோன்றல்
> … … … … … … … … … … … … … … … … … …
> … … … … … … … … … … … … … … … … … …
> முறை எனப்படுவது கண்ணோடாது உயிர்வெளவல்
> பொறை எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்''[36]

என்ற பாடலில் ஆற்றுதல், போற்றுதல், பண்பு, அன்பு, செறிவு, நிறைவு, முறை, பொறை போன்றவை உலக மக்கள் அனைவரும் வாழ்க்கைபால் பின்பற்ற வேண்டிய பொது நெறிமுறைகள் பற்றி கூறப்படுகின்றன.

**பகுத்தறிவு கொண்ட தோழி**

கலித்தொகையில் தலைவன், தலைவியைக் காட்டிலும் தோழி பகுத்தறிவு கொண்டவளாக திகழ்கிறாள் தலைவி. தலைவியின் மனதில் ஐயம் ஏற்படுகின்றது. தலைவன் மணம் செய்து கொள்வானா? என்று சந்தேகம் வருகின்றது. அதை நினைத்து வருந்துகின்றாள். அப்போது தோழி தலைவிக்கு எழுந்துள்ள ஐயத்தைப் போக்குபவளாக இருந்துள்ள திறத்தினைப் பின்வரும் பாடலின் வழி அறியமுடிகிறது. இதனை,

> “ஆயர்மகன் ஆயின், ஆயமகள் நீ ஆயின்
> நின் வெய்யன் ஆயின், அவள் வெய்யை நீ ஆயின்
> நின்னை நோதக்கதோ இல்லைமன் - நின்நெஞ்சம்
> அன்னை நெஞ்சு, ஆகப்பெறின்
> … … … … … … … … … … … … … … … … … …
> … … … … … … … … … … … … … … … … … …
> நீ உற்ற நோய்க்கு மருந்து”[37]

என்ற பாடலில், தோழி நீயும் ஆயர்மகள் அவனும் ஆயர்மகன். அதுமட்டுமில்லாமல் உன் தமர் உன்னை அந்த ஆய மகனுக்கு மணம் முடிப்பர் என்று பகுத்தறிந்து சொல்லிருக்கின்ற விதம் எண்ணத்தக்கது. இவ்வாறு தோழி பகுத்தறிவு கொண்டவளாக திகழ்கிறாள்.

**பெண் மகளின் இயல்பு**

மகள் தன் காதலனுடன் சென்றுவிட்டதை அறிந்த கலங்கி வருந்துகின்றாள். அவளுக்கு ஆறுதல் கூறும் வண்ணம் ஒரு பாடலில் காணப்படுகிறது. சந்தனம் மலையில் பிறக்கிறது. ஆனால் மலைக்கு பயன்படுவதில்லை. அதனை பூசிக் கொள்பவர்க்கே பயன்படுகிறது. முத்து

கடல் நீரில் பிறக்கின்றது. ஆனால், அது கடலுக்குப் பயன்படாது. அணிபவர்க்கே பயன்படுகிறது. இசை யாழிலே பிறக்கின்றது. அது யாழுக்கு பயன்படாது. கேட்பவருக்கே பயன்படுகிறது. இது போல் உன் மகளும் தலைவனுக்கே உரியவள் என்று உணர்த்தும் பாட்டு குறிப்பிடத்தக்கதாகும். இதனை,

பலஉறு நறுஞ்சாந்தம் படிப்பவர்க்கே அல்லாத
மலையுளே பிறப்பினும், மலைக்கு அவை தாம் என் செய்யும்?
நினையுங்கால், நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே
சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க்கு அல்லாத
நீருளே பிறப்பினும், நீர்க்கு அவைதாம் என் செய்யும்?
தேருங்கால், நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே
… … … … … … … … … … … … … … … … … … … …
… … … … … … … … … … … … … … … … … … … …
சூழுங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே''[38]

என்ற பாடல் மேற்கூறிய கருத்தை விளக்கி நிற்கிறது. மேலும், இப்பாடல் பெண் ஆனவள் பருவமடைந்து மணமுடிந்தவுடன் பெற்றோரின்றி தான் மணந்த தலைவனுக்கே முற்றிலும் உரிமையானவள் என்ற வாழ்வியலின் இயற்கையான தன்மையை எடுத்தியம்புகிறது.

**கற்புடை மகளிர்**

பெண்களின் கற்பு பற்றி கலித்தொகைப் பாடல்கள் மிகுதியாகக் காணப்படுகிறது. பெண்கள் மட்டும்தான் ஆடவர்களை மணந்து கொண்டு கற்புடையவர்களாய் வாழவேண்டும். ஆண்களுக்கு எந்த ஒரு கட்டுப்பாடும் இல்லை. பெண்களே மிகவும் கற்போடு வாழ்ந்தனர். இதனை,

''வடமீன்போல் தொழுதுஏத்த வயங்கிய கற்பினாள்''[39]

அருந்தியைப் போல எல்லோரும் தொழுது போற்றும்படி விளங்குகின்ற கற்பினையுடையவன் என்று கூறப்பட்டுள்ளது. பெண்களின் கற்பு பற்றி,

‘‘… … … … … … என் தோழி
அருமழை தரல் வேண்டின் தருகிற்கும் பெருமையனே’’[40]

எனவரும் பாடலில் என் தோழியின் இடம் அரிய மழையைத் தருவிக்கும்படி வேண்டிக்கொண்டாள் அதைப் பெய்யும்படிச் செய்யும் பெருமையுடையவள். இதனை,

‘‘தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை’’[41]

என்ற குறளில் வள்ளுவர் பெண்களின் கற்பினைப் பற்றிக் கூறுகிறார். மேலும், கற்புடைய பெண் வேண்டினாள் மழை பெய்யும் என்பதனை,

‘‘விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்
அருநெறி ஆயர் மகளிர்க்கு
இருமணம் கூடுதல் இல் இயல்பு அன்றே’’[42]

இவ்வுலகமே பரிசாகக் கிடைத்தாலும் சிறந்த ஒழுக்கத்தையுடைய ஆயர்குலப் பெண்கள் முதலில் விரும்பிய கணவனைக் கைவிட்டு மற்றொரு மணத்தலாகிய செயலைச் செய்யமாட்டார்கள்.

**தோழி தலைவிக்கு ஆறுதல் கூறுதல்**

பொருள் ஈட்டுவதற்காகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றிருக்கிறான். தன்னை விட்டுப் பிரிந்த தன் காதலன் தன்னை நினைத்துக் கொண்டிருப்பானோ அல்லது மறந்திருப்பானோ என்று தலைவி வருந்துகிறாள். அவர் சென்ற வழியில் ஆண் பல்லி தன் துணையாகிய

பெண் பல்லியை அழைப்பதைக் கேட்டவுடன் அவருக்கு உன் நினைவு வரும். அவர் விரைவில் மீண்டும் உன்னிடம் வருவார் என்று தலைவிக்குத் தோழி ஆறுதல் கூறுகிறாள். இதனை,

''உள்ளார் கொல்லோ தோழி கள்வர்
பொன்புனை பகழி செப்பங் கொண்மார்
உகிர்றுதி புரட்டும் ஓசைபோலச்
செங்காற் பல்லி தன்றுணை பயிரும்
அங்காற் கள்ளியங் காடிறந்தாரே''[43]

எனவரும் பாலைக்கலி பாடல்வழி அறிய முடிகிறது. மேலும் இப்பாடலில் ஆண் பல்லி தன் துணையாகிய பெண் பல்லியை அழைக்கும் பாலை நிலத்தில் செல்பவர் அது கேட்டுத் தன் காதலியை நினைவு கொள்வார் என்பது இங்கு உள்ளுறை உவமமாக வந்துள்ளது.

**தலைவன் தலைவி - ஊடல்**

தலைவனுக்கும் தலைவிக்கும் ஊடல் ஏற்பட்டுவிட்டது. காதலில் உடல் ஏற்படுவது இயல்புதான். ஆனால், அவ்வூடல் நீட்டிக்கக்கூடாது. உணவிற்கு உப்பு எப்படியோ? அதுபோலதான் ஊடலும் இருக்க வேண்டும். ஊடல் அதிகம் இருக்கக் கூடாது என்று தலைவியிடம் தோழி கூறுகிறாள். அதனை ஏற்றுத் தலைவி ஊடலைவிட்டு தலைவனிடம் பேசுகிறாள். இதனை,

''மான் நூக்கி நீ கூடி நீத்தவன் ஆனாது
நாணிலன் ஆயின் நலிந்து அவன் வயின்
ஊடுதல் என்னே அனி
இனியாதும் மீக்கூறட்றம் யாம் இலம் என்னும்
தகையது கண்டைப்பாய் நெஞ்சே பனி ஆனாப்
பாடு இல் கண் பாயல் கொள''[44]

எனவரும் பாடலில் தலைவனுக்கும் தலைவிக்கும் இருக்கும் ஊடலைத் தீர்த்து வைக்கும் அன்பு பாலமாகத் தோழி இருந்து வருவதைக் காணமுடிகிறது. அது தோழியின் பண்புகளில் உயர்ந்த நிலையாக அமைந்துள்ளது.

**நெய்தற் கலியில் - தலைவி**

நெய்தற் கலியில் தலைவியின் காதல் நோய் அதிகமாகப் பேசப்பட்டுள்ளது. இதனால் தலைவியின் மன நிகழ்வுகளைக் காணமுடிகிறது. மாலை நேரம் வந்துவிட்டதால் காதலருடன் கூடியிருக்கும் மங்கைக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. என்னைப் போன்ற மகளிருக்கு வருத்தத்தை தருகிறது. எனவே, மாலை நேரமே இனி தலைவன் இல்லாத போது வராதே என்று தலைவி கூறுகிறாள். தலைவன் வந்த மகிழ்ச்சியை பின்வரும் பாடல் எடுத்தியம்புகிறது.

"இடன் இன்று அலைத்தரும் இன்னா செய்மாலை
துனிகொள் துயர் தீரக் காதலர் துணைதர
மெல்லியான் பருவத்து மேல் நின்று கடும் பகை
ஒல்லென நீக்கி ஒருவாது காத்து ஆற்றும்
நல்அறை தோன்ற கெட்டாங்கு
இல்லாகின்றால் இருளகத்து ஒளித்தே"[45]

என வரும் பாடல்மூலம் தலைவனது வருகையால் தலைவி மகிழ்கிறாள் என்பது காணமுடிகிறது.

**அகநானூற்றில் வாயில்கள்**

அகப்பொருள் பற்றி 400 பாடல்களைக் கொண்டு விளங்குகிறது. இந்நூலிற்கு 'நெடுந்தொகை' என்ற மற்றொரு பெயரும் உண்டு. அகநானூற்றின் பாடலடிகள் 13-31 அடிவரை காணப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| பாலை | - | 200 |
| குறிஞ்சி | - | 80 |
| மருதம் | - | 40 |
| முல்லை | - | 40 |
| நெய்தல் | - | 40 |

என்ற நிலையில் பகுக்கப்பட்டுள்ளன.

மேலும் அகநானூற்றில் வரும் ஒற்றை எண்ணுள்ள பாடல்கள் (1, 3, 5, 7, 9) பாலை என்றும், 2, 8 என வரும் பாடல்கள் குறிஞ்சி என்றும், 4, 14 என வரும் பாடல்கள் முல்லை என்றும், 6, 16 என வரும் பாடல்கள் மருதம் என்றும், 10, 20 என வரும் பாடல்கள் நெய்தல் திணையைச் சார்ந்தவையாகவும் அமைந்துள்ளன.

அகநானூற்றின் மூன்று பெரும் பிரிவுகளாக, களிற்றியானை நிரை, மணிமிடைவளம், நித்திலக்கோவை என்ற பிரிவுகள் இருக்கின்றன. இந்நூலினை தொகுத்தவர் உருத்திரகன்மர் ஆவார். தொகுப்பித்தவர் உக்கிரப்பெருவழுதி ஆவார்.

அகநானூற்றின் வாயில் குறித்த பாடல்கள் பதினெட்டு (18) பாடல்கள் காணப்படுகின்றன.

மருதத்திணையில் ‘உக்கிரப் பெருவழுதி’ என்னும் புலவர் பாடிய பாடல் வாயில் பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது. அவை,

“கூன்முள் முள்ளிக் குவிகுலைக் கழன்ற
மீன்முள் அன்ன வெண்கால் மாமலர்
பொய்தல் மகளிர் விழவுஅணிக் கூட்டும்

அவ்வயல் நண்ணிய வளங்கேழ் ஊரனைப்

… … … … … … … … … … … … … … … … … …

… … … … … … … … … … … … … … … … … …

தண்துளிக்கு ஏற்ற பலஉழு செய்செய்

மண்போல் நெகிழ்ந்து அவற் கலுழ்ந்தே

நெஞ்சுஅறை போகிய அறவி னேற்கே”[46]

என வரும் பாடலில், தலைமகன் தோழியை வாயில் வேண்டி, அவளால் தான் வாயில் பெறாது, ஆற்றாமையே வாயிலாக புகக்கூடிய செய்தியை இப்பாடலில் காணமுடிகிறது.

தலைவனது ஊரானது முள்ளிச் செடியின் குவிந்த குலைகளில் இருந்து வீழ்ந்த வெண்மையான காம்பினை உடைய கரிய மலர்களை விளையாட்டு மகளிர் தாம் செய்யும் விழாவிற்கு மேலும் அழகு செய்வனவாக அழகிய வயல்கள் காணப்படுகின்றன.

தலைவி புதல்வனைப் பெற்ற பின்பு தேமல் படர்ந்த மார்பில் உள்ள பால் அவர் சந்தணிந்த மார்பில் படும் எனக்கருதி இணைவதற்கு அஞ்சினர். அப்போது செவிலி கையில் இருந்த புதல்வனை நோக்கி இவன் தான் என் அன்புக்குரியவன் என்று மறைமுகமாக வாயில் நேர்கிறாள் தலைவி.

**தோழி வாயில் மறுத்தல்**

‘அள்ளூர் நன்முல்லையார்’ என்னும் புலவர் பாடிய பாடலில் வாயில் வேண்டிச் சென்ற தலைமகனுக்கு தோழி வாயில் மறுக்கிறாள். இதனை,

“சேற்றுநிலை முனைஇய செங்கண் காரான்

ஊர்மடி கங்குலில் நோன்தனை பரிந்து

கூர்முள்வேலி கோட்டின் நீக்கி

நீர்முதிர் பழனத்து மீன்உடன் கரிய
அம்தூம்பு வள்ளை மயக்கி தாமரை
… … … … … … … … … … … … …
… … … … … … … … … … … … …
ஒளிறுவாள் தானைக் கொற்றைச் செழியன்
பிண்ட நெல்லின் அள்ளூர் அன்னஎன்
ஒண்தொடி நெகிழினும் நெகிழ்க
சென்றீ பெரும! நின் தகைக்குநர் யாரோ?"[47]

எனவரும் பாடலில், தலைவனின் ஊரின் சிறப்பு பேசப்படுகிறது. மருத நிலத்தில் உள்ள வயலில் மீன்கள் அஞ்சி ஓடுமாறு எருமைகள் கட்டை அவிழ்த்துக்கொண்டு செல்கின்ற ஊரினை உடைய தலைவனே, உன்னோடு மாறுபட்டுப் பேசுவதற்கு நீ என்ன உறவு?

போரில் யானைகளைக் கொல்லும் ஒளிமிக்க வாள் படையுடன் விளங்கும் செழியனது நெற்குவியல் நிறைந்த அள்ளூரைப் போன்ற நம் தலைவியின் வளையல்கள் நெகிழ்ந்தாலும் நெகிழ்க. ஆனால் நீ நினைத்த இடத்திற்கு செல்ல உன்னைத் தடுப்பவர் யார்? என்று தோழி தலைவனுக்கு வாயில் மறுக்கிறாள்.

**இல்லற வாழ்க்கை**

தலைவனும் தலைவியும் களவு வாழ்க்கையிலேயே காலங்கடத்துகின்றனர். கற்பு மணம் புரிந்து வாழும் காதலர்கள் வாழ்விலே என்றும் இன்பத்தென்றல் வீசும். அவர்கள் கருத்தொருமித்து வாழ்ந்து இல்லறத்திற்கு உரிய கடமைகள் அனைத்தும் தவறாது நடத்துவர். கற்கள் நிறைந்த வலிய நிலமாகிய பயனற்ற பாலைவனத்தைக் கடந்து பொருள் தேடச் செல்ல நினைப்பீராயின் அஃது அறமாகாத செயல் என்று சொல்பவனைப் போன்று என் அருகில் வந்து நின்றாள். முகத்தால்

கூறுகின்றவளைப் போல், சித்திரத்தைப் போல உள்ளத்திலே என் பிரிவாகிய அனைத்துக் கொண்டிருந்த புதல்வனுடைய மெல்லிய தலையில் உள்ள நல்ல நீரிலே தோன்றிய, தொடுத்த செங்கழுநீர் மாலையை முகந்து பெருமூச்சுவிட்டாள். அப்பொழுது அச்சிறந்த மலர் தன் அழகிய தோற்றம் இழந்து சிதைந்த நிலையைக் கண்டோம். உடனே தன்னுடைய பொருள்வயிற் பிரிவை நிறுத்தினோம் என்கிறான் தலைவன்.

> “பரல் முரம்பு ஆகியஇல் கானம்
> இறப்பு எண்ணுதிர் ஆயின் - அறத்தாறு
> அன்று என மொழிந்த தொன்றுபடு கிளவி
> அன்ன ஆக என்னுநற் போல
> முன்னம் காட்டி முகத்தின் உரையா
> ஓவச் செய்தியின் ஒன்றுநினைந்து ஒற்றி
> பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொடு
> … … … … … … … … … … … …
> … … … … … … … … … … … …
> மணி உரு இழந்த அணி அழிதோற்றம்
> கண்டே கடிந்தனம் செலவே”[48]

ஒரு தலைவன் தானே தன் நெஞ்சுடன் பேசிக்கொண்டதாக கலிப்பாடல் அமைந்துள்ளது.

**தோழி வாயில் நேர்தல்**

‘மருதம் ஓரம்போகியார்’ பாடிய,

> “துறைமீன் வழங்கும் பெருநீர்ப் பொய்கை
> அரிமலர் ஆம்பல் மேய்ந்த நெறிமருப்பு
> ஈர்ந்தண் எருமைச் சுவல்படு முதுபோத்துத்

